


# கோடிமுனை முதல் ஐ.நா.சபை வரை

தொகுப்பு:

வறீதையா கான்ஸ்தந்தின்




# வறீதையா கான்ஸ்தந்தின் (1959)

பாரம்பரியக் கடலோடி சமூகத்தைச் சேர்ந்த முனைவர் வறீதையா கான்ஸ்தந்தின் (பள்ளம்துறை, கன்னியாகுமரி மாவட்டம்) தூத்தூர் செயின்ட் ஜூட்ஸ் கல்லூரியில் மீன்வளமும் விலங்கியலும் பயிற்றுவித்து, இணைப் பேராசிரியர் – துறைத் தலைவராகப் பணிநிறைவு பெற்றவர் (1982–2018). இந்தியக் கடற்கரை நெடுகப் பயணித்துள்ள இவர், சாதி– சமய, அரசியல் மாச்சரியங்களைக் கடந்து தமிழக நெய்தல் நிலத்தின் குரலைப் பதிந்து வருகிறார். 2004 ஆழிப் பேரிடருக்குப் பிறகு கடல்வெளி, நெய்தல்வெளி பதிப்பகங்களை நிறுவி, கடற்கரைப் படைப்பாளிகளின் நாற்பது நூல்களையும் 'ஒயவு' என்னும் குறும்படத்தையும் வெளியிட்டுள்ளார்.

'கையறுநதி', 'பெருந்துறை வலசை', 'பழவேற்காடு முதல் நீரோடிவரை', 'கடலம்மா பேசுறங் கண்ணு!', 'கன்னியாகுமரி முக்குவர்', 'கடல் பழகுதல்', 'திணைவெளி', கடலாறு (புதினம்) போன்றவை இவரது முக்கியமான படைப்புகள்.

'சிறந்த கட்டுரை நூல்'–விகடன் (2015), 'சிறந்த எழுத்தாளர்' மமா ஆதா (2016), 'பெரும் பங்களிப்பாளர்' மக்கள் பாராளுமன்றம் (2017), 'தேசிய உயர் கல்வியாளர்' அயாச்சே (புது தில்லி) (2009) ஆகிய விருதுகளையும், அமுதன் அடிகள் இலக்கியப் பரிசையும் (2016) பெற்றுள்ளார்.

இணையர்: ஜெசிந்தா; மகள்கள்: ஆட்லின் பெத் நான்சி, ஒஷீன் லாரா; பெயரர்கள்: டாரில், ரெய்னெல்.

# கோடிமுனை முதல் ஐ.நா.சபை வரை

(அடித்தள மக்கள் குழுவாக்கம்- ஒரு மீள்பார்வை)

தொகுப்பு:

**வறீதையா கான்ஸ்தந்தின்**






**கோடிமுனை முதல் ஐ.நா.சபை வரை**
**தொகுப்பாசிரியர்:** © வறீதையா கான்ஸ்தந்தின்
**வகைமை:** நெய்தல் வாழ்வியல்
**அச்சு & மின்பதிப்பு (கிண்டில்) :**
அக்டோபர், 2022
**பதிப்பகம்:** கடல்வெளி, #23/53, ஜனனி,
கே.ஆர்.புரம் (மேற்கு), தூத்தூர்- 629176,
கன்னியாகுமரி மாவட்டம், தமிழ்நாடு.
**பிரதிகளுக்கு:** புலனம்: 9442242629
**மின்னஞ்சல்:** *katalveli22@gmail.com*

**Koodimunai mudhal ai.naa.sabai varai**
Language: Tamil
**Editor:** © Vareethiah Konstantine
**Genre:** Maritime life
Paperback & Digital (Kindle) Editions:
October, 2022.
**Publisher:** Kadalveli, #23/53, Janani,
K.R.Puram (west), Thuthur- 629176,
Kanniyakumari District, T.N.
**Blogger:** *www.vareethiah.blogspot.com*
For Copies: WhatsApp +91-9442242629
**E-mail:** *katalveli2022@gmail.com*

ISBN: 9788194386544

அடித்தள மக்கள் அரசியலாக்கத்தின்
வகைமாதிரியை உலகுக்குக் கற்றுக்கொடுத்த
கோடிமுனை மக்களுக்கு

# உள்ளடக்கம்

# தொகுப்புரை

ஆய்வின் பொருட்டு தமிழக, புதுவைக் கடற்கரை நெடுகப் பயணித்து மீனவர்களைச் சந்தித்து உரையாடிய காலங்களில் என் ஆர்வத்தைக் கிளறிய விசயங்களில் ஒன்று கடற்கரைச் சமூகங்களில் நிலவும் அதிகாரக் கட்டுமானம். உள்ளூர்ச் சமூகங்களில் அதிகாரத்தின் சாட்டை யார் கையில் இருக்கிறது, குறிப்பிட்ட தரப்பு அதை எப்படிக் கைப்பற்றித் தக்க வைத்திருக்கிறது என்பதைக் கூர்ந்து கவனித்தால் ஒரு உண்மையைப் புரிந்துகொள்ள முடியும். சமூகத்தின் பொருளாதாரத்தையும் அரசியலையும் சாதியும் சமயமும் கைகோத்துக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கிறது. சமூகத்தின் ஒவ்வொரு அசைவையும் தனது மோப்ப உறுப்புகளால் அது கண்காணித்துக் கொண்டிருக்கிறது. அதிகாரப் படிநிலைகளில் மாற்றம் நிகழ்வதற்கான சிறு வாய்ப்பைக்கூட முளையிலே கிள்ளியெறிவதற்கு ஏதுவாகத் தன் அதிகாரக் கொடுக்குகளைக் கூர்தீட்டி வைத்திருக்கிறது. அதிகாரத்தை ஒரு முறை சுவைத்தவர்கள் அதைத் தாமாக முன்வந்து விட்டுக்கொடுத்ததாக வரலாறில்லை. இழந்துவிட்ட அதிகாரத்தை மக்கள்தாம் திரும்ப எடுத்துக்கொள்ள வேண்டும். அது ஒரு கடினமான, நீண்ட பயணம்.

சில வருடங்களுக்கு முன்னால் ஒருநாள் நொச்சிக்குப்பத்தில் (சென்னை) இரண்டு மீனவத் தலைவர்களிடம் உரையாடிக் கொண்டிருந்தேன். ஒரு கரைவேட்டி மனிதர் அழைப்பின்றி திடீரென்று உள்ளே நுழைந்து பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டார். கதர்ச்சட்டைப் பாக்கெட்டுக்குள் வெளியே தெரிகிறவாறு அவரது கட்சித் தலைவர் படத்தை வைத்திருந்தார் 'பஞ்சாயத்தாருக்குத் தெரியாம அவங்கவங்களுக்குத் தோண்றாமாரி விவரமெல்லாங் குடுக்க ஆரம்பிச்சுட்டா அப்புறமாக் குப்பத்துல கட்டுப்பாடு இல்லாமப்பூடும்!' என்றார். வம்பாக் கீரப்பாளையத்தில் (புதுச்சேரியில்) மீனவர் கலவரம் குறித்த உண்மை கண்டறியும் குழுவில் ஒருவராய்ப் போனபோது அங்குள்ளவர்கள் எங்களை அவ்வூர்க் கோயில் பூசாரியிடம் அழைத்துப் போனார்கள். வட தமிழ்நாட்டில் பல ஊர்களில் மீனவர்களைச் சந்திக்கும்போது யாராவது ஒருவர் நம்மை நெருங்கி வந்து, 'பஞ்சாயத்தாரைப் பாத்துட்டீங்களா?' என்று கேட்பார். வேறொரு சமயம் கன்னியாகுமரி மாவட்டத்துக் கடற்கரைப் பள்ளிகளுக்கு சில நூல்களை அன்பளிப்பாகக் கொடுக்கச் சென்றிருந்தேன். ஓர் ஊரில் பள்ளித் தலைமை ஆசிரியை முகத்தில் பயத்துடன் கேட்டார்- 'ஃபாதரப் பாத்திட்டீங்களா?' 'உங்கள் பள்ளிக்கு நூல்களை அன்பளிப்பாய்க் கொடுப்பதற்குத் தலைமை ஆசிரியரைப் பார்த்தால் போதாதா, சாமியாரை ஏன் பார்க்க வேண்டும்?'- இது நான்.

'இல்லை சார், பிறகு அவரு என்னிடம் கோபப்படுவாரு' என்றார் அவர். அமலிநகரில் (திருச்செந்தூர்) ஒருமுறை இளைஞர்களுடன் உரையாடித் திரும்பிய மறுநாள் ஒரு மூத்த அருட்பணியாளர் என்னைத் தொலைபேசியில் அழைத்து, 'கூட்டத்துக்கு என்னையும் அழைத்திருக்கலாமே' என்று 'அன்பு' கலந்த குரலில் சொன்னார்.

மக்களின் முன்னேற்றத்துக்கு உறுதுணையாய் நிற்க ஆசைப்படும் 'வளர்ச்சி ஏரோதுகள்' நிறையப்பேரை என் கடற்கரைப் பயணம் நெடுகப் பார்த்திருக்கிறேன். அடித்தள மக்களிடமிருந்துதான் அவர்களின் வாழ்க்கைப் பாட்டை அறிந்துகொள்ள முடியும். எனது ஆய்வுப் பயணங்களில் கருத்து கந்தசாமிகள், கரைவேட்டிப் பிரமுகர்கள், திண்ணை ஜாம்பவான்களை இயன்றவரைத் தவிர்த்துவருகிறேன். அது இயலாத பட்சத்தில், அவர்கள் சொல்வதைப் பதியாமல் தவிர்த்துவிடுவேன்.

'தகவல் வடிகட்டுதல்' என்பது அதிகாரத்தைத் தக்கவைக்கும் மலிவான நுட்பங்களில் மிக முக்கியமானது. எனது ஆவணங்களில் சாதாரண மனிதர்களின் குரலுக்கு முதலிடம் அளித்து வந்திருக்கிறேன். இந்த ஆவண முயற்சியும் அவ்வாறான ஒன்று என்பதில் மகிழ்ச்சி.



பூமியில் உயிரின் வயது 160 கோடி ஆண்டுகள் என்கிறது அறிவியல். இத்தனைக் காலத்தில் பூமிக்கு நிகழ்ந்துள்ள ஒட்டுமொத்த மாற்றங்களை ஒப்பிடும்போது மனித வரவின் கடைசி இரண்டாயிரம் ஆண்டுகளில் நேர்ந்த மாற்றங்கள் துரிதமானவை; கடந்த 200 ஆண்டுகளில் நிகழ்ந்தவை இன்னும் துரிதமானவை; கடந்த 20 ஆண்டுகளில் அறிவியல் நிகழ்த்தியிருப்பவையோ படு துரிதமானவை. இந்த மாற்றங்கள் நாள்தோறும் இயற்கையிலும் மனிதர்களின் போக்குகளிலும் கற்பனைக்கு அடங்காத மாற்றங்களை ஏற்படுத்தி வருகின்றன.

'மாற்றங்களுக்குத் தம்மைத் தகவமைத்துக் கொள்ளும் உயிரினங்கள் மட்டுமே பிழைத்து நிற்கின்றன' என்பார் பரிணாமக் கோட்பாட்டாளர் சார்லஸ் டார்வின் (1859). மானிட சமூகங்களின் நிலைநிற்பிற்கும் இக்கோட்பாடு பொருந்தும். பழமை வேரோடிக் கிடக்கும் சமூகங்களில் மாற்றத்தை முன்னிட்டு முற்போக்குச் சிந்தனைகளை முன்மொழிந்தவர்கள் எல்லோருமே பெரும் விலை கொடுத்திருக்கிறார்கள். ஆனால் மாற்றம் என்னும் ஒன்றைத் தவிர எல்லாமே மாறிக்கொண்டிருப்பது. மாற்றத்தைத் தடுக்க இயலாது, அதனை எதிர்கொள்ளக் கற்றுக் கொள்வதும் சிந்தனைகளை விசாலப்படுத்திக் கொள்வதுமே ஆரோக்கியமானது.

'ஒரு மனிதன் தன் வாழ்வில் சமயத்தின் இடம் எதுவென்று அறிந்து

கொள்ளும்போது அவன் விடுதலை பெறுகிறான்' என்கிற அறிஞர் ஒருவரின் சிந்தனையை அடியொற்றி வாழ்க்கையை அமைத்துக் கொண்ட நான், எனது கடற்கரைப் பயணங்களுக்கு இடையில் மக்களின் வாழ்வில் சமயத்தின் ஊடாட்டத்தை ஆய்வுப் பார்வையுடன் அணுகி வந்தேன். 2004 சுனாமி மறுகட்டுமான கட்டத்தில் கோட்டார் திருச்சபையின் சமயப் பணியாளர் சிலர் 'கடற்கரை மக்கள் தங்களை வழிநடத்திக் கொள்ளும் கட்டமைவைக்' கடற்கரை ஊர்களில் உருவாக்குவதற்கான ஆழமான விவாதங்களைத் தொடங்கினர். இக்கடற்கரைகளில் சுனாமிப் பேரிடரின் சமூகப்-பொருளாதாரத் தாக்கம் மிகுதியாய் இருந்ததற்கு சமய நிறுவனத்தின் மீதான மிகுதியான சார்புநிலை முக்கியமான காரணமாக உணரப்பட்டது. டிசம்பர் 2005இல் பணியாளர்கள் செர்வாசியுஸ். டயனீஷியஸ், ஆன்றனி கிளாரட் (இணை இயக்குநர், கடலோர அமைதி வளார்ச்சி) போன்றவர்களின் முனைப்பில் கோட்டார் ஆயர் இல்லத்தில் 'கடற்கரையில் இரட்டை நிர்வாகம் - ஒரு முன்மொழிவு' என்னும் தலைப்பில் கருத்தமர்வு ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டது. அதில் உரையாற்றுமாறு நானும் அழைக்கப்பட்டிருந்தேன் அந்த முன்மொழிவை அடுத்த கட்டத்துக்கு எடுத்துச் செல்லுமாறு அறிவுறுத்தப்பட்டிருந்த முகமை கவனமாக அதைத் தவிர்த்து விட்டது.

1970களில் கோடிமுனையில் உருவான 'அடித்தள மக்கள் குழு' என்னும் கருத்தியல், காலப்போக்கில் 'அக்கம் பக்கத்துப் பாராளுமன்றம்', 'சிறார் பாராளுமன்றம்', 'அன்பியம்' என்பதாக அடைந்திருக்கும் பரிணாமத்தை ஆர்வத்தோடு கவனித்துக் கொண்டிருந்தேன்.

ஜனவரி 2020இல் பணி.எட்வினைக் கோட்டார் ஆயர் இல்லத்தில் தற்செயலாகச் சந்தித்து உரையாடியபோது 'கோடிமுனையில் அன்பியம், முழுவளர்ச்சி சங்க அமைப்புகளில் முன்னணியில் இயங்கிய சிலரோடு ஓர் உரையாடலை ஏற்பாடு செய்ய முடியுமா' என்று கேட்டேன். ஒரு கலந்துரையாடல் ஏற்பாடானது. அதைத் தொடர்ந்து அவ்வூரைச் சார்ந்த கஸ்பார், கலிஸ்ட், புஷ்பம், அந்தோனியம்மாள், மெல்க்கியாஸ் ஆகியோரை வீடுகளில் சந்தித்து நேர்காணல் செய்தேன். பணி. டயனீஷியஸுடனும் நேர்காணல் நிகழ்த்தினேன். முழு வளர்ச்சி சங்க இலக்குகள், பயிற்சிகள் குறித்த சில தரவுகளை முனைவர் ஜான்சன் ராஜின் கோடிமுனை ஆய்வுக் குறிப்புகளிலிருந்து பெற்றுக்கொள்ள திரு ஃபெர்னாண்டஸ் உதவினார்.

கோடிமுனை முழு வளர்ச்சி சங்கத்தின் ஆகச்சிறந்த படிப்பினைகளையும் அச்சங்கம் கலைக்கப்பட்டதன் அரசியல் பின்னணிகளையும் அலசும்போது வெண்ணெய் திரள்வதுபோல் எழும் புரிதல் என்னவெனில், இத்திட்டம் சமய நிறுவன அதிகார மையத்தின் வழிகாட்டுதலில்/ மேற்பார்வையில்/

கட்டுப்பாட்டிலேயே செயல்பட்டு வந்தது. முழு வளர்ச்சி சங்கம் எளிதில் இல்லாமலாக்கப்பட்டதற்கும் இந்தப் பின்னணியே முக்கிய காரணமாயிற்று.

மக்களின் எதிர்காலம் குறித்த கனவை மக்களே காணவேண்டும், அது சமயத்தைக் கடந்ததாகவும் இருக்க வேண்டும். வளர்ச்சி மக்களால் முன்னெடுக்கப்பட வேண்டும். மற்றவர்கள் செயலூக்கிகளாக மட்டுமே செயல்படலாம்.

பணி. எட்வினைத் தொடர்ந்து கோடிமுனையில் பொறுப்பேற்ற பணியாளர் மாற்கு, தனது துறவு வாழ்வின் 50 ஆண்டு நிறைவை ஒட்டி 2019இல் ஒரு தன்வரலாற்று நூலை எழுதியுள்ளார் (பேருவகை, மாற்கு, தமிழினி, சென்னை). தனது கோடிமுனைப் பணிக்கால அனுபவங்களை அந்நூலில் விரிவாக எழுதியுள்ளார். அப்பதிவு இத்தொகுப்பின் பேசுபொருளுக்கு உரம் சேர்க்கும் என்பதால் அதை இங்கு சேர்த்துக்கொள்ள அவரிடம் அனுமதி கேட்டேன். ‘தாராளமாய்ச் சேர்த்துக் கொள்ளலாம், அதில் எனக்கு மகிழ்ச்சிதான்’ என்றதோடு, ஒரு வரலாற்று நாவலை எழுதிக்கொண்டிருக்கும் மும்முரமான வேலைப்பளுவுக்கு இடையில் இத்தொகுப்புக்கு அறிமுகவுரை எழுதவும் ஒப்புக்கொண்டார். அவர் கோடிமுனை மக்களுக்குத் தந்திருக்கும் இன்னொரு விலைமதிப்பற்ற பரிசாகவே இதனைக் கருதுகிறேன். அன்னார்க்கும், பதினான்கு ஆண்டுகளுக்குப் பிறகு இரண்டாவது முறையாக நேர்காணல் தந்த பணி. பெ.டயனீஷியஸ் அவர்களுக்கும் நன்றி.

கோடிமுனை ஆர்வலர் கலந்துரையாடலைக் குறுகிய காலத்தில் கனிவோடு ஏற்பாடு செய்த பணி.எட்வின், உரையாடல்களில் பங்கேற்ற செல்வி மேரி தெரஸ், திருமதி ரமணி, திருவாளர்கள் லீன், மெல்க்கியாஸ், கோடிமுனை ஆளுமைகளை நேர்காணல் செய்யவும் சில தரவுகளைச் சேகரிக்கவும் நிறைந்த மனதுடன் உதவிய திருவாளர் ஃபெர்னாண்டஸ்- எல்லோர்க்கும் நன்றி.

42 ஆண்டுகளுக்குப் பிறகு கோடிமுனை நினைவுகளை மீள எழுப்பும் சிறு முயற்சி இத்தொகுப்பின் வடிவில் கைகூடியுள்ளது மகிழ்ச்சியளிக்கிறது. பணி. மாற்கு ஸ்டீஃபன் அறிமுகவுரையில் குறிப்பிடுவது போல, ‘கேடிமுனை’ என நகையாடப்பட்ட கோடிமுனை, கத்தோலிக்கக் கடற்கரைக் கிராமங்களின் போதிமரமாக முடியும். அதன் பொருட்டு, வரலாற்றை இளைய தலைமுறையின் கையில் கொடுத்துச் செல்லும் நிகழ் தலைமுறையின் தார்மீகக் கடமையின் வெளிப்பாடே இந்நூல்.

வறீதையா கான்ஸ்தந்தின்

**அறிமுகம்**

# கோடிமுனை என்னும் போதிமரம்

முனைவர் வறீதையா கான்ஸ்தந்தினின் 'கோடிமுனை முதல் ஐ.நா.சபை வரை' நூலின் கணினிப் பிரதியை ஒரே அமர்வில் வாசித்து முடித்தேன். தற்போது அன்பியங்கள் என்று சொல்லப்படும் அடித்தளக் கிறிஸ்தவ சமூகங்கள் கோடிமுனையில் 1977 முதல் 1990 வரை எப்படிச் செயல்பட்டன என்பதையும், அதன்பின் நடந்தவற்றையும் அவர் அற்புதமாகப் பதிவு செய்துள்ளார். அதற்காகக் கள ஆய்வு, கலந்துரையாடல், சரித்திர ஆவணங்களைச் சேகரித்தல் போன்ற யுக்திகளை நேர்த்தியாகக் கையாண்டுள்ளார். சில உரையாடல்களையும் ஆவணங்களையும் அப்படியே இணைத்திருப்பது நூலில் தனிச் சிறப்பு.

பிரதியை வாசித்தபோது 1983-84ல் நான் கோடிமுனையில் பணியாற்றிய ஞாபகம் என்னை நிறைத்தது. 36 ஆண்டுகள் கடந்துவிட்டன. அந்த அனுபவங்கள் இன்றும் என் நினைவில் இளமையாக, பசுமையாக இருக்கின்றன. எனது முதல் பங்கு கோடிமுனை. அனைத்துக் தளங்களிலும் புதிய அனுபவங்கள். எனக்கு முன் அங்கிருந்த பணியாளர் எட்வினின் கருத்துக்களை உள்வாங்கிச் செயல்பட்டேன். அப்பட்டமாகச் சொல்லவேண்டுமானால் எனக்கு ஞானத்தைக் கற்றுக்கொடுத்த போதிமரம் கோடிமுனை.

ஆயர் உட்பட கோட்டார் மறைமாவட்டப் பணியாளர்கள் அனைவருமே எனக்குப் புதியவர்கள். கோடிமுனை என்னும் பெயரைக்கூடக் கேட்டதில்லை. பங்கு அனுபவம் அற்றவன். 'பல்மேரா' என்ற இயேசு சபைக் குழுவினரோடு தேவகோட்டைப் பகுதியில் அடித்தள மக்களோடு இணைந்து பணியாற்றியதே எனக்குத் துணையாயிருந்தது. திருநிலைப்படுத்தப்பட்டவுடன் கோடிமுனை சென்றேன். எல்லாம் தெரியும் என்ற மனநிலை அறவே இல்லை. அடித்தட்டு மக்கள் அதிகாரத்திற்கு வரவேண்டும், அவர்களது எண்ணங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்ற இலக்குடன் திறந்த பாத்திரமாகச் சென்றேன். அந்தப் பங்கிலும் அடித்தட்டு மக்கள் அதிகாரத்திற்கு வரவேண்டும், கடைக்கோடி மனிதனின் குரலும் கேட்கப்பட வேண்டும் என்ற எட்வினின் செயல்பாடுகள் எனக்கு முழு திருப்தி அளித்தன. எனவே அவரது வழித்தடத்தில் நடப்பது எனக்கு எளிதாயிற்று. அரசியல் ஈடுபாட்டிலிருந்து கிறிஸ்தவ நடைமுறைக்கு எனது பணிகளை மடைமாற்றம் செய்துகொண்டேன். முழு வீச்சில் செயல்பட்டேன். மக்களுக்கான பணி என்பதைவிட மக்களோடு இணைந்த பணி எனலாம். அதிகார மையத்திலிருந்து விலகியிருப்பது

மக்களோடு நெருங்குவதற்கு மிகவும் உதவும் என்பதை அனுபவத்தின் வாயிலாக அறிந்துகொண்டேன்.

எட்வினின் எளிய வாழ்வு எனக்கு மிகவும் பிடித்தது. அடித்தளக் கிறிஸ்தவக் குழுக்களின் கூட்டங்களில் கலந்து கொள்வது, அவர்களது செபத்தோடு இணைந்த சமூக விவாதங்களில் பங்கேற்பது, அவர்களுக்குப் பயிற்சி அளிப்பது, அடித்தளக் கிறிஸ்தவக் குழுக்கள் இணைந்த முழு வளர்ச்சி சங்கம் செயல்படத் துணைபுரிவது, அதன் நிதிக்குழு, அமைதிக் குழு (நீதிமன்றம்), வழிபாட்டுக் குழு எனப் பல குழுக்கள் செயல்படப் பயிற்சி அளிப்பது, வழிபாட்டை அர்த்தமுள்ள விதத்தில் நடத்துவது, பக்த சபைகளுக்குப் புத்துயிர் அளிப்பது, அடித்தளக் கிறிஸ்தவச் சமூகங்கள் மற்ற கடற்கரைக் கிராமங்களிலும் உருவாக அங்கும் பயிற்சி அளிப்பது என்ற எட்வினின் தடத்தில் பயணித்தேன். ஏதாவது திட்டத்தை முழு வளர்ச்சி சங்கம் ஏற்கவில்லை என்றால் அதை அவர் தோல்வியாகப் பார்க்கவில்லை. மாறாக, இன்னும் மக்களுக்குப் போதிய பயிற்சி கிடைக்கவில்லை, அதிகம் பயிற்சி கொடுக்க வேண்டும் என்பதே அவரது மனநிலை. அடுத்தவர்களைக் குறை சொல்வதில்லை.

மறைமாவட்டப் பணியாளர்களில் சிலர் எட்வினின் செயல்பாடுகளை ஏற்காததைக் கண்டேன். அவர்கள் கோடிமுனையைக் கேடிமுனை என்றே அழைத்தனர். அங்கே பிரச்சினைகளை எப்படிச் சமாளிக்கிறீர்கள் என்று என்னிடம் கேட்டனர். அங்கு பிரச்சினைகள் இல்லை, பிரச்சினைகள் எழுந்தால் மக்களே தீர்த்துக்கொள்வர் என்றேன். அவர்கள் நம்பவில்லை.

சில கடற்கரைக் கிராமங்களில் பங்குப் பணியாளர் சிற்றரசர்களாக இருந்தனர். அவர்தான் தலைவர். மாவட்ட ஆட்சியர், காவலர்கள் உட்பட அனைத்து அரசு அதிகாரிகளும் பங்குப் பணியாளர்களின் தலைமையை அங்கீகரித்தனர். பங்குப் பணியாளர்களோ கிராமத்தில் இருக்கும் ஊச்சாளிகள், பணக்காரர்கள், பரம்பரைத் தலைவர்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து அவர்களின் பிரதிநிதியாகத்தான் பங்கை நடத்தினர். கடைக்கோடி மனிதனின் குரல் அங்கு எடுபடவில்லை. நிதி முழுவதையும் பங்குப் பணியாளரே கையாண்டார். இந்த இரண்டு போதைகளால் கட்டுண்டவர்களாகப் பல பங்குப் பணியாளர்கள் இருந்தனர். இந்த இரண்டும் அடித்தளச் சமூகப் பிரதிநிதிகளின் கூட்டு அமைப்பான முழு வளர்ச்சி சங்கம் வழியாக கடைக்கோடி மனிதர்களிடம் கொடுக்கப்பட்டன. அதோடு பெண்களும் முக்கியத்துவம் பெற்றனர். அடித்தளக் கிறிஸ்தவ சமூகங்களின் பிரதிநிதிகளாகப் பெண்களும் முழு வளர்ச்சி சங்கத்தில் பங்கேற்றனர். பொறுப்புகளும் அவர்களுக்கு வழங்கப்பட்டன. இந்த மாற்றத்தைச் சில பங்குப் பணியாளர்களால் சீரணிக்க முடியவில்லை.

முழு வளர்ச்சி சங்கம் எந்த அளவு சிறப்பாக செயல்பட்டது என்பது புத்தகத்தில் சிறப்பாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது (அத்தியாயம் 1, 3). ஓர் உதாரணத்தைச் சுட்டிக்காட்டலாம். இறந்தவர்களைப் புதைப்பதற்குக் கல்லறையில் இடமில்லை என்ற பிரச்சினை கோடிமுனையில் எழுந்தது. கல்லறையில் சமத்துவம் வேண்டும் என்று முடிவெடுத்த முழு வளர்ச்சி சங்கம், கட்டியிருந்த பெரிய கல்லறைகளை அகற்றிச் சமத்துவத்தை நிலைநாட்டியது. அது மிகப் பெரிய பிரச்சினையாக வெடித்தது. இந்த இக்கட்டான சூழ்நிலையில் அடித்தளக் கிறிஸ்தவச் சமூகங்களை மறுத்தவர்களும், பெண்களின் முக்கியத்துவத்தை எதிர்த்தவர்களும் இணைந்து பணக்காரர்களை, பரம்பரைத் தலைவர்களை எதிர்கொண்டனர். இந்நிகழ்வு அடித்தளக் கிறிஸ்தவ சமூகங்களின் வழியாக சமூகத்தில் மிகப்பெரிய மாற்றங்களைக் கொண்டு வரலாம் என்பதற்கு ஓர் உதாரணம். கோடிமுனையைப் பின்பற்றிக் கடற்கரைக் கிராமங்கள் அனைத்திலும் கல்லறைகளில் இந்த மாற்றத்தைக் காண முடிகிறது. புதைக்க இடமில்லை என்ற பிரச்சினை கடற்கரைக் கிராமங்களில் நிரந்தரமாகத் தீர்க்கப்பட்டது.

மீனவர்கள் பற்றிய எட்வினின் பார்வை மிக முக்கியமானது (அத்தியாயம் 2). விளிம்புச் சமூகமாக இவர்களை எட்வின் பார்க்கவில்லை. இம்மக்களிடம் நாம் அனைவரும் சமம் என்ற பார்வை இருப்பதால் அனைவரும் மனிதர்கள் என்ற உணர்வே இருக்கிறது என்கிறார். இக்கண்ணோட்டத்தில் மீனவர்களைப் பார்க்க இப்புத்தகம் நம்மை அழைக்கிறது. கோடிமுனையில் பணியாற்றியபோது சில பெற்றோர் என்னிடம் தங்களது மகள்களுக்கு ஏற்ற துணை மற்ற சாதியில் இருந்தால் சொல்லுங்கள் என்று கூறினர். மனிதர் அனைவரும் சமம் என்ற அவர்களது எண்ணத்தின் வெளிப்பாடாக நான் இதைக் கண்டேன். நானே சில சாதி மறுப்புத் திருமணங்களையும் நடத்தினேன். வேறு எந்தக் கிறிஸ்தவச் சமூகத்திலும் காணப்படாத மிக உயர்ந்த மனித மாண்பு இது.

அதே வேளையில் அடித்தளக் கிறிஸ்தவ சமூகங்கள் அனைத்து மக்களையும் பாதிக்கும் சில பிரச்சினைகளைக் கண்டுகொள்ளவில்லை. உதாரணத்திற்கு மாந்திரீகம், வரதட்சணை போன்றவைகளைச் சொல்லலாம். நான் கோடிமுனையில் பணியாற்றியபோது புதைக்கப்பட்ட செய்வினைத் தகட்டை எடுத்த அனுபவம் எனக்குண்டு. இந்த நிலை இப்போது மாறியிருக்கலாம்.

ஆனால் மதத்தை நிர்வாகத்தோடு இணைத்துப் பார்ப்பது கடற்கரையில் இயல்பானதாக இருக்கிறது. அதைப்பற்றி ஆழ்ந்து இந்த அமைப்பு சிந்திக்கவில்லை. இதனால் பங்குப் பணியாளர்களது நிர்வாகத்தை முழு வளர்ச்சிச் சங்கம் செய்கிறது என்ற மடைமாற்றம்தான் நடைபெற்றதே தவிர நிர்வாகம் என்பது மதத்திற்கு அப்பாற்பட்ட ஓர் அரசியல் செயல்பாடு என்ற கண்ணோட்டம் இல்லை.

சிறப்பாக நடைபெற்ற முழு வளர்ச்சிச் சங்கமும், அடித்தளக் கிறிஸ்தவ சமூகங்களும் கலைக்கப்பட்டன என்று 1990ல் கோடிமுனையில் பங்கு சாமியார் அறிவித்ததும் அதை மக்கள் ஏற்றனர். பிரச்சினையை உருவாக்கவில்லை. இதனை எதிர்த்துப் போராடவில்லை. திருஅவையின் அதிகாரத்தைக் கேள்வி கேட்க வேண்டும் என்ற எண்ணமே அவர்களுக்கு எழவில்லை. பலவற்றைப் பற்றி கேள்வி எழுப்பிய அடித்தளக் கிறிஸ்தவச் சமூகங்களிடம் திருஅவையின் அதிகாரத்தைக் கேள்வி கேட்கவேண்டும் என்ற எண்ணமே எழவில்லை. எழவில்லை என்று சொல்வதைவிட கேள்வி கேட்கலாம் என்ற எண்ணத்தைப் பணியாளர்கள் மக்களிடம் வளர்க்கவில்லை. வளர்க்க விரும்பவில்லை. அதிகாரமும் பணப் பொறும்பும் தங்களிடமே என்பதும், பெண்கள் திருஅவையில் இரண்டாம் தரமாக இருக்க வேண்டும் என்பதும்தான் பெரும்பாலான பணியாளர்களது எண்ணம் என்று சொல்லலாம். கேள்வி கேட்கும் உரிமை பொதுநிலையினரிடம் எழவேண்டும் என்ற கருத்தைப் புத்தகம் வெளிப்படுத்துவதாக உணர்கிறேன் (அத்தியாயம் 4). இது ஆரோக்கியமான கண்ணோட்டம்.

'அதிகாரம் கீழிருந்து மேல்நோக்கி' என்ற கருத்தினை (அடித்தளக் கிறிஸ்தவ சமூகங்கள் மூலம்) கடலோர மீனவர்கள், கிறிஸ்தவர்கள் என்ற எல்லைக்குள் எட்வின் தனது பணியைச் சுருக்கிக் கொள்ளவில்லை. அடித்தள மக்கள் சாதி, சமயம், கட்சி, பொருளாதாரத்தைக் கடந்தும் செயல்பட வேண்டும் என்று எண்ணினார். அதனால் அக்கம்பக்கத்துப் பாராளுமன்றம், சிறார் பாராளுமன்றம் போன்ற அமைப்புகளை ஏற்படுத்தியுள்ளார். இவையும் உலக மக்களிடம் வரவேற்பைப் பெற்றுள்ளன. ஐ.நா. சபையில் இக்கருத்து விவாதிக்கப்படுகிறது (அத்தியாயம் 1, 2). ஆனால் இங்கு இல்லை. 'இறைவாக்கினர் எவரும் தம் சொந்த ஊரில் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை.' (லூக். 4:24) என்ற நிலை இன்றும் தொடர்கிறது.

இருப்பினும் அடித்தளக் கிறிஸ்தவச் சமூகங்களின் தாக்கம் கோடிமுனையில் நீடிக்கவே செய்கிறது. சமூகங்கள் கலைக்கப்பட்டாலும் அதன் நல்ல அம்சங்களை மக்கள் தொடரவே செய்கின்றனர். 1977ல் 300 வழக்குகள் என்ற நிலையில் அதன் பிறகு அதன் எண்ணிக்கை மிகவும் குறைந்தது. 85க்குப் பிறகும் மிகக் குறைந்த எண்ணிக்கையில்தான் வழக்குகள் இருந்தனவே தவிர முந்தைய நிலைக்குச் செல்லவில்லை. பெண்களும், அடித்தளத்தில் இருப்பவர்களும் பங்குப்பேரவையில் இடம் பெறுகின்றனர்.

சுனாமி சமயத்தில் இரட்டைத் தலைமை பற்றிய விவாதம் எழுந்ததாக ஆசிரியர் குறிப்பிடுகிறார் (அத்தியாயம் 4). அந்த விவாதம் தொடர்ந்ததா என்று தெரியவில்லை. மதம், கட்சி, சாதிக்கு அப்பால் ஊரில் ஓர் அமைப்பு இருக்க வேண்டும். அதைப் பற்றிய விவாதம் தொடர வேண்டும். கோட்டார்

மறைமாவட்டக் கடற்கரைக் கிராமங்களில் கத்தோலிக்கர்களாக ஒரே சமூகத்தினரே இருக்கின்றனர். மற்ற சமூகத்தினரோடு, மதத்தினரோடு வாழ்ந்த அனுபவங்கள் அவர்களுக்கு இல்லை. இதனால்தான் இங்கு பணியாளர்கள் தலைமை ஏற்கின்றனர். பணியாளர்கள் மதக் கடமைகளை மட்டும் நிறைவேற்றட்டும், மற்றதை அவர்களைக் கடந்த ஓர் அமைப்பு செயல்படுத்தலாம், மீனவர்களின் ஒட்டுமொத்த வளர்ச்சிக்கு இது அடித்தளமாக அமையும் என்கின்றனர் சிலர். அப்படியானால் பணியாளர்கள் வெறும் பூசாரிகளா என்கின்றனர் வேறு சிலர். இதைப் பற்றிய விவாதம் தொடர இப்புத்தகம் அழைக்கிறது.

எனது ஓர் அனுபவத்தைப் பகிர்வது பலனளிக்கலாம். கோடிமுனையிலிருந்து மாற்றலாகி சென்னை மயிலாப்பூர் உயர் மறைமாவட்டத்தில் ஓங்கூர் பங்கின் பொறுப்பை ஏற்றேன் (தற்போது இப்பங்கு செங்கல்பட்டு மறைமாவட்டம்). கோடிமுனை போன்று இங்கு அடித்தளச் சமூகங்களையும் பொதுநிலையினர் தலைமை வகிக்கும் பங்குப் பேரவையையும், அதில் நிதிக்குழு, நீதிக்குழு, கல்விக்குழு, கலைக்குழு, வழிபாட்டுக்குழு என பல குழுக்களையும் உருவாக்கினேன். இப்பகுதியில் தலித் கிறிஸ்தவர்கள் அதிகம். இவர்கள் அரசாலும் குறிப்பாகத் திருச்சபையாலும் புறக்கணிக்கப்பட்டனர். எனவே இவர்களை உயர் மறைமாவட்ட அளவில் ஒருங்கிணைத்துத் தங்களது உரிமைகளுக்காகப் போராடும் ஓர் இயக்கமாக உருவாக்கும் முயற்சியில் இறங்கினேன். ஓங்கூர் பங்கில் தலித் கிறிஸ்தவ இயக்கம் உதித்தது. இயக்கத்தினரையும் பங்குப் பேரவையில் ஒரு குழுவாக உருவாக்க எண்ணினேன்.

ஆனால் பேரவை உறுப்பினர்களில் ஒருவர் இதை வன்மையாக எதிர்த்தார். பங்குப் பேரவையை அடுத்து வரும் பணியாளர் கலைத்துவிடலாம். அல்லது மறைமாவட்டமே கலைத்து விடலாம். அப்போது தலித் கிறிஸ்தவ இயக்கமும் இல்லாமல் போகும். பங்குப் பேரவைக்கு அப்பாற்பட்டு மக்களே தலைமை ஏற்று நடத்தும் தனி அமைப்பாகத் தலித் கிறிஸ்தவ இயக்கம் செயல்பட வேண்டும் என்றார். அவரது கருத்து மிகச் சரியானது. அதன்படியே தலித் கிறிஸ்தவ இயக்கம் பொதுநிலையினர் தலைமையில் தனித்துச் செயல்பட்டது. உயர் மறைமாவட்டம் முழுவதும் பெரும்பாலான பங்குப் பணியாளர்களின் ஆதரவின்றியும் அவர்களது எதிர்ப்பை மீறியும் இயக்கம் பரவியது. தனி இயக்கமாகச் செயல்பட்டு சென்னை- மயிலை மறைமாவட்டத்தில் பல மாற்றங்களைக் கொண்டுவரப் போராடியது. பங்குப் பேரவையின் அங்கமாகச் செயல்பட்டிருந்தால் நிச்சயம் அது வளர்ந்திருக்காது. இயக்கமே உருவாகியிருக்காது.

இப்படிச் செயல்பட்ட இயக்கம் தலித் கிறிஸ்தவ விடுதலை இயக்கமாகத்

தமிழகம் முழுவதும் பரவியது. இயேசு சபைப் பணியாளர் அந்தோனிராஜ் தலைவரானார். அவரது தலைமையில் தலித் கிறிஸ்தவர்களுக்கு உரிமைகள் வேண்டும் என்று இயக்கத்தினர் பல மறைமாவட்டங்களில் போராடினர். தமிழக ஆயர்கள் அதை விரும்பவில்லை. உரோம் வரை சென்று அந்தோனிராஜ் தலைமை ஏற்கக்கூடாது என்று வலியுறுத்தினர். எனவே அந்தோனிராஜ் பதவியிலிருந்து இறங்கினார். பொதுநிலையினர் தலைமை ஏற்க, போராட்டங்கள் தொடர்ந்தன. இந்த நிகழ்வானது மீனவர்களுக்கும் பணியாளர்களுக்கும் என்ன சொல்கிறது? விவாதிப்பது நல்லது.

மீனவர்களிடம் சில மாற்றங்கள் வேண்டும் என்பது எனது எண்ணம். சுனாமி சமயத்தில் ஏற்பட்ட மற்றொரு அனுபவத்தைப் பகிர்கிறேன். சுனாமியால் பாதிக்கப்பட்ட பகுதிகளுக்குச் சென்றேன். அவற்றில் கோட்டார் மறைமாவட்டத்தில் குளச்சல், கோடிமுனை, கொட்டில்பாடு, புதூர், மணக்குடி, கீழமணக்குடி போன்ற பல கிராமங்களும், தூத்துக்கடி மறைமாவட்டத்தில் பல கடற்கரைக் கிராமங்களும் அடங்கும். சுனாமியால் பாதிக்கப்பட்டவர்களுக்கு என்னால் எதுவும் செய்ய முடியுமா என்று யோசித்தேன். அப்போது பத்திரிக்கையில் 'சுனாமி உதவி கேட்டு அருந்ததியர்கள் உண்ணாவிரதம்' என்ற தலைப்பில் வந்த செய்தியைப் படித்தேன். அருந்ததியர்களுக்கும் சுனாமிக்கும் என்ன சம்பந்தம்? நான் ஆச்சரியப்பட்டு செய்தியின் உண்மையை அறியத் தூத்துக்குடி மறைமாவட்டத்திலுள்ள அந்த ஊருக்கு விரைந்தேன். செய்தி உண்மைதான். சுனாமியால் பாதிக்கப்பட்ட அருந்ததியர்கள் மற்ற மீனவர்களோடு அரசுப் பள்ளியில் தங்கினர். தங்களோடு மற்றவர்கள் தங்கக் கூடாது என்று கிறிஸ்தவ மீனவர்கள் கூறியதால் அருந்ததியர்கள் அனைவரும் வெளியேற்றப்பட்டனர். அவர்கள் அனைவரும் இந்துக்கள். இந்தச் சமூகத்தினர்தான் சுனாமியால் இறந்துபோனவர்களது உடலை அப்புறப்படுத்தியவர்கள். அவர்களோடு மீனவர்கள் தங்கியிருந்தால் புதிய அனுபவம் கிடைத்திருக்கும்.

ஜெர்மனியில் எனக்குத் தெரிந்த நிதி உதவி அளிக்கும் நிறுவனம் வழியாக சுனாமியால் பாதிக்கப்பட்ட அருந்ததியர்களின் மறுவாழ்வுக்கு உதவினேன். அதே நிறுவனம் கோட்டார் மற்றும் தூத்துக்குடி மறைமாவட்டங்களில் இரண்டு கிராமங்களைத் தத்தெடுத்துக் கோடிக்கணக்கில் பணம் செலவிட்டது. அனைத்து நிவாரணப் பணிகளும் முடிந்ததும் நிதி உதவி அளிந்த நிறுவனத்தினர் கடைசி முறையாகப் பார்வையிட வந்தனர். அவர்களிடம் இரண்டு கிராம மீனவர்களும் இன்னும் தங்களுக்கு உதவ வேண்டும் என்று கோடிக்கணக்கில் பணம் கேட்டனர். அதன்பின் மிகக் குறைந்த அளவு நிதியளித்த அருந்ததியர்களைப் பார்வையிட்டனர். அருந்ததியர்கள் அவர்களிடம், 'நீங்கள் எங்களைப் போல பாதிக்கப்பட்டவர்களுக்கு அதிகம்

உதவுங்கள்' என்று வாழ்த்தி, தங்களால் இயன்ற ஒரு சிறு தொகையைக் கொடுத்தனர். நிதி அளித்தவர்கள் வியந்தனர். உலகின் எப்பகுதியிலும் கிடைக்காத அனுபவம் என்றனர். கடைக்கோடி மனிதனின் செயல்பாடு இது. சுயதேவையைப் பூர்த்தி செய்த மீனவர்களிடம் அடுத்தவர்களை எதிர்பார்க்கும் போக்கு சுனாமியால் அதிகரித்துள்ளது. பல கடற்கரைக் கிராமங்களில் 'இன்னும் வேண்டும்' என்ற குரல் உரத்து ஒலித்ததாகக் கேள்விப்பட்டேன். இது ஆரோக்கியமான போக்கா என்று தெரியவில்லை.

கடந்த காலங்களில் பங்குகளை மக்களே நிர்வகித்தார்கள். ஆனால் மக்கள் என்பது அவ்வூரிலுள்ள பணக்காரர்களே. எனவே அவர் சொல்படிதான் ஊரே நடந்தது. அவர் ஊரின் பொதுப்பணத்தைப் பெரும்பாலும் சுயநலனுக்குச் செலவிட்டதோடு, தனக்குச் சார்பான முடிவுகளையே எடுத்தார். இந்த முறை பற்றி விரிவாக எழுத இயலவில்லை. பங்குப் பணியாளரிடம் நிர்வாகத்தைக் கொடுத்தால் இதில் மாற்றம் ஏற்படும் என்றது திருஅவை. பல போராட்டங்களுக்குப் பின்பே மாற்றம் ஏற்பட்டது. பணியாளர்களிடமும் பொறுப்பு கொடுக்கப்பட்டது. ஆனால் பெரும்பாலான பணியாளர்கள் பணக்காரர்களின் இடத்தில் அமர்ந்தார்களே தவிர மக்களின் பிரதிநிதிகளாக அமரவில்லை.

பணியாளர்களுக்குப் பங்கின் நிர்வாகம் பற்றி உருவாக்கக் காலத்தில் பயிற்சி அளிப்பது மிகக் குறைவு. பேராசிரியர்களாகக் குருமடத்தில் பணியாற்றுபவர்களிடமும் ஆயர்களிடமும் இதுபற்றிய பார்வை வளர வேண்டும்.

தற்போது அன்பியம் என்பது செபிப்பது, பணம் வசூல் செய்வது என்ற எல்லைக்குள் தனது பணியைச் சுருக்கிக் கொண்டது. பொதுத்தளத்தில் தங்களது பணி என்ன என்பது பற்றிய தெளிவு இல்லை. மறைமாவட்டங்களிலும் ஒன்று போல செயல்பட வேண்டும் என்ற கண்ணோட்டம்தான் இருக்கிறதே தவிர ஆங்காங்கே கோடிமுனை போல இயங்கும் சில முற்போக்கு முயற்சிகளுக்கு ஆதரவோ, ஊக்கமோ அளிப்பதில்லை. முன்னெடுக்கும் புதிய முயற்சிகளை அழிக்கவே பார்க்கிறது. அப்படி புதிய முயற்சிக்கு ஆதரவாக ஆயர் செயல்பட்டாலும் அவர் ஒருதலைப்பட்சமாகச் செயல்படுகிறார் என்று பெரும்பாலான பணியாளர்கள் குற்றம் சொல்கின்றனர். தென் அமெரிக்காவில் அமேசான் பகுதியில் ஆதிவாசிகள் வாழும் ஒருசில பகுதிகளுக்கு பணியாளர்களால் செல்ல முடிவதில்லை. அங்கு திருமணம் ஆனவர்களைத் திருநிலைக்கு உயர்த்தலாமா என்று திருத்தந்தை பிரான்சிஸ் யோசிக்கிறார். அதைத் தடுக்கும் நிலைதான் இன்னும் திரு அவையில் உள்ளது.

கடலோர மக்களிடம் மாற்றுச் சிந்தனைக்கு அடித்தளமிடுகிறது இந்தப் புத்தகம். அனைவரும் படிக்க வேண்டிய ஓர் அருமையான படைப்பு. நூலாசிரியர் வறீதையா கான்ஸ்தந்தினுக்கு எனது நெஞ்சார்ந்த பாராட்டுகள்.

**மாற்கு ஸ்டீபன் சே.ச.**
மகளிர் தினம்
08-03-2020
சென்னை- 600 034.

# 01

# கோடிமுனை அடித்தள மக்கள் குழுக்கள்

கன்னியாகுமரி மாவட்டத்தில், பழமை வாய்ந்த துறைமுக நகரமான குளச்சலுக்கு வடமேற்கில் அமைந்துள்ளது கோடிமுனைக் கடற்கரைக் கிராமம். ஒரு காலத்தில் வன்முறை மிகுந்த கிராமங்களில் ஒன்றாக இருந்த கோடிமுனை, இன்று ஐக்கிய நாடுகள் சபையில் பேசப்படும் வரலாற்றுச் சாதனையை 1977-1990 காலகட்டத்தில் நிகழ்த்தியது. கடைக்கோடி மனிதனின் குரலுக்கான தளத்தை முன்னிலைப்படுத்தும் 'அக்கம் பக்கத்துப் பாராளுமன்றம்' என்னும் அடித்தளச் சமூகக் கருதுகோளைச் செயல் ரீதியாக உலகுக்குக் காட்டிய ஊர் அது. ஊருக்குள் சமத்துவத்தை நிலைநாட்டும் இன்னொரு முயற்சியாக 'கல்லறைத் தகர்ப்பு' நிகழ்ந்ததும் இந்தச் சீர்திருத்தித்தின் தொடர்ச்சியே ஆகும்.

கல்பனா ராம் 1990களில் கொட்டில்பாடு, கோடிமுனைக் கிராமங்களில் முக்குவப் பெண்கள் என்னும் தலைப்பில் நிகழ்த்திய ஆய்வின் பெரும்பாலான விவரணைகள் தென்திருவிதாங்கூர்க் கடற்கரைக்குப் பொதுவானவை ஆகும். 1990களின் இறுதியில் ஜான்சன் ராஜ் கோடிமுனையில் நிகழ்த்திய முனைவர்ப் பட்ட ஆய்விலும் இப்பொதுத்தன்மை விளங்கும்.

தென் திருவிதாங்கூர்க் கடற்கரைக் கிராமங்கள் கத்தோலிக்கச் சமயத்தின் கட்டுப்பாட்டில் வந்த வரலாற்றை மிகச் சுருக்கமாகக் கீழ்க்கண்டவாறு குறிக்கலாம்: பிற சமூகங்களைப் போல, கடற்கரைச் சமூகங்களில் தகராறுகளும் மோதல்களும் அவ்வப்போது எழுவதுண்டு எனினும் அவற்றை மேலாண்மை செய்யும் தலைமையும் அவர்களிடம் இருந்தது. அச்சமூகத்துக்கே உரித்தான கட்டுக்கோப்புகளும் இருந்தன. ஏறத்தாழ 480 ஆண்டுகளுக்கு முன்னால் திருவிதாங்கூர் முக்குவர்கள் புனித சேவியரின் இடையீட்டினால் கத்தோலிக்கம்

தழுவியதைத் தொடர்ந்து அவர்களிடம் வரி வசூலித்துக்கொள்ளும் உரிமை சேவியரின் கைக்கு வந்தது. கோவில், வழிபாடு, திருமறை அறிவூட்டல் முதலியவற்றில் ஊர்ப் பாதிரியாருக்கு உதவும் பொருட்டு புனித சேவியரின் காலத்தில் சில பொறுப்புகள் உருவாக்கப்பட்டன: காரியஸ்தனிஸ், கணக்குப்பிள்ளை (வழிபாட்டுக்கு ஒழுங்குசெய்தல், கோயில் கணக்கைப் பராமரித்தல்), முடுதம் (மேற்பார்வையாளர்), உபதேசியார் (சக்றிஸ்தன்), மெலிஞ்சியார் (மணியடிப்பவர்). 'பத்ருவாதோ' ஏற்பாட்டின் கீழ் சமய நிறுவனம் இம்மக்களிடம் வரி வசூலித்துக் கொள்ளும் உரிமையும் மேற்சொன்ன புதிய பொறுப்புகளும் கடற்கரைகளில் நீடித்துவந்த சமுகத் தலைமையை அழித்துச் சமய முற்றாண்மையைக் காலூன்றச் செய்துவிட்டது.

தனது கோடிமுனைப் பணிக்கால அனுபவங்களை நினைவுகூர்கையில் அவ்வூர் மக்களைக் குறித்து பணி.மாற்கு குறிப்பிடுகிறார்- 'நானூறு ஆண்டுகளுக்கு மேலாக இவர்கள் கத்தோலிக்கத்திற்குள் இருக்கிறார்கள்; இன்றும் சமய நம்பிக்கைக்காக இரத்தம் சிந்தவும் உயிர் துறக்கவும் தயாராய் இருக்கிறார்கள். ஆனால் கிறித்து என்னும் ஆளுமையைக் குறித்து இவர்களுக்குப் பெரிதாய்த் தெரியவில்லை. பைபிள் மதிப்பீடுகளை இவர்கள் அறியவில்லை; வழிபாட்டுக்கும் இவர்களின் வாழ்க்கைக்கும் தொடர்பே இல்லை' (நன்றி: ஜான்சன் ராஜ்).

கடவுள், சமய நம்பிக்கைகள் ஒருபுறமிருக்க, இம்மக்கள் மந்திரவாதிகளையும் குறி சொல்பவர்களையும் காலம் தவறாமல் தேடிப் போவதுண்டு. மந்திரவாதிகளை வைத்து எதிரிகள் மீது தீய சக்திகளை ஏவிவிடும் வழக்கம் உண்டு (முக்குவப் பெண்கள். கல்பனா ராம், 1994). திருமணம், வேலைவாய்ப்பு போன்ற குடும்ப நிகழ்வுகள், எதிர்காலம் குறித்துக் கேட்டறிவதற்குக் குறிசொல்பவர்களைச் சென்று பார்க்கும் வழக்கமும் நிலவுகிறது. இவற்றை மானிடவியலாளர் ஜெயபதி குறிப்பிடுவது போல, மதமாற்றத்துக்கு முந்தைய முக்குவர் பண்பாட்டு வரலாற்றின் நீட்சியாகப் புரிந்துகொள்ள வேண்டியுள்ளது.

கத்தோலிக்கக் கிறித்தவக் கடற்கரைச் சமூகங்களில் சமய நிறுவனம் நிலைநாட்டியிருக்கும் முற்றாண்மைக்கு மாற்றாக கோடிமுனையில் ஊரின் நிர்வாக அதிகாரத்தை மக்கள் பகிர்ந்துகொண்டனர். 'முழு வளர்ச்சி சங்கம்' (பார்க்க: பின்னிணைப்புகள் 1-4) என்னும் அமைப்பு மக்கள் பிரதிநிதிகளின் சார்பில் பதிவு செய்யப்பட்டு, அதன் கீழ் ஊரின் நிர்வாக அதிகாரம் சிறு குழுக்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டது. கல்வி வளர்ச்சிக்குழு, நிதிக்குழு, திட்டக்குழு, சுகாதாரக்குழு,

நீதிமன்றம் என்பதாக பல குழுக்கள் செயல்பட்டுக்கொண்டிருந்தன. முழுவளர்ச்சி சங்கத்துக்கு இணையாக 'மறுமலர்ச்சி சங்கம்' ஒன்றும் நிறுவப்பட்டது. வழிபாடு, இயக்கங்கள், சமய அமைப்புகள் போன்றவை இதன் வழிகாட்டுதலில் செயல்பட்டன.

மே 1977 நிலவரப்படி, கோடிமுனை மக்களில் 300பேருக்கு எதிராகக் காவல் நிலையத்தில் பல்வேறு கிரிமினல் வழக்குகள் பதிவாகியிருந்தன. மக்கள் நீதிமன்றத்தின் தலையீடு காரணமாக, அரசுதுறை தொடர்பான மூன்று வழக்குகள் தவிர மற்றவை அனைத்தும் சுமுகமாகத் தீர்த்துவைக்கப்பட்டன. 'கோடிமுனை முழு வளர்ச்சிச் சங்க' முனைவு முற்றிலும் திட்டமிடப்பட்டதல்ல, தற்செயலானதும் அல்ல; சமய சிந்தனையாளர் சிலரின் உரத்த கனவுகளும் முறையாகப் பயிற்றுவிக்கப்பட்ட கிராமத்து மக்களின் தீர்க்கமான செயல்பாடுகளும் இணைந்து நிகழ்த்திய சாதனை.

பணியாளர்கள் டயனீஷியஸ், தொபியாஸ், எட்வின் ஆகிய மூவரும் கோடிமுனை முழு வளர்ச்சித் திட்டத்தின் பிதாமகர்கள். அடிப்படையில், காரித்தாஸ் இந்தியா என்னும் கத்தோலிக்க நிதிநல்கை நிறுவனத்திடம் நிதியுதவி கோரி எழுதப்பட்ட திட்டம். ஒரு கடற்கரைக் கிராமத்தின் ஒருங்கிணைந்த வளர்ச்சி எப்படி இருக்க வேண்டும் எனச் சிந்தித்து அதற்கெனத் திட்டம் தீட்டியவர்கள் முதல் இருவர். பிரசீலில் உருவான 'அடித்தளப் பங்குச் சமூக' (Base-level Ecclesial Communities- BEC), மணிலாவில் (ஃபிலிப்பைன்ஸ்) வெற்றிகரமாய் இயங்கிவந்த 'கிறித்தவச் சமூகத் திட்டம்' Christian Community Programme- CCP) ஆகியவற்றின் அடிப்படைக் கருதுகோள்களை உள்ளூர்ச் சூழலுக்கேற்றவாறு வடிவமைத்துக் கோடிமுனையில் செயல்படுத்தியவர் பணி. எட்வின். இவரைத் தொடர்ந்து 1983இல் கோடிமுனைக்கு வந்த சேசு சபையினரான பணி. மாற்கு ஸ்டீஃபன், முழு வளர்ச்சி சங்கத்தின் தொடர்ந்த இயக்கத்துக்கு ஆதரவாய் உழைத்ததோடு அன்பியங்களின் பரவலாக்கத்துக்கும் உறுதுணையாய்ச் செயல்பட்டார் (பார்க்க: அத்தியாயம் 3). புனைவு எழுத்தாளரும் கட்டுரையாளருமான இவர், தலித் மறுமலர்ச்சி இயக்கங்களின் தீவிர ஆதரவாளராக இயங்கிவருகிறார். கோடிமுனைக் 'கல்லறைத் தகர்ப்பு' உள்ளிட்ட தனது பணிக்கால அனுபவங்களைப் 'பேருவகை' என்னும் தன்வரலாற்று நூலில் (பேருவகை, தமிழினி, சென்னை, 2019) விரிவாக எழுதியுள்ளார் (பார்க்க: அத்தியாயம் 3).

கோடிமுனை முழு வளர்ச்சிச் சங்கம் முழுவீச்சில் இயங்கிவந்த காலத்தை நினைவு கூர்ந்தார் சமூக ஆர்வலர் ஃபெர்னாண்டஸ் (65, கோடிமுனை):

"கோடிமுனையின் பொற்காலம் அது. ஒரு தேன்கூடு போல ஊர் எப்போதும் பரபரவென்று சுறுசுறுப்பாக இருந்தது. ஊரின் வளர்ச்சிக்காக உருவாக்கப்பட்டிருந்த ஒவ்வொரு குழுவிலும் எப்போதும் ஏதேனும் ஒரு செயல்பாடு நடந்துகொண்டேயிருந்தது. நீதிக்குழு ஊரிலுள்ள கோஷ்டிச் சண்டைகளுக்கு முடிவு கட்டியிருந்தது. நிலுவையிலிருந்த நீதிமன்ற வழக்குகள் ஏறத்தாழ அனைத்தும் முடித்து வைக்கப்பட்டிருந்த நிலையில், மாவட்டக் காவல்துறைக்குப் பெருத்த சந்தேகம் ஏற்பட்டது. 'கோடிமுனையிலிருந்து மாதம்தோறும் வழக்குகள் வந்துகொண்டேயிருக்கும், ஆண்டுதோறும் ஒன்றிரண்டு கொலைவழக்குகளும் வரும்; மூன்று வருடங்களாக ஒரு வழக்குகூடப் பதிவாகவில்லையே? கோடிமுனையில் என்னதான் நடக்கிறது என்று விசாரித்து வாருங்கள்' என்று மாவட்டத் தலைமையகம் காவல் அதிகாரிகளைக் கோடிமுனைக்கு அனுப்பி புலன் விசாரணை செய்தது. ஊரில் சில எதிர்ப்பாளர்கள் இருக்கத்தான் செய்தார்கள். ஆனால் அவர்களும்கூட மாற்கு சாமியார் காலத்தில் ஊரில் கல்லறை இடிப்புப் பிரச்சனை எழுந்தபோது ஊரோடு இணைந்து கொண்டார்கள். அன்றுவரை கோடிமுனை கண்டிராத அளவில் ஊரே ஒன்றுதிரண்டு நின்ற காட்சியை மறக்க முடியாது. உலகுக்கு அது ஒரு படிப்பினை. இந்த ஒற்றுமைதான் அதிகாரத்தில் இருப்பவர்களுக்கு அபாயமணியாய் ஒலித்தது என்று நினைக்கிறேன். சரியான முறையில் பயிற்றுவிக்கப்பட்டு, கருத்துத் தெளிவோடு குழுவாக வேலை செய்து கொண்டிருக்கும் மக்களுக்கிடையில் அரசியல் தரகர்களுக்கும் இடமில்லாமல் போனது. திரும்பிப் பார்க்கையில் எல்லாமே ஒரு இனிமையான கனவு போல..."

பத்தாண்டுகள் வெற்றிகரமாகத் தொடர்ந்த இந்த அரும்பெரும் வரலாற்று முயற்சி, சமயத் தலைமையின் முடிவு காரணமாகத் துடைத்தெறியப்பட்டது. கோடிமுனை மக்கள் மனதில் பெரும் கொந்தளிப்பை ஏற்படுத்திய கெடுவாய்ப்பு அது. 'கோடிமுனை முழு வளர்ச்சிச் சங்கம் இல்லாமலானதல்ல, ஆக்கப்பட்டது' என்கிறார் ஃபெர்னாண்டஸ்:

"ஊரில் எழுந்த இயக்கம் ஏன் இல்லாமல் போகவேண்டும்? ஊருக்குப் புதிதாக வந்த ஒரு சாமியார் வாரநாள் வழிபாட்டு வேளையில் ஒற்றை வாக்கியத்தில் கதையை முடித்துவிட்டார். 'இன்றோடு கோடிமுனை முழு வளர்ச்சி சங்கம் கலைக்கப் படுகிறது' என்றார். 10 வருடப் போராட்டம், உழைப்பு, கனவு எல்லாம் அந்த ஒற்றை வாக்கியத்தில் தகர்ந்து போனது. 32 வருடங்கள் கடந்துபோனாலும் அந்தக் காயம் ஊர் மக்கள் மனதில் ஆறவில்லை. . ."

2004 சுனாமி மறுகட்டுமானக் காலத்தில் கன்னியாகுமரிக் கடலோர மீனவர்களின் எதிர்காலம் குறித்து பல்வேறு துறை வல்லுநர்கள், சிந்தனையாளர்களுடன் உரையாடல்கள் நிகழ்த்திக் கொண்டிருந்தேன். அவற்றின் ஒரு பகுதியாக சுனாமி மறுகட்டுமானப் பின்னணியில் 'கடற்கரையில் சமய இடையீடுகள்' குறித்து பணியாளர்கள் டயனீஷியஸ், எட்வின், நற்சீசன் போன்றோருடன் கலந்துரையாடினேன். 'ஆழிப் பேரிடருக்குப் பின்' (தொகுப்பாசிரியர்கள்: வறீதையா கான்ஸ்தந்தின், ஜோசஃப் ஜஸ்டஸ்; காலச்சுவடு, 2006) என்னும் நூலில் இவ்வுரையாடல்கள் தொகுத்து வெளியிடப்பட்டுள்ளன. கன்னியாகுமரிக் கத்தோலிக்க சமய நிறுவனம் இந்நூலை விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளும் என்னும் எதிர்பார்ப்பு பொய்த்துப் போனது. 'தோழன்' என்னும் கத்தோலிக்கச் சமய இதழ் கொணர்ந்திருந்த சுனாமி சிறப்பிதழில் பணி. எட்வினின் நீண்ட நேர்காணல் பதிவாகியிருந்தது.

'அடித்தளச் சமூகக் குழுவாக்கம்' என்னும் கருத்தியல் தோற்றுப் போய்விட்டதா? இன்றளவில் தென்னமெரிக்க, அமெரிக்க, ஐரோப்பிய நாடுகளிலும் ஐக்கிய நாடுகள் சபையிலும் இக்கருத்தியல் பேசுபொருள் ஆகியிருக்கிறது. கேரளாவில் அயல் கூட்டம், அயல் சபா, குடும்பஸ்ரீ உள்ளிட்ட பல்வேறு திட்டங்கள் மாநில அரசுத் தரப்பில் வெற்றிகரமாக நிகழ்ந்து வருகின்றன. ஏறத்தாழ மூன்று இலட்சம் அடித்தளக் குழுக்கள் அங்கே இயங்கிவருகின்றன. எல்லாவற்றையும் விட முக்கியமாக, அடித்தள மக்களின் சமூக, பொருளாதார அரசியல் விடுதலைக்கான நம்பகமான தீர்வாக இக்கருதுகோள் பரிணமித்துள்ளது. இக்கருதுகோள் இந்தியாவில் முதன்முதலில் செயல்வடிவம் பெற்ற கிராமம் குழுவாக்கக் கருத்தியலுக்கு அறிமுகமான சூழலைப் பணி.எட்வின் பகிர்ந்து கொண்டார்.



# குழுவாக்கம் என்னும் கருதுகோள்

**பணி.எம்.ஜெ.எட்வின்**

குருமடத்தில் நான் பயின்றுவந்த காலத்தில் 'Group Alive, Church Alive' என்றொரு புத்தகம் வெளிவந்தது. அதை ஏறத்தாழ இவ்வாறு மொழிபெயர்க்கலாம்: குழு உயிர்ப்புடன் இருந்தால், திருச்சபை உயிர்ப்புடன்

இருக்கும். ‘திருச்சபையின் பலம் என்பது அதன் குழுச் செயல்பாடுகளின் பலத்தைப் பொறுத்தது’ என விளக்கிய நூல். இதழியல் கற்றுவந்த காலத்தில் குழுவாக்கத்தின் வலிமை என்னவென்பதைக் கற்றுக்கொள்ள வாய்த்தது. இதழியல் படித்த காலத்தில் ‘எழுதி எல்லாவற்றையும் சாதித்துவிடலாம்’ என்று நினைத்திருந்தேன். ஆனால், ஆய்வுகளின் முடிவுகள் வேறுவிதமாய்ப் பேசின: ‘எழுதுவதால் மட்டும் ஒன்றும் சாதித்து விடமுடியாது; எழுத்தை வாசித்து, விவாதித்து, முடிவு செய்யும் குழுக்களும் எழுத்தும் சேர்ந்து இயங்கினால் மட்டுமே மாற்றம் வரும்’. வானொலி மன்றம் ஓர் உதாரணம். அந்த மன்றத்தில் விவசாயிகள் ஒலிபரப்பைக் கேட்டு, விவாதித்து முடிவெடுக்கிறார்கள், அதனால் மாற்றம் வருகிறது. பத்திரிகையில் வெளியாகும் கருத்துகளை விவாதிக்க அப்போது நிறைய குழுக்கள் இருந்தன.

இலத்தீன் அமெரிக்காவில் எல்லோரையும் உட்படுத்தி (inclusive) ஒருங்கிணைக்கும் (federate) குழுக்கள் தோன்றியிருந்தன. சிறு குழுக்கள் விவாதிக்கவும், அக்குழுக்கள் வெவ்வேறு மட்டங்களில் இணைக்கப்பட்டும் இயங்கின. அதனால் வரும் பலத்தை அவர்கள் கண்டுகொண்டனர். அதுவரை பாதிரியார்கள் மட்டுமே பைபிள் விளக்கம் கொடுத்து வந்த நிலை மாறி, காலத்தின் சூழலுக்கேற்றவாறு மக்களே பைபிளுக்குப் புதிய விளக்கங்கள் கொடுக்கத் தொடங்கி, ‘விடுதலை இறையியல்’ என்னும் புதிய சிந்தனைப் போக்கு உருவானது. ஒடுக்குதல், ஏற்றத்தாழ்வுகளிலிருந்து மக்களை விடுவிக்கும் புதிய இறையியல் ‘விடுதலை இறையியல்’. அடிமட்டக் குழுக்களின் விவாதங்களில் எழும் சிந்தனைகளின் கோவைதான் விடுதலை இறையியலாக இலத்தீன் அமெரிக்க இறையியலாளர்களால் முன்வைக்கப்பட்டது. இவை எல்லாவற்றையும் படித்ததன் அடிப்படையில் கோட்டார் திருச்சபைக்கான ஒரு முன்மொழிவுத் திட்டத்தைத் தயாரித்து 1973இலேயே கொடுத்திருந்தேன்.

இதழியல் படிப்புக்கு முன்னால் நான் ஃபிலிப்பைன்ஸுக்கு ஒரு பயிற்சிக்காக அனுப்பப்பட்டேன்- மேய்ப்புப் பணிப் பயிற்சி (pastoral course). அந்தப் பயிற்சிக்கு 29 நாடுகளிலிருந்து பாதிரியார்கள், கன்னியர்கள் வந்திருந்தனர். அங்கு வெவ்வேறு தலைப்புகளில் பயிற்சிகள்/ விவாதங்கள் நடந்து கொண்டிருந்தன. மணிலாவில் ‘கிறித்தவ சமூகத் திட்டம்’ (Christian Community Programme- CCP) என்றொரு திட்டத்தை ஒரு பாதிரியார் நடத்திக் கொண்டிருந்தார். அவருடைய உரைகளில் இத்திட்டம் குறித்து விரிவாகப் பகிரக்கேட்டேன். இந்தச் சிறு குழு அமைப்புகளை நடத்திச் செல்வதற்கான சிந்தனைத் தொகுப்புகளை (modules) அவர்கள் உருவாக்கியிருந்தனர். சிறு குழுவாக்கத்தின் அடிப்படைக் கூறுகளை நான் ஆழமாகப் புரிந்து கொள்வதற்கு அவை வெகுவாக உதவின.

இதழியலில் சிறப்புத் தேர்ச்சியுடன் நாடு திரும்பியபோது பத்திரிகை நடத்துகிற பொறுப்பைத்தான் எனக்குக் கொடுப்பார்கள் என்று எண்ணினேன். ஆனால் என்னைக் கோடிமுனைப் பங்குக்கு ஆயர் அனுப்பிவைத்தார்.

பல்வேறு கருத்தியல்களைப் படித்துவிட்டு வந்த என்னைக் கள எதார்த்தத்தில் வேர்பிடிப்பதற்காகவே அங்கு அனுப்பியதாய்ப் பிற ஆயர்கள் என்னிடம் சொன்னார்கள். கோடிமுனையில் ஒரு குறுகியகால அனுபவம் பெற்ற பிறகு, எனது களமான இதழியல் வேலைக்கு அனுப்புவார்கள் என்று கருதினேன். ஆனால் கோடிமுனையில் நான் தொடங்கிவைத்த புதிய முயற்சிகளின் காரணமாக எனக்குப் பணிமாற்றல் கொடுப்பதற்கு ஐந்தரை வருடங்கள் ஆகிவிட்டது! குழுவாக்க சிந்தனைப் பின்னணியோடுதான் நான் ஊருக்குப் போனேன். ஆனால் ஊரின் சூழலைப் பார்த்தபோது கற்றதைச் செயல்படுத்தச் சரியான களத்துக்குத்தான் நான் வந்திருக்கிறேன் என்று புரிந்தது.

அந்த ஊர் வன்முறை மலிந்த ஊர்; 300க்கு மேற்பட்டோர் குற்ற வழக்குகளில் பதிவாகியிருந்தனர். காவலர்களுக்கும் வக்கீல்களுக்கும் நிரம்பப் பழக்கமான இடம். கொலைகள்கூட நடந்திருக்கின்றன. ஊரே கட்சிகளாகவும் சண்டைக் குழுக்களாகவும் பிளவுபட்டுக் கிடந்தது. ஏன் இந்த மக்கள் பல்வேறு ஆட்களுக்குப் பின்னால் போய்க் ‘கட்சி’ ஆகிறார்கள்? சாதாரண மனிதர்கள் அவர்கள்; தங்களுக்கென்று குரலற்ற மனிதர்கள். தங்கள் தேவைகளை எடுத்துச் சொல்லிப் பூர்த்திசெய்து கொள்ளும் தளங்கள் மறுக்கப்பட்ட மனிதர்கள். ஏதேனும் ஒரு கட்சியை- குடும்பம், சேகரம்- சார்ந்தே வாழவேண்டிய நிர்பந்தத்தில் சிக்கிக் கிடக்கிறார்கள். சேகரத்துப் பிரதானிகள் சொல்வதுபோல் ஆடுவார்கள்; சுயமாய்ச் சிந்தித்துச் செயல்படும் வாய்ப்பு அவர்களுக்குக் கைகூடவில்லை. அப்படி ஒரு தளம் அவர்களுக்கு வேண்டும். அது அவன் குரலுக்கு மதிப்பளித்து அவனுக்கொரு உறவுப் பிடிப்பையும் கொடுப்பதாக அமையவேண்டும். சிறு குழுவில் அது சாத்தியமாகும்.

30 வீடுகளை இணைத்து ஓர் அடித்தளக் குழு. அந்தக் குழுவிலிருந்து ஊரை நிர்வாகம் செய்ய உருவாக்கிய நிதி, நீதி, கல்வி, திட்டம், மறுமலர்ச்சி மன்றம் உள்ளிட்ட ஒவ்வொரு குழுவுக்கும் ஒன்றிரண்டு பிரதிநிதிகள். அடித்தளக் குழுவிலிருந்து ஐவர் பொதுக்குழுவுக்கும் ஒருவர் செயற்குழுவுக்கும் தேர்ந்தெடுக்கப்படுவார். அவர்களுக்குத் தொடர்ந்து பயிற்சிகள் கொடுத்துக் கொண்டிருந்தோம். எந்தச் சிக்கல்/ தேவை எழுந்தாலும் அடித்தளக் குழுவுடன்தான் விவாதித்தாக வேண்டும். அடித்தளக் குழு உயிர்ப்புடன் இயங்குவதற்கு இந்த விவாதங்கள் உதவியாக இருந்தன. நிறுவனத்தின் அதிகாரக் கொடுக்கு அந்த முயற்சியை நீடிக்க அனுமதியாமல் போனது எனினும் கோடிமுனை முனைவின் அதிர்வுகள் நீடிக்கின்றன. இந்தியக் கத்தோலிக்கச் சமயத்தில் ‘அன்பியம்’ என்னும் பெயரில் சிறுகுழுவாக்கம் தொடரவே செய்கிறது. ஆனால் அதன் இலக்கும் போக்கும் திசைமாறிவிட்டது. மக்களாட்சியின் மைய விசையான ‘கடைக்கோடி மனிதனின் குரல்’ ஒலிப்பதற்கான அரசியல் தளத்தை உருவாக்குவது இப்போதும் சாத்தியம்தான்.

'கோடிமுனை முழு வளர்ச்சி சங்க' வரலாறு உலகுக்குச் சொல்லப்பட வேண்டிய ஒன்று. 'முழு வளர்ச்சிச் சங்க உருவாக்கத்தில் தங்களை ஈடுபடுத்திக் கொண்ட ஆர்வலர்களில் சிலரைச் சந்தித்து அவர்களது அனுபவங்களைப் பகிர்ந்துகொள்ள ஏற்பாடு செய்ய முடியுமா' என்று பணி. எட்வினைக் கேட்டுக்கொண்டேன். அவ்வாறு அன்னாரும் நான்கு ஆர்வலர்களும் பங்கேற்ற உரையாடலின் *(24.02.2020)* பதிவு:

**வறீதையா கான்ஸ்தந்தின்:** *உங்கள் ஊரில் முழு வளர்ச்சி சங்கம் நிறுவிய காலத்தில் நிலவிய சமூக, அரசியல் சூழலைப் பற்றி....*

**லீன்** *(63,கோடிமுனை, தலைமை ஆசிரியர், பணிநிறைவு):* அந்தக் காலத்தில் வேறு பல கடற்கரை ஊர்களைப் போலவே எங்கள் ஊரிலும் அடிமைத்தனம் இருந்தது. நான்கு சேகரங்கள்– பலமான குடும்பக் கிளைகள் – 'பிரதானி' ஸ்தானத்தில் 'சட்டம்பிகள்' போல– இருந்தன. எங்கள் ஊர்ப்புறத்தில் அவர்களை 'ஊச்சாளிகள்' என்போம். ஊர்க் கமிட்டியில் வேறு யாரும் கருத்துச் சொல்லவோ, ஏதேனும் ஒரு நல்ல காரியத்தை முன்வைக்கவோ முடியாது. மற்றவர்களுக்கு மதுபானம் வாங்கிக் கொடுத்துச் சண்டைபோட அனுப்பிவைப்பதுதான் இந்த சேகரங்களின் வேலை. பிரதானிகளின் அதிகாரத்தில் மக்கள் அடிமைகள் போல இருந்தார்கள். இந்தப் பின்னணியில்தான் எங்கள் ஊரில் மக்களைப் பிரதிநிதித்துவப்படுத்தி முழு வளர்ச்சி சங்கம் நிறுவும் பணி தொடங்கப்பட்டது...

**மேரி தெரஸ்** *(67, சமூக செயல்பாட்டாளர், கோடிமுனை):* பணி. எட்வின் எங்கள் ஊரில் பொறுப்பேற்றபோது 'அடித்தளக் கிறித்தவ சமூகக்' கட்டமைப்பை அறிமுகப்படுத்தினார். எங்கள் ஊரை 16 சமூகங்களாகப் பிரித்து, ஒவ்வொரு சமூகத்திலும் ஒரு தலைவரைத் தேர்ந்தெடுத்தோம். சமயப் பிரார்த்தனை நடத்துவதோடு ஊரின் பிரச்சினைகளை அங்கு விவாதிப்போம். சமயத் தலைமைகளின் மட்டத்தில் பெரிய எதிர்ப்பு இருந்தது, ஊரிலுள்ள ஊச்சாளிகளும் கடுமையாக எதிர்த்தார்கள். இந்த முயற்சியைப் பற்றி மக்கள் என்ன நினைக்கிறார்கள் என்று எட்வின் சாமியார் அறிந்துகொள்ள விரும்பினார். 'ஒவ்வொரு சமூகத்திலிருந்தும் இரண்டு பிரதிநிதிகள் வீடு வீடாகச் சென்று, மக்களின் கருத்தைக் கேட்டு வாருங்கள், அதனடிப்படையில் நாம் விவாதிக்கலாம்' என்று எங்களிடம் அவர் கேட்டுக்கொண்டார். அதன்படி நாங்கள் (ஆர்வலர்கள்) ஊர் முழுக்க ஓர் ஆய்வு நடத்தினோம்.

இராணுவத்தில் வேலை பார்த்து, ஓய்வுக்குப் பிறகு ஊருக்கு வந்து கடலுக்குப் போகும் பர்ணபாஸ் என்பவர் எதிர்ப்பாளர்களில்

முக்கியமானவராய்த் தெரிந்தார். அவர் படித்தவர், உலகம் தெரிந்தவர், ஆனாலும் இரவு பத்துப் பதினொரு மணிக்குப் பிறகு சாமியார் பங்களாவைச் சுற்றிச் சுற்றி வசைபாடுவார். ஊரே அதிர்கிற மாதிரி மிரட்டும் குரல் அவருக்கு. பங்கு சாமியார் சொன்னவாறு எல்லாக் குடும்பத்தையும் போய்ச் சந்தித்தாக வேண்டிய நிர்ப்பந்தமும் இருந்தது. பர்ணபாஸ் வீட்டுக்கு நானே போனேன். கெட்டவார்த்தை போட்டு என்னை விரட்டப் போகிறார் என்று நினைத்தவாறே படிக்கட்டில் கால் வைத்தேன். 'வாம்மா வாம்மா, வந்து உட்கார்' என்று அன்போடு கூப்பிட்டார். 'பிள்ளைக்கு ஒரு சாயா போடு' என்று பின்கட்டில் குரல் கொடுத்தார். சாமியார் சொல்லியனுப்பிய கருத்தை அவரிடம் பேசினேன். எந்த இலக்கை நோக்கி இந்த முயற்சியைத் தொடங்கினோமோ அதை மிகத்தெளிவாக அவரே பேசினார். 'அந்தச் சாமியார் ஒரு வாழும் புனிதர்; ஊரின் வளர்ச்சிக்காக அருமையாக வேலை செய்கிறார்' என்றார். சட்டென்று நான் கேட்டேன்– 'அப்படியென்றால் நீங்கள் ஏன் தினமும் ஊர் உறங்கும் நேரத்தில் சாமியார் பங்களாவைச் சுற்றிச்சுற்றி வசைபேசி அவரை மிரட்டுகிறீர்கள்?' 'மதுபானம் வாங்கித் தந்து குடிக்க வைத்து, இப்படிப் பேசு என்கிறார்கள், நான் என்ன செய்வது?' என்று பதில் சொன்னார். கூடவே என்னிடம் தனியாக ஒரு கேள்வி கேட்டார்– 'மகளே, நீ இந்தப் பிராயத்தில் (எனக்கு அப்போது 22 வயது இருக்கலாம்) இப்படி வீடு வீடாய் நடக்க எப்படி உன் அப்பா சம்மதித்தார்?' 'நான் தப்பாய் எதுவும் செய்யவில்லை என்று அப்பாவுக்குத் தெரியும். இப்படி வராவிட்டால் உங்கள் மனதில் என்ன இருக்கிறது என்று எப்படித் தெரிந்து கொண்டிருப்பேன்?' என்று நான் திருப்பிக் கேட்டபோது சிரித்தார்.

வாரயிறுதியில் நிகழும் மீளாய்வுக் கூட்டத்தில் இந்தச் செய்தியை நான் சொன்னபோது சாமியார் உட்பட யாரும் நம்பவில்லை! மக்களிடம் இந்தப் புதிய முயற்சிக்கு ஆதரவுதான், எதிர்ப்பு இல்லை என்பதற்கு அந்தச் செய்தியே போதுமானதாக இருந்தது. 16 சமூகங்களின் மக்களும் இதற்குப் பூரணமான ஆதரவு தெரிவித்திருந்தனர். முழு வளர்ச்சி சங்கம் எங்கள் ஊரில் சிறப்பாகச் செயல்பட்டுவந்ததைக் கவனித்த மறைமாவட்டத் தலைமை, புதுதில்லியில் இயங்கிவரும் காரித்தாஸ் இந்தியா (நிதி வினியோக) நிறுவனம் வழியாக எங்கள் ஊரின் வளர்ச்சித் திட்டத்துக்கு நிதியுதவி செய்ய ஏற்பாடு செய்ய முன்வந்தது– ஒரு நிபந்தனையுடன்: திட்டச் செலவின் ஒரு பகுதியை ஊர் ஏற்கவேண்டும் (Partial grant)...

**லீன்:** அந்தச் செயல்திட்டத்தை (project) நான்கு பேர் உட்கார்ந்து தயாரித்தோம். பணியாளர்கள் டயனீஷியஸ், தொபியாஸ்,

எட்வினுடன் நானும். அவர்கள் மூன்றுபேரும் விவாதிக்க, நான் எழுதினேன். ஊரின் வளர்ச்சிக்கு என்னென்ன தேவைப்படுகிறது என்னும் பகுப்பாய்வின் அடிப்படையில் தயாரிக்கப்பட்ட திட்டம். கடற்கரை ஊர்களில் முதன்முதலாக நிறுவப்பட்ட கோடிமுனை சமூகக் கலையரங்கம் அந்தத் திட்டத்தினால் வந்ததுதான்.

**வறீதையா:** அடித்தளச் சமூகமும் முழு வளர்ச்சி சங்கமும் மும்முனை எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டியிருந்தது அல்லவா? பிரதானிகளிடமிருந்த அதிகாரம் சாதாரண மக்களுக்குக் கைமாறுகிறது என்கிற பதைபதைப்பின் காரணமாக ஊச்சாளிகள் உருவாக்கிய எதிர்ப்பு; பொதுவாழ்க்கை பெண்களுக்கு முற்றாக மறுக்கப்பட்டிருந்த அன்றைய பழமைவாதச் சூழலில் பெண்கள் அதிகாரத்தைப் பகிர்ந்துகொள்ள முன்வந்ததால் ஆணாதிக்க மனநிலையில் ஏற்பட்ட பதைபதைப்பு. பிரதானிகள் பழமைவாதத்தைத் தங்கள் ஆயுதமாய்ப் பயன்படுத்திக் கொண்டனர். பின்னாளில் அடித்தளக் கிறித்தவச் சமூகக் கருதுகோளின் வெற்றி சமயத் தலைமைக்கு அச்சுறுத்தலாய்த் தோன்றியது. பாதிரியார்களின் கையிலிருக்கும் அதிகாரத்தை இழக்க நேரிடும் என்கிற அச்சம் அது. முழு வளர்ச்சி சங்கத்தை ஆதரித்து ஊக்குவித்த சமயத் தலைமை, அதிகாரம் மக்களின் கைகளுக்குப் போவதை விரும்பவில்லை...

**லீன்:** காரித்தாஸ் இந்தியாவுக்கு எழுதியனுப்பிய புராஜக்ட் சற்று தாமதமாக அனுமதிக்கப்பட்டு, நிதியும் ஏற்பாடாயிற்று. ஆனால் திட்டத்தை நடப்பாக்குவதற்கு ஊரில் ஒரு கட்டமைப்பு தேவைப்பட்டது. இங்கே பார்த்தால் நான்கு சேகரங்களும் அவற்றின் அடிமைகளும் ஊரை ஆட்டிப்படைத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த புராஜக்ட் ஏழைகளுக்கானது- வீட்டுவசதிக் குழு, நாணய வசதி சங்கம், மீனவர் அமைப்பு எல்லாம் அடித்தள மக்களுக்கானது. இந்தத் திட்டத்தைச் செயல்படுத்தச் சேகரங்கள் அனுமதிக்குமா? இவர்களைத் தாண்டி, திட்டத்தைச் செயல்படுத்துவதற்கு ஒரு கிறிஸ்மஸ் இரவில் ஆரம்பிக்கப்பட்டதுதான் 'கோடிமுனை முழு வளர்ச்சி சங்கம்'. அதன் தலைவராக பனியடிமையும் செயலராக நானும் அமர்த்தப்பட்டோம். பனியடிமை எழுத்து வாசனையற்ற மீனவர். ஆனால் துடிப்போடு செயல்படுவதற்கு அது ஒரு தடையாக இருக்கவில்லை.

**வறீதையா:** மக்கள் நலனை மக்கள் கையில் கொண்டு வருவது சாத்தியமா?

**மேரி தெரஸ்:** அடித்தளக் கிறித்தவச் சமூகம் எங்கள் ஊரில் அறிமுகமாகும்வரை அது சாத்தியமில்லை என்றுதான் நினைத்தேன்.

முழு வளர்ச்சி சங்கமும் அடித்தளச் சமூகக் கட்டமைப்பும் செயல்படத் தொடங்கியபோது மக்கள் பொறுப்புகளை ஏற்றுக்கொண்டு செயல்படத் தொடங்கினார்கள். மக்கள் ஈடுபடத் தொடங்கினால் அதிகாரம் அவர்கள் கையில் வருவது சாத்தியம்தான். முற்காலத்தில் ஊரை இயக்கியவர்கள் காரியஸ்தன்மார் (பிரதானிகள்); அதன் பிறகு ஊர்க் கமிட்டி என்றொரு அமைப்பு வந்தது. கமிட்டியிலும்கூட, சாதாரண மக்கள் யாரும் உள்ளே போய்ப் பேச முடியாத நிலைமைதான் நீடித்து வந்தது. கமிட்டியை உடைப்பதற்கு வாய்ப்பே இருக்கவில்லை. அடித்தளச் சமூகங்கள் உருவான பிறகு, அங்கிருந்து ஊர்க் கமிட்டிக்குப் பிரதிநிதிகளாக சாதாரண மனிதர்கள் வரமுடிந்தது. அது சாதாரணமான வேலை அல்ல, ஒரு புரட்சி என்று சொல்லவேண்டும். அடித்தளச் சமூகம் என்பது முழுக்க முழுக்க பணி. எட்வின் அவர்களுடைய முன்மொழிவு.

**வறீதையா:** இந்தப் புது முயற்சிக்கு ஊர் மக்களின் ஆதரவை எப்படித் திரட்டினீர்கள்?

**லீன்:** எடுத்த எடுப்பிலேயே ‘சமூகம்’ என்று எதையும் நிறுவ முயற்சிக்கவில்லை. சாமியார் ஒரு தெருவுக்குப் போவார். அங்கே வழக்கமாக நடக்கும் பிரார்த்தனையில் கலந்துகொள்வார். பிறகு மக்களின் பிரச்சினைகளை விசாரித்தறிவார். மக்கள் சாமியாருடன் அணுக்கமாக மனம்திறந்து பேசத் தொடங்கினார்கள். இதன் அடுத்த கட்டம்தான் அடித்தளச் சமூகம்.

**ரமணி (56, சமூக ஆர்வலர், கோடிமுனை):** அப்போது ஊரில் சாமியாருக்கு உதவ இரண்டு குருமாணவர்கள் இருந்தார்கள் - அருள்ராஜ், ஆல்பின் ராபி. இவர்கள் இருவரோடு நாங்களும் தெருக்களுக்குப் போய் வெவ்வேறு பொருளில் நழுவுப்படக் காட்சிகள் நடத்துவோம். என்றைக்கு, எந்தத் தெருவில் என்ன படக்காட்சி நடத்துவது என்பதை முன்கூட்டித் திட்டமிடுவோம். படக்காட்சியைத் தொடர்ந்து ‘இதிலிருந்து என்ன தெரிந்து கொண்டோம்’ என்று மக்களைப் பேசச் சொல்வோம். உதாரணமாக, திருமுழுக்கு யோவானின் தலையை வெட்டுகிற ஒரு படக்காட்சி... காட்சிக்குப் பிறகு மக்கள் கேட்கிறார்கள் ‘ஏன் தலையை வெட்டினார்கள்?’ சாதாரணர்கள் கருத்துச் சொல்வதற்கு வாய்ப்பளித்து, அவர்களைப் பேசத் தயார்படுத்தியது இப்படித்தான்.

**மேரி தெரெஸ்:** ஊரில் ஒரு ஓலைக் கொட்டாய் அரங்கு கட்டப்பட்டது. எட்வின் சாமியார் ஊருக்கு வந்த முதல் இரண்டு வருடங்களில் 200க்கு மேல் பயிற்சிகள் இந்தக் கொட்டாயில் நிகழ்த்தப்பட்டது. அந்தக் காலத்தில் பல சாமியார்களும் எட்வின்

சாமியாரைப் பற்றிக் கிண்டலாய்ச் சொல்வார்கள்– 'ஒரு விறகு வெட்டியைப் பார்த்துவிட்டாலும் எட்வின் சாமியார் அவனைக் கொண்டுவந்து கோடிமுனையில் ஒரு பயிற்சி நடத்திவிடுவார்'. ஆனால் அவர் ஏற்பாடு செய்த பயிற்சிகள்தான் எங்கள் ஊர் இளைஞர்களுக்கும் மக்களுக்கும் அறிவு கொடுத்து அரசியல்படுத்தியது. நம் குரல் எடுபடுமா என்று தயங்கி நின்ற மக்களைத் துணிந்து நின்று பேசவைத்தது. சில வேளைகளில் ஞாயிற்றுக்கிழமை மறைக்கல்வி வகுப்புகளைத் தவிர்த்துவிட்டு எல்லா மாணவர்களையும் அரங்கில் கூட்டிப் பேசுவோம். 'இதுதான் கோடிமுனையின் வரைபடம். ஊரில் நான்கு சண்டைபோடும் சேகரங்கள். சண்டை போடுபவர்களைச் சேகரத்திலுள்ள மற்ற குடும்பங்களுக்குப் பிடிக்காது என்றாலும் சண்டை என்று வந்துவிட்டால் வேறு வழியில்லாமல் சேகரத்தோடு சேர்ந்து சண்டைபோடப் போய்விடுவார்கள். நம் ஊர் இப்படியேதான் இருக்கவேண்டுமா? நாம் வளரவேண்டாமா?' இது போன்றவொரு கேள்வியை முன்வைத்து விவாதிக்கச் சொல்வோம்.

ஊரில் இருந்த பக்தசபைகள் (பக்தி அமைப்புகள்), மறைக்கல்வி மன்றம், பிற அமைப்புகளுடன் தொடர்ந்து உரையாடிக் கொண்டிருந்தோம். ஊர் முழுவதும் ஒரு பொதுக்கருத்து உருவாகத் தொடங்கியது. கடினமான முயற்சிதான். ஆனால் மாற்றம் வரும் என்று உறுதியாக நம்பினோம். அந்த நம்பிக்கையும் கூட்டு முயற்சியும் வீண்போகவில்லை.

முன்பெல்லாம் ஊரில் தெருவிளக்கு எரியாவிட்டால் சாமியாரிடம் போய்ச் சொல்வோம். அதுதான் வழமை. எட்வின் சாமியாரிடம் போனால், 'ஊர்த் தலைவரிடம் சொல்லுங்கள்' என்பார். 'அப்படியென்றால் நீங்கள் எதற்கு ஊரில் இருக்கிறீர்கள்?' என்று மக்கள் சாமியாரிடம் கேட்டார்கள். 'பொறுப்பும் அதிகாரமும் உங்களிடம்தான் இருக்கிறது. நீங்கள்தான் அதைச் செய்யவேண்டும். எல்லாம் சரியாகப் போகிறதா என்று மேற்பார்வை செய்வதுதான் என் வேலை' என்று சாமியார் சொல்வார். மக்களைப் பொறுப்பேற்க வைத்ததுதான் இந்த மாற்றத்தின் மையம். 'ஓர் ஊர், சாமியார் என்கிற தனிமனிதரை நம்பியிருந்தால் அந்தச் சாமியார் ஊரை விட்டுப் போனதும் வளர்ச்சி நின்றுபோகும். மக்கள் பொறுப்பேற்றால்தான் ஊரில் தடையற்ற வளர்ச்சி சாத்தியப்படும்' என்று மக்களிடம் அவர் தெளிவுபடுத்திக் கொண்டிருந்தார்.

அதிகாரம் கைவிட்டுப் போகிறது என்கிற படபடப்பு பிரதானிகளுக்கு ஏற்பட்ட காலம் அது. எங்களைப் போல முன்வந்து வேலை செய்தவர்களுக்கு வசைகளும் மிரட்டல்களும் நிறைய

வந்தன. எல்லாவற்றுக்கும் மேலாக (எட்வின்) சாமியார்தான் பெரும் எதிர்ப்புக்கு உள்ளானார். இரவு முழுவதும் சாமியார் பங்களாவைச் சுற்றி வசைகளும் மிரட்டல்களும் கேட்டுக் கொண்டிருக்கும். சாமியார் எப்போது தூங்கப்போவார் என்பதே தெரியாது. ஆனால் காலையில் வழிபாடு தடையின்றி நடந்துவிடும். வசை பேசும்போது அமைதியாகக் கேட்டுக் கொள்ளும் சாமியார், மறுநாள் நேராக அந்த நபரின் வீட்டுக்கே போய்விடுவார். 'என்னுடைய பேச்சோ கருத்தோ உங்களைக் காயப் படுத்தியிருக்கலாம், என்னை மன்னித்துவிடுங்கள்' என்பார். ஊர்ச் சாமியார் வீடுதேடி வந்து மன்னிப்புக் கேட்பது என்பது எங்கேயும் இல்லாத வழமை. அன்றோடு அந்த நபர் நாய்க்குட்டி போல இவர் பின்னால் வரத் தொடங்கிவிடுவார். சாமியார் எல்லோருடனும் எப்போதும் பேசத் தயாராக இருந்தார். கண்மண் தெரியாமல் அவரை எதிர்த்தவர்களே பிறகு அவருடைய கருத்துக்கு ஆதரவாக நின்று பக்கபலமாக வேலைசெய்யத் தொடங்கினார்கள். சாமியார் அவ்வப்போது புனித பவுலின் வார்த்தைகளை மேற்கோள் காட்டுவார்- 'பொழுது சாய்வதற்குள் உங்கள் கோபம் தணியட்டும்'. ஆன்மீகத்தோடு இணைத்தேதான் அவர் சீர்திருத்தத்தை முன்னெடுத்தார்.

**லீன்:** முழு வளர்ச்சிச் சங்கத்தின் வெற்றி வெறும் கருத்தியலின் வெற்றி மட்டுமல்ல, அந்தக் கருத்தியலை முன்வைத்தவர் மேற்கொண்ட அணுகுமுறையின் வெற்றியும் கூட. எட்வின் சாமியார் மக்களோடு மக்களாக வாழ்ந்தார். கடல்குளிக்கப் போனால் எங்களோடு வந்துவிடுவார். குளித்துவிட்டுத் தெருவில் எங்களோடு வந்து கொண்டிருப்பார் - திரும்பிப் பார்த்தால் ஆளைக் காணாது. பக்கத்து வீட்டில் சாப்பிட்டுக் கொண்டிருப்பார்கள். இவர் கேட்பார் 'என்ன சாப்பிடுறீங்க?' 'கிழங்கும் தோடும்' என்பார்கள். 'நானும் வரட்டுமா?' என்பார் இவர். 'வாருங்க சாமி' என்று அவர்கள் கூப்பிட, அங்கே போய் அவர்களோடு உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருப்பார். கருத்தை ஏற்பதற்கு முன்னால் மக்கள் சாமியாரை ஏற்றுக் கொண்டார்கள்.

**வறீதையா:** முழு வளர்ச்சி சங்கம், அடித்தளக் கிறித்தவச் சமூகம் - இந்த முனைவுகளிலிருந்து கோடிமுனைக் கிராமம் சாதித்தது என்ன?

**மேரி தெரஸ்:** அமைப்பு உடைபட்டது; சாமியாரிடம் இருந்த எல்லா அதிகாரமும் மக்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டது. இது கத்தோலிக்கக் கடற்கரை வரலாற்றில் ஒரு பெரிய மாற்றம். முன்பெல்லாம் கோடிமுனை தொடர்பாக 50, 60 வழக்குகளாவது

நிலுவையிலிருக்கும்; வாரத்துக்கு ஒன்றிரண்டு வழக்குகள் எப்படியும் காவல் நிலையத்தில் பதிவாகிவிடும். முழு வளர்ச்சி சங்கத்தின் கீழ் ஒரு நீதிமன்றம் (அமைதிக்குழு) இருந்தது. ஊரில் என்ன மோதல் என்றாலும் நீதிமன்றம் அதைச் சமரசமாய்த் தீர்த்துவைத்துவிடும். அந்தக் காலத்தில் ஒரு வழக்குகூட வெளியே போகவில்லை. கடற்கரை ஊர்களில் ஒரே வீட்டில் நான்கைந்து குடும்பங்கள் சமாளித்துக் கொண்டிருப்பது வழக்கமான பிரச்சினை. வீட்டு வசதி சங்கம் அமைக்கப்பட்டு, ஊர் சேமித்த வருவாயில் நிலம் கொள்முதல் செய்யப்பட்டு, வீட்டுக்கு மூன்று சென்ட் அளவில் வீடற்றவர்களுக்குக் கொடுத்து வீடு கட்ட உதவியது. பணம் வங்கியில் இருந்தது; அதிகாரம் சங்கத்திடம் இருந்தது; சாமியார் கண்காணிப்பாளராக இருந்தார்.

சண்டை போடத் தயார்ப்படுத்தவும் சண்டைக்குப் பிறகு வழக்கு நடத்தவுமே வாழ்நாள் சரியாக இருந்தது என்கிற நிலைமை மாறி ஊரில் சண்டைக்கான சூழல் தவிர்க்கப்பட்டது; ஊரின் வளர்ச்சிக்காகத் திட்டமிடுவது, செயல்படுத்துவது, மீள்பார்வை செய்வது போன்றவற்றில் செலவிட நிறைய நேரம் கிடைத்தது. சண்டைகள் தவிர்க்கப்பட்ட நிலையில் சேமிப்பும் பொருளாதாரமும் மேம்பட்டது. இவை எல்லாவற்றுக்கும் மேலாக, பாமர மக்கள் எனக் கருதப்பட்டவர்கள் தங்களாலும் திட்டமிடவும் செயல்படுத்தவும் முடியும் என்கிற நம்பிக்கையைப் பெற்றார்கள். இந்தப் படிப்பினைதான் மிகப்பெரிய சாதிப்பு என்று சொல்லவேண்டும். இது தவிர, பொதுவாழ்வில் பெண்ணின் பங்களிப்புக்கான வாசலைத் திறந்து வைத்தது.

**வறீதையா:** பொதுவாழ்வில் பெண்ணுக்கான இடம் எது?

**ரமணி:** என் அம்மா முழு வளர்ச்சி சங்கத்தின் உபதலைவியாக இருந்தார். பெண்கள் பொதுச் சேவையில் ஈடுபடுவதற்குக் குடும்பத்தில் (சேகரத்தில்) நிறைய எதிர்ப்பு இருந்தது. கோவில் வழிபாட்டின்போது பலிபீடத்தில் பைபிள் வாசிக்கப் போகும்போது நெட்டை மிக்கேல் என்னும் மூத்த உறவினர் என் வீட்டு வாசலில் வந்து எச்சரித்தார். ‘இதெல்லாம் நம்ம குடும்பத்துக்கு அழகில்லை’. நான் செவிகொடுக்காமல் என்பாட்டில் போய்க்கொண்டிருந்தேன். அம்மா எனக்கு மிகவும் ஆதரவாக இருந்தார். ‘வீட்டைவிட்டு வெளியே வரும் பெண்கள் மோசமானவர்கள்’ என்று சொல்லிவந்த காலத்தில் என் அண்ணன் உடன் வந்தபிறகு தைரியமாக வெளியே நடமாடத் தொடங்கினோம். சோறாக்குவது மட்டும்தான் அன்று பெண்களின் வேலையாக இருந்தது. இன்று பெண்கள் கூடிப்பேசி

நிறையச் செயல்பாடுகளில் இறங்க முடிகிறது என்றால் 'அடித்தள மக்கள் சமூக' நடவடிக்கை அந்த தைரியத்தை, பயிற்சியைக் கொடுத்தது. வசைமொழிகள் எங்கள்மீது வீசப்பட்டன, நாங்கள் சட்டை செய்யவில்லை. எங்கள் பெற்றோர்கள் எங்கள்மேல் நம்பிக்கை வைத்திருந்தார்கள்.

எட்வின் சாமியாருக்குப் பிறகு மாற்கு ஸ்டீஃபன் என்றொரு சேசுசபை சாமியார் வந்தார். அப்போது வாரநாட்கள் வழிபாட்டில் மட்டுமே பெண்கள் பீடத்தில் பைபிள் வாசித்துவந்தோம். மாற்கு சாமியார் ஞாயிற்றுக்கிழமை வழிபாட்டிலும் பெண்கள் பைபிள் வாசிக்க அனுமதித்தபோது ஊரில் சிலர் கொந்தளித்தார்கள். இரண்டு நாட்களுக்குப் பிறகு சிலர் கொடிமரத்தின் அருகில் பந்தலிட்டு, ஒலிபெருக்கி வைத்து, ஒரு நாள் முழுக்க தூய பவுல் சொன்னவற்றை மேற்கோள் காட்டிப் பேசிக் கொண்டிருந்தனர். 'பெண்கள் கோயிலில் முக்காடிட்டுக் கொள்ளவேண்டும், பேசக்கூடாது' என்றார்கள். பைபிளில் பெண்களுக்கு எதிராகச் சொல்லப்படுவதாக அவர்கள் 'கண்டுபிடித்த' எல்லாவற்றையும் தேடித்தேடிப் படித்துச் சொன்னார்கள். ஒருவர் உண்ணாவிரதம் வேறு இருந்தார். நாங்கள் அசரவில்லை, தொடர்ந்து வாசித்துக் கொண்டுதான் இருந்தோம். முதன்முதலாக ஞாயிறு வழிபாட்டில் (முதல் திருப்பலி) ஒரு பெண் பைபிள் வாசித்ததுமே ஊர் பரபரப்பாகியது. இரண்டாவது திருப்பலியில் வேறொரு பெண் வாசிக்கையில் குரு மாணவர் அருள்ராஜ் அருகில் காவலாய் நின்று கொண்டிருந்தார். அந்தப் பெண்ணின் அப்பா உட்பட நிறைய அப்பாக்கள் முன் வரிசையில் காவலாய் உட்கார்ந்திருந்தார்கள். 'நாங்கள் கோவிலில் வாசிக்கிற பெண்ணை அங்கேயே நிர்வாணமாக்கிவிடுவோம்' என்றுகூட மிரட்டிப் பார்த்தார்கள்

அன்று எங்களுக்கு இருந்த கவலையெல்லாம், இப்போது இப்படி விட்டுவிட்டால் இதுவரை கொடுத்த உழைப்பெல்லாம் வீணாகிவிடும், அதன் பிறகு இந்த ஊரை மீண்டும் தூக்கி நிறுத்தவே முடியாமல் போகும் என்பது மட்டும்தான். கேரளாவில் விசைப்படகுத் தொழிலுக்குப் போய்க்கொண்டிருந்த நிறைய ஆண்கள் எங்கள் தரப்பில் வாதாடினார்கள் 'கேரளாவில் எல்லாம் கோயிலில் பெண்கள்தான் பைபிள் வாசிக்கிறார்கள், அங்கு ஒன்றும் கெட்டுவிடவில்லை' என்று. அன்று எதிர்ப்புச் சொன்னவர்கள் எல்லோரும் பிறகு நிறையவே மாறிவிட்டார்கள்.

**மெல்க்கியாஸ்** *(67, கோடிமுனை):* எதிர்ப்புப் போராட்டம் தீவிரமாக இருந்த காலத்தில் ஒரு ஞாயிற்றுக்கிழமை காலை

வழிபாட்டுக்கு முன்னால் கோவில் முழுவதும் ஒரு துண்டுப் பிரசுரத்தைப் பரப்பி வைத்திருந்தார்கள். எல்லா வீடுகளிலும் படிக்கட்டுகளில் போட்டுவிட்டுப் போயிருந்தார்கள். சாமியார் மீதும் பெண்கள் மீதும் கற்பனையான அவதூறுகள். ஆனால் கொஞ்ச நாட்களுக்குப் பிறகு எதிர்த்தவர்கள் ஒன்றுசேர்ந்து யாரும் எதிர்பார்க்காத ஒன்றைச் செய்தார்கள். ஒரு பிரார்த்தனைக் கூட்டத்தை அவர்களே ஏற்பாடு செய்து, பிரார்த்தனைக்குப் பிறகு எல்லோரும் மேடையேறி மன்னிப்புக் கேட்டார்கள். அவர்கள் பலம் வாய்ந்தவர்கள், யாருக்கும் பயப்படத் தேவையற்றவர்கள். மன்னிப்புக் கேட்பது அவர்களாக எடுத்த முடிவு. முழு வளர்ச்சி சங்கமும் அடித்தளச் சமூகமும் ஊரை வளர்ச்சியின் பாதையில் வழிநடத்திக் கொண்டிருக்கிறது, இதற்கு நாம் உறுதுணையாக இருக்க வேண்டும் என்ற புரிதலில் மேற்கொண்ட தீர்மானம் அது. சாமியாரைத் தனியாகச் சந்தித்து மன்னிப்புக் கேட்டிருக்கலாம். பகிரங்கமாக ஊர்மக்களிடம் மன்னிப்புக் கேட்பதற்காகவே பிரார்த்தனைக் கூட்டத்தைக் கூட்டினார்கள். அதோடு அவர்கள் எல்லோரும் அமைப்புகளுக்குள் வந்து தீவிரமாய்ச் செயல்படத் தொடங்கிவிட்டனர்.

**வறீதையா:** மன்னிப்புக் கேட்டது சடங்கல்ல, மாற்றத்துக்கான பெருந்திரள் வழிமொழிதல். மாற்றத்தை எவராலும் தடுக்க இயலாது, மாற்றம் நிகழ்ந்தே தீரும். ஆனால் மாற்றத்தை முன்மொழிபவர்கள் அதற்கு ஒரு விலை தந்தாக வேண்டும். அந்தத் தெளிவும் துணிவும் கொண்டவர்களே வரலாறு படைத்துள்ளனர். அந்த விலையைக் கொடுக்க நீங்கள் தயாராய் இருந்தீர்கள் என்று நினைக்கிறேன். கோடிமுனை மக்கள் நிகழ்த்தியது வரலாற்றுச் சாதனை.

**மேரி தெரஸ்:** கடற்கரை ஊரில் பெண்கள் என்றால் கோவிலுக்குப் போவோம், மறைக்கல்விக்குப் போவோம், அதை விட்டால் பக்தசபைகளில் பங்கெடுப்போம், அவ்வளவுதான். வேறு எதிலும் பங்கு பெறுவதற்குப் பெண்களுக்கு வாய்ப்புகள் இருக்கவில்லை. அடித்தளக் கிறித்தவச் சமூகங்கள் உருவான பிறகு வாரத்தில் நான்கைந்து நாட்கள் ஏதாவது ஒரு பயிற்சி நடந்துகொண்டே இருக்கும். அதற்கென்று கட்டிய ஓலைக் கொட்டாய் மேடையை (சாமியார் பங்களா) ஒட்டித்தான் அமைந்திருந்தது. ஒரு பெண் சாமியார் பங்களாவுக்குள் போனால் பாவம் என்றிருந்த நிலை தலைகீழாகி, என் வயதொத்த பெண்கள் எல்லோரும் அந்த பங்களா வழியாகத்தான் ஓலைக் கொட்டாய்க்குப் போவோம். அந்தப் பயிற்சிகள் நடந்து கொண்டிருந்தபோது ஒருநாள் திடீரென்று நான்கைந்து பேர் கொட்டாய்க்குள் புகுந்தார்கள். அதில் ஒருவர்

வசைமாரி பொழிந்து, எல்லோரையும் கலைத்து விரட்டிவிட்டார். அது காவல்துறையில் வழக்காகப் பதிவு செய்யப்பட்டது. அந்த வழக்கு நடந்து கொண்டிருந்த வேளையில்தான் மெல்க்கியாஸ் குறிப்பிட்ட அந்த அவதூறு துண்டுப்பிரசுரம் வெளிவந்தது. அதன் பிறகு எங்களை வெளியே அனுப்புவதில் எங்கள் குடும்பத்தாருக்கு ஒரு தயக்கம் இருந்தது. அந்தத் தயக்கம் குறுகிய காலம்தான் நீடித்தது. என் பெரியம்மா ஒருவர் - கணவனை இழந்தவர் - விதவைகள், அபலைகள், பெண்கள் பாதுகாப்பாகத் தங்குவதற்கும் வந்து போவதற்கும் தனது வீட்டைப் பயன்படுத்திக்கொள்ள அனுமதித்திருந்தார். ஒரு கான்வென்ட் போல, எங்களுக்கெல்லாம் அது ஒரு பாதுகாப்பு மையமாக இருந்தது. அங்கு நாங்கள் தினமும் போவோம். அங்குதான் அன்றைய பாடுகளை எங்களுக்குள் பகிர்ந்து கொள்வோம்.

பிட்நோட்டீஸ் வந்தபோது பெரியம்மா என் வீட்டுக்கு வந்து அப்பாவிடம் கேட்டார்- 'இப்படி மோசமா நோட்டீஸ் அடிச்சிருக்காங்க, என்ன செய்யணும்?' அப்பா சொன்னார்- 'அப்படியா! அப்ப எனக்க மக இன்னும் கொஞ்சம் நல்லா வேலை செய்யட்டும்'. அப்பா எனக்கு ஆதரவானவர்தான் என்றாலும் அவரிடமிருந்து இந்த வார்த்தைகளை நான் எதிர்பார்க்கவில்லை. அந்தக் காலத்தில் கடற்கரையில் பெண்களுக்கு இந்த விடுதலை சாத்தியப்பட்டிருக்கிறது என்றால் அதில் எங்கள் அப்பாக்களின் பங்கு மிக முக்கியமானது. அவர்கள் எங்கள் மேல் வைத்திருந்த நம்பிக்கைதான் ஊருக்குள் நாங்கள் துணிச்சலாக இறங்கி வேலை செய்ய பக்கபலமாய் இருந்தது.

பொதுச்சேவைக்காக இறங்கிய பெண்களை அப்போதெல்லாம் வேசி மாதிரிப் பார்த்தார்கள். ஊருக்குள் தலைநிமிர்ந்து நடக்க முடியாமல் கூசி ஒதுங்கி நின்றோம். அவ்வளவு அவதூறுகள் எங்கள்மேல் வீசப்பட்டன. 'கோடிமுனைப் பெண்களை நாகர்கோவில் பஸ் ஸ்டாண்டில் பார்க்கலாம், லாட்ஜில் பார்க்கலாம்' என்பது ஊரில் பாட்டாக இருந்தது. மறக்க முடியாத நாட்கள். அதே ஊரில்தான் எங்கள் அப்பாக்கள் ஊரின் வளர்ச்சிக்காக எங்களை உழைக்க அனுமதித்தனர். 'அடித்தளக் கிறித்தவ சமூகம்'தான் பொதுவாழ்க்கையில் பெண்கள் வருவதற்குப் பாதை அமைத்தது.

**வறீதையா:** மாற்றத்துக்கு எதிரான கடைசி ஆயுதங்களும் பயன்படுத்தப்பட்டு, பலனற்றுப் போய்விட்டது...

**மேரி தெரஸ்:** பிரார்த்தனையையும் சேவையையும் இணைத்துக் கொண்டே பயணித்தோம். நாம் சரியான பாதையில்தான்

போகிறோம், எவருடைய வசைமொழிக்கும் நாம் செவி கொடுக்க வேண்டியதில்லை என்று எங்களுக்குள் சொல்லிக் கொள்வோம். முக்கியமாக, மாற்றம் வரும் என்கிற அசைக்க முடியாத நம்பிக்கை அப்போதும் எங்களுக்கு இருந்தது. எனக்கு என்ன கிடைக்கும் என்கிற எண்ணம் எங்களில் யாருக்கும் இருக்கவில்லை. இந்தத் திட்டத்தைச் செயல்படுத்தியே தீரவேண்டும் என்கிற உறுதி மட்டுமே இருந்தது.

பங்கு சாமியார் எங்களோடு இணைந்து வேலை செய்தார். திட்டமிடும்போது உடனிருந்தார், தேவையான போதெல்லாம் ஆலோசனைகளைக் கொடுத்தார், ஆனால் முடிவெடுக்கும் அதிகாரத்தை மக்களிடமே விட்டுவிட்டார். எங்கள் கையில் அதிகாரம் இல்லையே என்று அவர் விலகிப் போகவில்லை. இந்த உடனிருப்பும் உறுதுணையும் மக்களுக்குப் பெரிய பலமாக இருந்தது.

**வறீதையா:** பணியாளர் எட்வினுக்குப் பிறகு வந்த பாதிரியார்களின் அணுகுமுறை எப்படி இருந்தது?

**மேரி தெரஸ்:** எட்வின் சாமியாருக்குப் பிறகு சேசு சபையிலிருந்து மாற்கு ஸ்டீபன் சாமியாரை மறைமாவட்டம் (திருச்சபைத் தலைமை) எங்கள் ஊருக்கு அனுப்பிவைத்தது. பிறகு அவருக்கு உதவியாக புஷ்பராஜ் என்னும் சாமியாரை சேசு சபை அனுப்பியிருந்தது. அவர்கள் இரண்டரை ஆண்டுகள் ஊரில் இருந்தார்கள். மாற்கு சாமியார் எட்வின் சாமியார் எடுத்திருந்த அணுகுமுறையிலிருந்து ஒரு இஞ்ச் கூட விலகாமல் வேலை செய்தார்.

**வறீதையா:** பணியாளர் மாற்கு ஸ்டீஃபன் தமிழகம் அறிந்த சீர்திருத்தவாதி, தலித் இலக்கியவாதி, செயல்பாட்டாளர். தமிழில் முதல் தலித் இலக்கியமான கருக்கு (பாமா) என்கிற தன்வரலாற்று நாவலை உலகுக்கு அறிமுகப் படுத்தியவர் அவர்தான். தலித்துகளை அணுகியது போலவே மீனவர்களையும் அக்கறையோடு அணுகியவர் அவர். கோடிமுனைப் பணிக்காலத்தில் மீனவர்களின் வாழ்க்கையையும் பண்பாட்டையும் புரிந்துகொள்ள முயன்றார். கோடிமுனை உள்ளிட்ட தனது பணித்தள அனுபவங்களின் அடிப்படையில் 'ஒரு கத்தோலிக்கக் கிராமத்தில் ஆன்மீக வழிகாட்டியின் பங்கு என்ன' என்பது பற்றி தன்னுடைய 'செயலறம்', 'பேருவகை' முதலிய நூல்களில் விரிவாக எழுதியிருக்கிறார். அவர் காலத்தில் நிகழ்ந்த கோடிமுனைக் கல்லறைத் தகர்ப்பு குறித்து, 2005இல் அவரோடு நான் உரையாடியிருக்கிறேன். ஊரில் சமத்துவத்தை நிலைநாட்டும் மற்றொரு முக்கியமான வரலாற்று நிகழ்வாகக் கல்லறைத் தகர்ப்பைக் குறிப்பிட வேண்டும்...

**ரமணி:** ஒரு 'பெரிய வெள்ளி'யன்று *(Good Friday)* 'ஊர் சுற்றி சிலுவைப்பாதை' வழிபாட்டில் எட்டாம் இடத்தில் (சிலுவைப் பாதையை 14 இடங்களாகப் பகுத்துத் தியானம் செய்வார்கள்) யேசு தன் பின்னால் அழுது கொண்டு வரும் எருசலெம் பெண்களுக்கு ஆறுதல் சொல்லும் காட்சி வருகிறது. மாற்கு சாமியார் அந்த இடத்தைத் தியானித்துப் பேசுகையில், 'நம்முடைய சமூகத்தில் பெண்களை எந்த இடத்தில் வைத்திருக்கிறோம், அவர்களுக்கு என்ன பாடுகளைக் கொடுக்கிறோம்' என்று சில சிந்தனைகளைப் பகிர்ந்துகொண்டார். பெரிய வெள்ளிப் பிரார்த்தனையில் மொத்த ஊரும் பங்கெடுக்கும். கூட்டத்தில் ஒரு பகுதி கொந்தளித்தது. சிலுவைப் பாதையை ஒன்பதாம் இடத்துக்கு நகரவிடவில்லை. 'சிலுவைப் பாதையில் சாமியார் எப்படிப் பெண்களைப் பற்றிப் பேசலாம்?' என்பதுதான் அந்த வன்முறையாளர்களின் வாதம். சலசலப்பு மோதலாகி, பெரும் கலவரமாகி விட்டது. எட்டாம் இடத்தில் விழுந்த யேசு எழவேயில்லை. நிறையப்பேர் காயங்களுடன் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டனர். அந்த நிலையில் புனித சனி நள்ளிரவு பாஸ்கா வழிபாடு (உயிர்ப்புப் பெருவிழா) நிகழுமோ நிகழாதோ என்கிற அங்கலாய்ப்பில் ஊர் இருந்தது. சாமியார் எதுவுமே நடவாதது போல நள்ளிரவு வழிபாட்டை நடத்தினார்.

கல்லறைத் தகர்ப்பு பற்றிக் குறிப்பிட்டீர்கள். எங்கள் ஊர்க் கல்லறையின் மையப்பகுதி ஒரு குறிப்பிட்ட குடும்பத்தாருக்கு மட்டுமே என்கிற அளவில் ஆக்கிரமிக்கப் பட்டிருந்தது. அந்தக் குடும்பத்தார் வெளியூரில் இருந்தார்கள். அவ்வப்போது கோடிமுனைக் கோவிலுக்கு ஏதாவது அன்பளிப்பாகக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். ஆம்ப்ளிஃபையர், ஸ்பீக்கர் செட்- இந்த மாதிரி ஏதாவது. ஊர் மக்களுக்கு அதுதான் பெரிதாகத் தெரிந்தது. வருடம்தோறும் வந்து அந்தக் கல்லறைகளைப் பராமரித்துவிட்டுப் போவார்கள்.

நவம்பர் இரண்டாம் தியதி ஊரில் கல்லறைத் திருநாள் நடக்கையில் மக்கள் கல்லறைச் சுற்றுச்சுவருக்குள் நிற்பதற்குக்கூட இடமிருக்காது. நடுவில் மிக அதிகமான இடத்தை அந்தக் கல்லறைக் கட்டுமானங்கள் ஆக்கிரமித்திருக்க, மீதி இடத்தில்தான் ஊர் மக்கள் இறந்தவர்களைப் புதைக்க வேண்டியிருந்தது. இப்படி இருக்கையில், அந்தக் குடும்பத்தினர் தங்கள் குடும்பக் கல்லறைகளின் மீது நினைவிடம் போல ஏதோ பெரிதாய்க் கட்டத் திட்டம் போடுகிறார்கள். அதற்கு ஊரிலிருந்த சிலர் ஆதரவு கொடுக்கிறார்கள். முழு வளர்ச்சி சங்கம் அதற்குத் தடை விதித்தது. ஒரு குடும்பத்துக்காக, பொதுக் கல்லறையில் அப்படிப்பட்ட எந்தக் கட்டுமானத்தையும் அனுமதிக்க மாட்டோம் என்பது சங்கத்தின் நிலைப்பாடு. அவர்கள் போலீசை

அழைத்து வந்தார்கள். மாற்கு சாமியார் முழு வளர்ச்சி சங்கத்தின் பக்கத்தில் நின்றார். சங்கத்தினரோடு காவல் நிலையத்துக்குப் போனார். 'இது எங்கள் ஊர்க் கல்லறை. அதில் யாருக்கு எவ்வளவு இடம் ஒதுக்குவது என்பதை ஊர்தான் தீர்மனிக்கும். இனிமேல் ஊரில் யாரும் இறந்தவர்களைப் புதைத்த இடத்தில் கல் சிலுவை வைப்பதற்குக்கூடத் தடை விதித்திருக்கிறோம். இவர்களுக்கு மட்டும் தனியாகக் கொடுக்க முடியாது' என்று முழு வளர்ச்சி சங்கம் வாதிட்டது. கல்லறைத் திருநாள் வழிபாட்டுக்குப் பீடம் அமைத்துத் தருகிறோம் என்றெல்லாம் சொல்லிப் பார்த்தார்கள். மண்டைக்காடு கலவரத்துக்கு அடுத்த வருடம் அது. காவல் துறையினருக்குப் பணம் கொடுத்து ஊருக்கு நெருக்கடி கொடுத்தார்கள். மாற்கு சாமியார் அசரவில்லை. ஊரில் எல்லா சமூகங்களும் சங்கத்துக்கும் சாமியாருக்கும் முழு ஆதரவு. இறுதியில், அந்தக் குடும்பமே அந்தக் கல்லறைகளைத் தோண்டி எலும்புகளை ஒரு சருவப்பானையில் போட்டு எடுத்துக்கொண்டு போய்விட்டனர். அந்தக் காட்சியைக் கல்லறைத் தோட்ட மதிலுக்கு வெளியிலிருந்து நான் நேரில் பார்த்தேன். என் வீடு அந்தப் பக்கம்தான் இருந்தது. கல்லறையின் மீது கட்டுமானம் எதுவும் செய்ய வேண்டாம் என்று மட்டுமே ஊர் சொன்னது.

**மெல்க்கியாஸ்:** அந்தக் குடும்பம் பிரதானிக் குடும்பமல்ல, பொருளாதாரச் செல்வாக்கு மிக்க குடும்பம். ஊருக்குப் பொருளுதவிகள் செய்துவந்த குடும்பம். கல்லறையில் நினைவிடம் கட்ட வந்த நேரத்தில், 'ஊருக்குப் புதிய கல்லறை கட்ட நான்கு ஏக்கர் இடம் வாங்கித் தருகிறோம், எங்களை இங்கு நினைவிடம் கட்டவிடுங்கள்' என்று கேட்டுப் பார்த்தார்கள். ஊர் மறுத்துவிட்டது.

**வறீதையா:** 'எதிர்ப்பு அலை ஆதரவாக மாறியது, முழு வளர்ச்சி சங்கமும் அடித்தளக் கிறித்தவச் சமூக அமைப்பும் வேர் கொண்டு வளர்ந்தது... மூன்றாண்டு காலப் போராட்டத்துக்கு பிறகு ஊரில் பூரணமாக அமைதி திரும்பியது, ஊர் வளர்ச்சிப் பாதையில் நடைபோடத் தொடங்கியது' என்கிறீர்கள்... ஒரு கருத்தியல் மக்களிடையே ஏற்கப்பட்டு, திட்டமாகி, எட்டு ஆண்டுகளாக வெற்றிகரமாகச் செயல்பட்டு வந்தது என்பது உண்மை என்றால், பிறகு அது ஏன் இல்லாமலானது?

**மேரி தெரஸ்:** பாஸ்கல் சாமியாருக்குப் பிறகு வந்த சாமியார் ஒரு வாரநாள் வழிபாட்டின்போது முழு வளர்ச்சிச் சங்கம் கலைக்கப்படுவதாக அறிவித்தார். அவர் அறிவித்த அன்று காலையில் நானும் ரமணியும் சாமியாரிடம் போய்க் கேட்டோம். 'முழு வளர்ச்சிச்

சங்கம் ஒரு அரசுப் பதிவு பெற்ற அமைப்பு. ஊர் மக்கள் உருவாக்கி நடத்தும் இந்த அமைப்பை எப்படி நீங்கள் கலைக்க முடியும்? அதற்கு உங்களுக்கு யார் அதிகாரம் கொடுத்தார்கள்? இப்போதுகூட நாங்கள் காவல்துறையில் வழக்குத் தொடுப்போம். உங்கள் மீது நடவடிக்கை எடுக்க முடியும்' என்று சொன்னேன். சாமியார் எதுவும் பேசவில்லை. மற்றவர்களும் போய்க் கேட்டிருக்கிறார்கள். 'நான் ஆயரின் ஊழியன், அவர் சொன்னதைத்தான் நான் செய்திருக்கிறேன்' என்று சாமியார் பதில் சொன்னதாய் அறிந்து கொண்டேன். முழுவளர்ச்சிச் சங்கத்தை அழிப்பதற்கான முஸ்தீபுகள் ஏற்கனவே வெளியே தொடங்கியிருந்தன.

அடித்தளக் கிறித்தவ சமூகக் கருத்தியலுக்குக் கோட்டார் மறைமாவட்டத்தில் ஆதரவு இருக்கவில்லை. திருவனந்தபுரம் மறைமாவட்டம் கோடிமுனையைப் பின்பற்றி அங்குள்ள பங்குகளில் (கத்தோலிக்கக் கிராமம்) அன்பியங்களை அறிமுகப்படுத்திய பிறகுதான் கோட்டார் மறைமாவட்டம் இங்குள்ள பங்குகளில் அந்த அமைப்பை நடப்பாக்கியது. அதோடு அடுத்த ஆபத்து முளைத்தது. அன்பியப் பிரதிநிதிகளைக் கொண்ட பங்குப் பேரவையை *(Parish Council)* ஒவ்வொரு பங்கிலும் அமைத்தார்கள். பங்குப் பேரவைகளின் தலைமை அமைப்பாக மறைமாவட்ட மேய்ப்புப் பணிப் பேரவையை *(Diocesan Pastoral Council)* நிறுவி, மாதம்தோறும் கூட்டங்களை நடத்தத் தொடங்கினார்கள்.

எங்கள் ஊரைப் பொறுத்தவரை பங்குப் பேரவையின் வேலையை மறுமலர்ச்சி அமைப்பும் ஊரின் வளர்ச்சி நடவடிக்கைகளை முழு வளர்ச்சி சங்கமும் செய்துகொண்டிருந்தது. எங்கள் ஊரில் இயங்கும் முழு வளர்ச்சி சங்கத்தை ஒழித்துவிட்டு மற்றவர்களைப் போலப் பங்குப் பேரவையை அமைக்கச் சொன்னார்கள். நாங்கள் அதை ஏற்றுக் கொள்ளவில்லை என்பதால் மறைமாவட்டப் பேரவை எங்கள் ஊரைப் புறக்கணித்துவிட்டுக் கூட்டம் நடத்தியது.

முழு வளர்ச்சி சங்கத்தில் அதிகாரம் முழுவதும் மக்களிடம் இருந்தது. சாமியார்களோ அதிகாரத்தை இழக்க விரும்பவில்லை. 'முழு வளர்ச்சி சங்கம் மறைமாவட்டத்துக்கு எதிரானது' என்றார்கள். மாற்கு சாமியாரைத் தொடர்ந்து பாஸ்கல் சாமியார் வந்தார். மறைமாவட்டம் தொடர்ந்து நெருக்கடி தந்துகொண்டே இருந்தது. அவருக்குப் பிறகு வேறொரு சாமியாரை ஊருக்கு அனுப்பி, முழு வளர்ச்சி சங்கத்தைக் கலைத்துவிட்டது.

**லீன்:** முழுவளர்ச்சி சங்கத்தின் உறுப்பினர்கள் அடித்தளச் சமூகங்களிலிருந்து தேர்ந்தெடுத்து அனுப்பப்பட்டவர்கள்.

மறைமாவட்டம் பங்குப் பேரவைக்கான சட்டதிட்டங்களைத் தயாரித்து, அதற்குப் பொருந்தாத வகையில் முழுவளர்ச்சி சங்கத்தின் நெறிமுறைகள் இருப்பதால் சங்கத்தைக் கலைத்துவிட்டுப் பங்குப் பேரவையை நிறுவ வேண்டும் என்று அறிவுறுத்தியது.

**ரமணி:** முழு வளர்ச்சி சங்கத்தில் தலைவர் நம் ஊர்க்காரர். பங்குப் பேரவையில் சாமியார்தான் தலைவர், ஊரிலுள்ள ஒருவர் உபதலைவராகத் தேர்தெடுக்கப்படுவார். ஆனால் அதிகாரம் எல்லாம் சாமியாரிடம்தான் இருக்கும். முழு வளர்ச்சி சங்கத்தில் அதிகாரம் மக்கள் பிரதிநிதிகளிடம்தான் இருக்கும். அதனால்தான் சாமியார்கள் அதை இல்லாமலாக்க விரும்பினார்கள்.



*முழு வளர்ச்சிச் சங்க முன்னணி ஆர்வலர்கள் தவிர, அதனுடன் தொடர்புடைய வேறு சில முதியவர்களையும் சந்தித்துக் கருத்துக்கேட்க விரும்பினேன். 26.02.2020 அன்று கோடிமுனையில் இரண்டு முதியவர்களுடன் நிகழ்த்திய நேர்காணல் முந்தைய விவாதங்களுக்கு உரம் சேர்ப்பவை:*

**உங்கள் ஊரில் அன்பியம் அமைவதற்கு ஆதரவாய்ச் செயல்பட்டவர்களில் நீங்களும் ஒருவர். நீங்கள் ஏன் அதை ஆதரித்தீர்கள்? ஒருதரப்பினர் ஏன் அன்பியத்தை எதிர்த்தார்கள்?**

**கஸ்பார்** *(86, மீனவர், கோடிமுனை):* அன்பியத்தை எட்வின் சாமியார் ஊரில் ஆரம்பித்தபோது ஊரில் பெரிய எதிர்ப்பு இருந்தது உண்மைதான். அவர் கேட்காத கெட்டவார்த்தை (வசைகள்) இல்லை. அவரை ரொம்பக் கஷ்டப்படுத்தினார்கள். நான் அன்பியத்தை ஆதரித்தேன். அந்தக் கருத்தும் செயல்பாடும் எனக்குப் பிடித்திருந்தது.

நான் ஏழாம் வகுப்பு முடித்திருந்தபோது எனக்குப் பள்ளிக்கூடத்தில் வேலை போட்டுத்தரச் சொன்னார்கள். அப்போது வாத்தியாருக்கு மாதம் 70 ரூபாய் சம்பளம். அதை விட்டுவிட்டுக் கடலுக்குப் போனவன் நான். கஷ்டப்பட்டுத் தொழில் செய்தேன், நிறையச் சம்பாதித்தேன்.

எல்லாக் கடற்கரையிலும் சண்டைகள் வரும், ஆனால் எங்கள் ஊரில் வருடம் முழுவதும் சண்டைதான். கொலைகளும் விழும். ஊரில் இருக்கும் மூன்று நம்பர்களும் இரண்டு கோஷ்டியாகிச் சண்டை போடும். நானும் முன்னே நின்று சண்டை போடுகிறவன்தான்.

என்னைக் கண்டால் எல்லோரும் பயப்படுவார்கள். தெருவில் நடந்துபோனால், 'அன்னா போறான் கஸ்பார் ரவுடி' என்பார்கள். அதை ஒரு பெருமையாய் நினைத்தவன் நான். ஒரு முறை போலீஸ் என்னை அரஸ்ட் பண்ணுவதற்கு அலைவாய்க் கரையில் காத்து நின்றார்கள். இரண்டு மூன்று சின்னப் பையன்களை ஒரு கட்டுமரத்தில் கடலுக்கு அனுப்பி என்னையும் அண்ணனையும் கரைக்கு வரவிடாமல் தப்பித்துப்போக வைத்தார்கள். நாங்கள் பக்கத்து ஊரில் கரை சேர்ந்தோம். வழக்கில் பெயர் இருக்கும், ஆனாலும் வழக்கு சமரசம் ஆகிறவரை நாங்கள் போலீசுக்குப் பிடி கொடுக்காமல் தப்பித்துக் கொள்வோம்.

எங்கள் ஊரைப் பன்னிரண்டு பிரதானிகள் கையில் வைத்திருந்தார்கள். மூன்று நம்பரிலிருந்தும் நான்குபேர் வீதம்-காரியஸ்தன்மார். இந்தக் காரியஸ்தன்மாருக்கு இடையிலும் ஸ்தானங்கள் உண்டு. ஒண்ணாம் காரியஸ்தன் பேசிய பிறகுதான் இரண்டாம் காரியஸ்தன் பேசவேண்டும், பிறகு மூன்றாம் காரியஸ்தன் இப்படி. வரிசை தப்பினால் சண்டைதான். ஒண்ணாம் நம்பர் எப்போதுமே சாமியாருக்கு எதிராய் வேலை செய்யும். இரண்டாம் மூன்றாம் நம்பர்கள் பொதுவாகக் கோவிலுக்கும் சாமியாருக்கும் ஆதரவாய் இருக்கும். ஒன்றாம் நம்பர் இரண்டாம் நம்பரில் பாதிப்பேரைத் தன் பக்கம் சேர்த்துக்கொண்டு மூணாம் நம்பரோடு சண்டைக்குப் போகும்.

சண்டைகள் நடக்க எப்போதும் ஏதாவது காரணம் கிடைத்துவிடும்-பஞ்சாயத்துப் பிரசிடண்ட் எலெக்ஷன், சொசைட்டி எலெக்ஷன் இப்படி ஏதாவது பிரச்சனை வந்து கொண்டேயிருக்கும். கல்யாணம், நல்லது கெட்டது எல்லாவற்றுக்கும் குடும்பக்காரர்கள் எல்லோரும் பங்கெடுப்பார்கள், ஆனால் சண்டை என்று வந்துவிட்டால் ஊரே இரண்டாய்ப் பிரிந்து வெட்டுக் குத்து எல்லாம் நடக்கும். கொலை விழும், எல்லோரும் ஊரை விட்டுக் குறும்பனை, வாணியக்குடி, ஆலஞ்சி, தூத்தூர் என்று ஊர் ஊராய் ஓடி ஒளிந்து கொள்வோம்.

வழக்கு நடக்கும், வழக்கு நடத்த ஊர் பணம் தராது; சேகரத்திலுள்ள ஒவ்வொரு வீட்டுக்கும் வரி போடுவார்கள். வழக்கு நிறைய நாள் நீளாது. செத்துப்போனவன் வீட்டுக்கு ஏதாவது ஒரு தொகையை நஷ்ட ஈடாகக் கொடுத்து வழக்கை முடித்து வைத்துவிடுவார்கள். ஒளிந்திருந்தவர்கள் எல்லோரும் ஊருக்குத் திரும்பி வருவோம். சீக்கிரமே அடுத்த சண்டை நடக்கும்.

இப்படி எங்கள் வாழ்க்கை ஓடிக் கொண்டிருந்தபோதுதான் எட்வின் சாமியார் அன்பியத்தைக் கொண்டு வந்தார். பத்து முப்பது

குடும்பத்தைச் சேர்த்து ஒரு குழுவை உண்டாக்கினார். குழுவுக்குள்ளே ஒரு ஒற்றுமை; மாசத்துக்கு ஒரு முறை கூடிப் பேசுவோம். ஆறாவது அன்பியத்தில் ஒரு பிரச்சனை வந்து, ஏழாவது அன்பியக்காரன் அங்கே வந்து பேசினால், ஆறாவது அன்பியக்காரர்கள், ‘எப்பா, இது எங்க பிரச்சனை, எங்களுக்குள்ளே பேசித் தீர்த்துக் கொள்வோம், வெளியிலிருந்து யாரும் தலைபோட வேண்டாம்’ என்பார்கள். ஊருக்குள்ளே ஒரு நீதிக்குழு இருந்தது, அதுவும் அன்பியப் பிரதிநிதிகள்தான். அன்பியம் வந்த பிறகு ஊரில் ஒரு வழக்கோ சண்டையோ நடக்கவில்லை. கொலை விழாம, ஊரைவிட்டு ஒளிச்சு ஓடாம, நிம்மதியா ஊருக்குள்ள இருந்து தொழில் செய்து சாப்பிட்டோம். அன்பியத்துக்கு நான் ஏன் சப்போட் பண்ணினேன் என்று கேட்டீர்கள். இந்தக் காரணத்தினால்தான். பாஸ்கல் சாமியார் காலத்தில நான் நிதிக்குழுத் தலைவராயிருந்தேன். அன்பியத்தைக் கொஞ்சம்பேர் ஏன் எதிர்த்தாங்கண்ணா, பிரதானிகளின் பேச்சு ஊரில் எடுபடாமப் போச்சு. அவங்க அதிகாரம் செல்லுபடியாகல்ல, அதனால அவங்களுக்குக் கோபம். எப்படியாவது இதை இல்லாமலாக்க வேண்டும் என்று குழப்பிக்கிட்டே இருந்தாங்க.

சண்டை அனுபவங்களிலிருந்து நான் படித்துக் கொண்டேன்- ஊர் சமாதானமாய் இருந்தால் பிள்ளைகளைப் படிக்க வைத்துக் குடும்பத்தை முன்னேற்றலாம்.

**பிள்ளைகளைப் படிக்கவைக்க வேண்டும் என்கிற ஆசை எப்படி வந்தது?**

**கஸ்பார்:** நான் படிப்பை இடையில் நிறுத்தியவன். பள்ளிக்குப் போகிற காலத்தில் வெள்ளை முழுக்கைச் சட்டை போட்டுக் கொண்டு பள்ளிக்குப் போகும்போது ஊரில் கேலியாகச் சொல்வார்கள்- ‘அன்னா வாத்தியார் போறார்’ என்று. காலையில் ஏற்றினங்கள் அடைகிற நேரத்தில் பிள்ளைகள் குறியமுண்டோடு அலைவாயில் காத்து நிற்பார்கள். ஹெட் மாஸ்டர் கையில் பிரம்போடு விரட்டிக்கொண்டு வருவார். பிள்ளைகள் பாதிப்பேர் கடலில் குதித்துத் தப்பித்துவிடுவார்கள். அந்தக் காலத்தில் அப்படித்தான். பிள்ளைகளைப் பெற்றோர்கள் பள்ளிக்கு அனுப்புவது அரைகுறை மனதோடுதான். நான் படித்து வேலையில் சேரும் வாய்ப்பு அமையவில்லை, என் பிள்ளைகளை எப்படியாவது நன்றாய்ப் படிக்கவைத்து வேலையில் சேர்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். என் கல்யாணத்தன்று அப்படி ஒரு முடிவெடுத்தேன். என் அண்ணன், ‘பிள்ளைகளைப் படிக்க வைக்கிறாய், பிறகு என்ன பாடு படப் போகிறாயோ!’ என்றார். எல்லோரும் பொறாமைப் பட்டார்கள். ‘படிக்க வைத்தால் பிள்ளைகள் பிற்காலத்தில் தாய்-தந்தையரைக்

கவனிக்க மாட்டார்கள்' என்பதுதான் எங்கள் தலைமுறையில் இருந்த நம்பிக்கை. என் பிள்ளைகளில் ஒரேயொரு மகள் மட்டும் எட்டாம் வகுப்பு முடிக்கவில்லை. மூன்று முறை எழுதித் தோற்றாள். மற்றவர்கள் எல்லோரையும் படிக்க வைத்தேன், எல்லோரும் நல்ல வேலையில் இருக்கிறார்கள். பிள்ளைகளின் படிப்புக்காக 14 வருடம் சென்னையில் குடியேறினேன். இப்போது பிள்ளைகள்தான் என்னைக் கவனித்துக் கொள்கிறார்கள். ஒரு மகனோடு இரண்டு வருடம் அமெரிக்காவில் தங்கியிருந்திருக்கிறேன்.

நான் நல்ல கடல் தொழிலாளி. லூர்தம்மாள் முதலில் போட் கொடுத்த நேரத்தில் எங்களுக்கும் ஒரு போட் கிடைத்தது. ஆனால் அதற்கு முன்பே, கன்னியாகுமரி மாவட்டத்தில் முதன்முதலாக அண்ணனும் நானும் கொல்லத்திலிருந்து 20 அடி போட் செய்து இங்கே கொண்டுவந்து, சின்ன கிர்லோஸ்கர் எஞ்சின் வைத்து, வழிவலைத் தொழில் செய்தோம். நல்ல தொழில். இப்போது சூரைக்கு வெளிநாட்டிலும் உள்நாட்டு மார்க்கெட்டிலும் பொன்விலை. அப்போதெல்லாம் கேரளக் கடற்புறத்தில் சூரையை இறக்கினால் தொடவே மாட்டான்; 'அதைப் புழையில் களா' (ஆற்றில் கொட்டு) என்பான். என் சின்ன வயதில் கடல் நிறைய மீன்; ஐந்து ஓமல், ஆறு ஓமலில் கொண்டு வருவார்கள், ஆனால் விலை இருக்காது. வியாபாரிமார் அந்த மீனை எடுத்துக் கடற்கரையிலேயே உப்புப் போட்டு வைப்பார்கள். அவர்களும் சில நேரம் எடுக்கமாட்டார்கள்; அந்த நேரத்தில் மடிக்குப் போனவர்களே மீனைப் பகிர்ந்து எடுத்துக் கொள்வோம். அன்று கடற்புறத்தில் விலை உள்ள ஒரே மீன் நெத்திலிதான். நெத்திலி எழும்பி வருவதைப் பார்த்துவிட்டால் படுத்த மீனைக் கடலில் களைந்துவிட்டுத் துழைந்துபோய் நெத்திலிக்குக் காட்டி வளைப்போம். நெத்திலிக் கருவாட்டை முஸ்லீம் வியாபாரிகள் வாங்கி சிலோனுக்கு அனுப்புவார்கள். உப்பங்கருவாடு உள்ளூரில் கோவில்பட்டி, சங்கனாச்சேரி சந்தைகளுக்குப் போகும். ஐசும் வெளிநாட்டு மார்க்கெட்டும் வந்தபிறகுதான் கடற்புறத்தில் பணம் வந்தது.

**முழு வளர்ச்சி சங்கம் அறிமுகமான காலத்தில் கோடிமுனையில் நிலவிய சூழலைப் பற்றி...**

**கலிஸ்ட்** *(79, கோடிமுனை, மெரைன் ஃபோர்மேன் - பணிநிறைவு):* அந்தக் காலத்தில் எங்கள் ஊரில் மட்டுமல்ல, பெரும்பாலும் எல்லாக் கடற்கரை ஊர்களிலும் குடும்ப சேகரங்கள்தான் ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்தன. அந்தக் குடும்பங்கள் விரும்பினால் மட்டுமே ஊரில் நல்லது கெட்டது நடக்கும். பெரிதாக யாருக்கும்

எழுத்தறிவு இல்லை. அந்தக் குடும்பங்கள் என்ன சொல்கிறதோ, அதுதான் ஊரில் சட்டம். படித்தவர்கள், விசயம் தெரிந்தவர்கள் ஆனாலும் அவர்களிடம் எதிர்க் கருத்துச் சொல்ல முடியாது. சாமியார்கள் இந்தக் குடும்பங்களைக் கையில் போட்டுக்கொண்டு தாங்கள் விரும்பியபடி ஊரை நடத்திக் கொண்டிருந்தார்கள்.

எட்வின் சாமியார் வந்தபோது முழு வளர்ச்சிச் சங்கம் ஆரம்பிக்கப்பட்டது. அதற்காகப் பன்னிரண்டு உறுப்பினர் குழு உருவாக்கப்பட்டது: நான்கு பாதிரியார்கள் (எட்வின், டயனீஷியஸ், ஏசுதாஸ், தொபியாஸ்), பொதுநிலையினர்களில் நான், மணக்குடி லூக்காஸ், கருங்கல் மத்தியாஸ், இன்னும் சிலர். இந்தச் சங்கம் முழுக்க முழுக்க மக்களின் தலைமையில் இயங்கியது; சாமியாரின் வேலை வழிபாடு உள்ளிட்ட ஆன்மீகப் பணி மட்டும்தான். ‘உங்கள் ஊரை வளர்த்தெடுப்பது உங்கள் வேலை, சாமியாரின் வேலையல்ல’ என்பார் எட்வின் சாமியார்.

முதலில் இத்திட்டத்தைக் கடுமையாக எதிர்த்து வந்தேன் என்றாலும் சாமியாரின் கருத்து எனக்குப் பிடித்திருந்தது. ஊரைச் சிறு குழுக்களாகப் பிரித்து அன்பியம் உருவாக்கியதில் சிறப்பான விசயம்- அதில் அடிமட்ட மக்கள் ஒவ்வொருவரின் பங்களிப்பும் இருந்தது. முன்பு ஊரை நான்கு குடும்பக் கிளைகள்தான் ஆண்டுவந்தன; ஒரு கிளையிலிருந்து வருகிற ஐந்துபேரும் சொல்வதுதான் இறுதியானது. இப்போது ஊரில் வாழும் 5000 பேரில் ஒவ்வொருவரும் கருத்துச் சொல்ல இடமிருந்தது. அடிமட்டத்து மக்களின் உணர்வுகள் சபையில் எதிரொலிக்க ஆரம்பித்தது. ஊரின் வரவு செலவு கணக்குகள் ஒவ்வொரு அன்பியத்துக்கும் வந்துவிடும்.

இன்று நிலைமை என்ன? சாமியார்களின் அதிகாரம் குறைந்து போய்விட்டதாகப் புகார்மேல் புகார் சொல்லி, மறைமாவட்ட செனட்டில் பங்குப் பேரவை விதிமுறைகளில் ஏராளமான திருத்தங்களைக் கொண்டுவந்து, மக்களை டம்மியாக்கிவிட்டார்கள், அதிகாரம் மீண்டும் சாமியார்களிடம் போய்விட்டது; குடும்பக் கிளைகளின் பலம் மீண்டும் தலைதூக்கத் தொடங்கிவிட்டது. ஒரேயொரு உதாரணம் சொல்கிறேன்- குறைந்தபட்ச உறுப்பினர் எண்ணிக்கை (கோரம்) தேறாததால் பங்குப் பேரவைக் கூட்டம் மூன்றுமுறை ஒத்திவைக்கப் பட்டிருக்கிறது. மூன்று மாதம் கூட்டங்களுக்குத் தொடர்ந்து வருகை தராத உறுப்பினர் தானாகவே பதவி இழந்துவிடுகிறார் என்று விதிமுறை இருக்க, அந்தப் பதவியிடங்களில் புதிய உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்காமல் பழையவர்களைத் தொடர விடுவது ஏன்? இந்தக் கேள்வியை

ஆயரிடமே கேட்டேன், அவர் சொல்கிறார், 'இதற்குத் தீர்வாக விதிமுறைகளில் ஒரு திருத்தம் கொண்டு வந்திருக்கிறோம்: தொடர்ந்து மூன்று கூட்டங்களுக்குக் கோரம் தேறவில்லையென்றால் வருகை தந்தவர்களைக் கொண்டு கூட்டத்தை நடத்தி, முடிவுகள் எடுக்கலாம்'. இப்படி ஒரு விதியை நான் எங்குமே கேள்விப்பட்டதில்லை! 70 பேர் கூடி எடுக்க வேண்டிய தீர்மானங்களை ஏழுபேர் எடுப்பது என்ன ஜனநாயகம்? கூட்டத்துக்கே வராத ஆட்களைக் கையில் வைத்துக் கொண்டுதான் சாமியார் ஊரை ஆளுகிறார். கணக்கு வழக்குகள் சரியாக வரவில்லை. மக்கள் கோவிலுக்குக் கொடுக்கும் வரிப்பணத்தின் கணக்கு எங்கள் ஊரில் வாரம்தோறும் இப்படித்தான் வாசிக்கப்படுகிறது: 'கழிந்த வாரப் பிரிவு இவ்வளவு; இந்த வாரப் பிரிவு இவ்வளவு...' முன்னிருப்பு, செலவு, கையிருப்பு எவ்வளவு? யாருக்கும் தெரியாது. விவரம் தெரிந்தவர்கள், செயல்படும் திறமை கொண்டவர்கள் யாரும் உள்ளே போக முடியவில்லை. குதிரை கழுதையாகி, கழுதை கட்டெறும்பானதுதான் இன்றைய அன்பியத்தின் கதை...

**தொடக்கக் காலத்தில் அடித்தள மக்கள் குழுவை (அன்பியம்) கடுமையாக எதிர்த்தவர்களில் நீங்களும் ஒருவர் அல்லவா?**

**கலிஸ்ட்:** சாமியார்கள் எதைக் கொண்டு வந்தாலும் அதில் இரகசியமான திட்டம் இருக்கும் என்கிற சந்தேகம் மற்றவர்களைப் போல எனக்கும் இருந்தது. பழைய நாட்களின் அனுபவங்கள் அப்படி. அன்பிய அமைப்பின் ஆழமான கருத்துகளை நாங்கள் முதலில் புரிந்து கொள்ளவில்லை. நான் அதற்கு எதிராக பிட்நோட்டீஸ் கூட அச்சிட்டு வெளியிட்டிருந்தேன். நாங்கள் கிணற்றுத் தவளைகளின் உலகத்தில் இருந்தோம், உலகப் போக்குகளைச் சரியாகப் புரிந்திருக்கவில்லை. புரிந்துகொண்ட பிறகு மற்றவர்களோடு சேர்ந்து தீவிரமாகச் செயல்பட்டேன் என்பது வேறு விசயம். சாமியார்கள் கடுமையாக எதிர்த்தார்கள், ஊருக்குள்ளேயும் பலமான எதிர்ப்புகள் இருந்தன. எல்லாவற்றையும் தாண்டி எட்வின் சாமியாருடைய அணுகுமுறையால் ஊரில் அது வெற்றிகரமாய்ச் செயல்பட்டது.

அது ஒருபுறம் இருக்கட்டும், அப்போது அன்பியத்தை ஆதரித்தவர்களிடம் ஒரு கேள்வியை வைத்தேன் கோட்டார் மறைமாவட்டத்தின் எல்லாக் கடற்கரை ஊர்களிலும் அன்பிய அமைப்பைக் கொண்டுவந்துவிட்டீர்கள், குளச்சலில்- எங்கள் பக்கத்து ஊர்- அன்பியத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. அங்கே ஊர் நிர்வாகத்தை மக்கள்தான் நடத்துகிறார்கள்; குளச்சல் மற்ற ஊர்களைவிட எந்த வகையில் பின்தங்கி இருக்கிறது என்று சொல்ல முடியுமா?

குளச்சல் மக்கள் ஊர் நிர்வாகத்தைச் சாமியார் கையில் கொடுக்கவில்லை. அங்கே பிரதிநிதிகளாக குடும்பக் கிளைகளோ பிரதானிகளோ இல்லை. ஊரை நான்கு நம்பர்களாகப் பிரித்து, ஒவ்வொரு நம்பரிலிருந்தும் மூன்றுபேரை மக்கள் தேர்ந்தெடுத்து ஊர் நிர்வாகத்துக்கு அனுப்புகிறார்கள்...

**அன்பியக் கட்டமைப்புக்குள்ளே வராமல், ஊர்மக்கள் தேர்ந்தெடுத்த பிரதிநிதிகளைக் கொண்டு நடத்தப்படும் ஊர் நிர்வாகக் கமிட்டி பிற ஊர்களில் செயல்படும் அன்பிய அமைப்பைவிடச் சிறப்பாக மக்களைப் பிரதிநிதித்துவப் படுத்துவதாகச் சொல்ல வருகிறீர்களா?**

**கலிஸ்ட்:** நிச்சயமாக. என்ன பிரச்சனை வந்தாலும் அவர்களே தீர்த்துக் கொள்கிறார்கள். நம்பரில் உள்ள மூன்றுபேரும் சேர்ந்துபோய் முதலில் பேசுகிறார்கள். பிரச்சனை முடிவுக்கு வரவில்லையென்றால் ஊர் நிர்வாகிகள் ஒன்றாகப் போய்ப் பேசி முடிவு காண்கிறார்கள். வன்முறை வழக்கு என்றால் காவல் துறையின் கவனத்தில் கொண்டு போகிறார்கள்- கட்டப் பஞ்சாயத்து என்கிற புகாரைத் தவிர்ப்பதற்காக.

**குளச்சல் ஊர் நிர்வாக முறையில் கோடிமுனை முழு வளர்ச்சிச் சங்கத்தின் பாதிப்பு தென்படுகிறதா?**

**கலிஸ்ட்:** இல்லை. ஆனால் குளச்சல் ஊர் நிர்வாக அமைப்பைவிடப் பலமடங்கு சிறப்பாக அன்றைய முழு வளர்ச்சிச் சங்கம் செயல்பட்டது. இரண்டையும் ஒப்பீடு செய்யவே முடியாது- ஒன்றே ஒன்றைத் தவிர: இரண்டு அமைப்பிலும் சாமியாருக்கு அதிகாரம் இல்லை. கோடிமுனை ஊரின் வளர்ச்சியும் பிரச்சனைகளும் அடிமட்டத்தில் விவாதிக்கப்பட்டு, மேல்மட்டத்துக்கு எடுத்துச் செல்லப்பட்டது. சாதாரண மனிதனின் குரலுக்கு அந்த நிர்வாக முறையில் இடமிருந்தது. நிதி, நீதி, வளர்ச்சித் திட்டம், கல்வி, வீட்டுவசதி, பணவசதி, சுற்றுச்சூழல் முதலிய வெவ்வேறு குழுக்கள் ஊரின் வளர்ச்சிக்காக வேலை செய்து கொண்டிருந்தன. ஒவ்வொரு குழுவிலும் அன்பியப் பிரதிநிதி இருந்தார். கணக்குகள் முறையாகத் தணிக்கை செய்யப்பட்டன...

**நீங்கள் மாநில அரசு மீன்துறையில் பணியாற்றி ஓய்வு பெற்றவர். அரசுத் திட்டங்களைப் பயன்படுத்திக் கொள்வதில் கன்னியாகுமரிக் கடற்கரை மக்கள் முனைப்புக் காட்டுவதுண்டா? உங்கள் பணிக்காலத்தில் ஊர் நிர்வாகம் உங்கள் சேவையைப் பயன்படுத்திக் கொண்டதுண்டா?**

**கலிஸ்ட்:** முழு வளர்ச்சிச் சங்கத்தில் மூன்று நியமன உறுப்பினர்களுக்கு

இடமளிக்கப் பட்டிருந்தது. அரசுப் பணியாளர் ஒருவர், உள்ளாட்சித்துறைப் பிரதிநிதி ஒருவர், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஒருவர். அரசுத் துறைகள் அவ்வப்போது வெளியிடும் திட்டங்களை மக்களுக்கு எடுத்துச் சொல்வதும், மக்கள் அத்திட்டங்களின் பயனைப் பெறுவதற்கு வழிகாட்டி உதவுவதும் அரசுப் பணியாளரின் வேலை. உள்ளாட்சித்துறை சார்ந்த பிரதிநிதி அவர் துறை சார்ந்து இந்த வேலையைச் செய்யவேண்டும்; தேர்ந்தெடுக்கப்பட வாய்ப்பில்லாத பிற சாதியைச் சார்ந்த மக்களுக்குப் பிரதிநிதித்துவம் தருவதற்காக மூன்றாவது இடம். இன்று அந்த இடங்களில் சாமியாருக்கு வேண்டிய மூன்றுபேர் அமர்த்தப் படுகிறார்கள்.



கோடிமுனை ஊரில் பிரதானிகளின் பிடிமானம் தகர்ந்து அதிகாரம் பரவலாக்கப்பட்டது போலவே பணி.எட்வினைத் தொடர்ந்து ஊரில் பொறுப்பேற்ற மாற்கு சாமியாரின் காலத்தில் ஊர்க் கல்லறையில் சமத்துவம் நிலைநாட்டப் பட்டதைக் குறிப்பிட வேண்டும். பொருளாதாரச் செல்வாக்கு மிகுந்த குடும்பங்களின் ஆதிக்கம் கேள்விக்கு உள்ளாக்கப்பட்டது... அதிகாரத்தை இழக்க விரும்பாத ஊர்ப் பிரதானிகள், ஆதிக்கத்தை இழக்க விரும்பாத பணக்காரர்களின் எதிர்ப்பு உள்ளேயிருந்து வளரத் தொடங்கிய காலத்தில் வெளியே பாதிரியார்களின் எதிர்ப்பும் வலுப்பட்டுக் கொண்டிருந்தது என்கிறார் பணி. டயனீஷியஸ் (82, கடியப்பட்டினம்). முன்னதாக, அவர் மணக்குடியில் பணிபுரிந்தபோது, அங்கு ஒரு மீனவர் சங்கம் உருவாகத் தூண்டுதலாயிருந்தார். பின்னாளில் கோட்டார் கத்தோலிக்கத் திருச்சபையின் சேவை அமைப்பான கோட்டார் சமூக சேவை நிறுவனம் *(Kottar Social Service Society)* தனது அமைப்பின் கீழ் கொண்டு வந்து கன்னியாகுமரி மாவட்ட மீனவர் சங்கங்களின் சம்மேளனமாக விரிவுபடுத்தியது வரலாறு.

பணி.டயனீஷியஸ் மணக்குடியிலிருந்து மாற்றலாகி பணி. எட்வினின் சொந்த ஊரான இனயத்துக்கு வந்தார். அங்கும் மீனவர் சங்கம் உருவாக ஆதரவாக வேலை செய்தார். முன்னதாக இவர் மும்பையில் கிறித்தவ வாழ்வு சமூகத்தின் *(Christian Life Community)* தேசியப் பயிற்சிகளில் பங்குகொண்டு மனித வளர்ச்சிக் கூறுகளில் பயிற்சியும் புலமையும் பெற்றிருந்தார். இனயத்தில் டயனீஷியஸ் பாதிரியார் பணிபுரிந்த காலத்தில் பணி.எட்வின் கோடிமுனையில் பணியமர்த்தப் பட்டிருந்தார். கோடிமுனைக்கு வருவதற்கு முன்னால் மறைமாவட்டம் இவரை மேற்படிப்புக்காக ஃபிலிப்பைன்சுக்கு அனுப்பியிருந்தது. ஃபிலிப்பைன்ஸ் ஒரு கிறித்தவ

*நாடு. முற்காலத்தில் அது அமெரிக்கர்கள் கையில் இருந்தது; அதற்கு முன்னால் ஸ்பானியர்களிடம் இருந்தது. அங்கு முதுகலைப் பட்டம் படிக்கப் போன பணி.எட்வின் மணிலாவில் அப்போது முழுவீச்சில் இயங்கிவந்த அடிப்படைக் கிறித்தவச் சமூகங்களில் (Basic Chriatian Communities) ஈர்ப்புற்றார். கத்தோலிக்கச் சமயத்தைச் சமூகங்களின் சமூகம் (community of communities) என்கிறார்கள். இலத்தீன் அமெரிக்க நாடுகளில் ஒன்றான பிரசீலில் முதன்முதலில் உருவான இந்தக் கருதுகோள் ஃபிலிப்பைன்ஸில் அந்நாட்டு அரசின் முழு ஈடுபாட்டுடன் இயங்கி வந்தது. அங்கு அடிப்படைக் கிறித்தவச் சமூகம் குறித்துத் தீவிரமாய்ப் படிக்கத் தொடங்கினார் எட்வின்.*

*கோடிமுனையில் பெரும் எதிர்ப்புகளெல்லாம் தணிந்து, அடித்தளக் கிறித்தவச் சமூகங்களும் முழு வளர்ச்சிக் சங்கமும் சீராக இயங்கத் தொடங்கியபோது நிலவிய புறச்சூழல் எப்படி இருந்தது? பத்து வருடங்களாகச் சீராக இயங்கிக் கொண்டிருந்த கோடிமுனை முழு வளர்ச்சி சங்கம் 1990இல் ஏன் கலைக்கப்பட்டது? இக்கேள்விகளுக்குப் பணி.டயனீஷியஸ் பதிலளித்தார்*



# அடித்தள மக்கள் குழுவாக்கமும் பிரதிவினைகளும்

**பணி.பெ.டயனீஷியஸ்.**

அடித்தள மக்கள் குழுக்களைக் கோடிமுனையில் பணி. எட்வின் நிறுவிய காலத்தில் மக்களுக்கு அவர் ஏராளம் பயிற்சிகளை ஏற்பாடு செய்துவந்தார். சாமியார் பங்களா வளாகத்துக்குள்ளே ஒரு பந்தலில் அன்று நான் பயிற்சி கொடுத்துக் கொண்டிருந்தேன். ஆண்களும் பெண்களும் அங்கு இருந்தார்கள் பயிற்சிக்கென்றே அந்தப் பந்தல் அங்கு அமைக்கப்பட்டிருந்தது. திடீரென்று நான்கைந்துபேர் பந்தலுக்குள்ளே புகுந்தனர். பயிற்சியில் உட்கார்ந்திருந்தவர்களையெல்லாம் அடித்து விரட்டினர். 'எல்லாரும் வெளியே போ... மேடை (சாமியார் பங்களா) இதுக்கா வச்சிருக்கு?' என்று கத்தினர். ஊர் திரண்டுவிட்டது. கோவில் மணி அடிக்கப்பட்டது. 'அவனை விடாதே, பிடி' என்று விரட்டத் தொடங்கினர். பயந்து கடற்கரைக்கு ஓடிக் கடலுக்குள் குதித்த அவனைப் பிடித்துக்கொண்டு வந்து கோயில் கொடிமரத்தின் அருகே நிறுத்தினார்கள். எட்வின் சாமியார் வந்து மைக்கை எடுத்துப் பேசினார். 'நீ

செய்தது தவறு' என்றவர், மக்களை நோக்கி, 'பார்த்துக் கொள்ளுங்கள், இப்படியெல்லாம் ஏதாவது வரும், நாம் பெருந்தன்மையோடு மன்னித்து விடுவோம்' என்று சொல்லிவிட்டு, அவனைப் போகச் சொல்லிவிட்டார். திரண்டு நின்ற மக்களெல்லாம் அவனைத் திட்டுகிறார்கள். 'இப்படி எல்லாவற்றையும் நாசப்படுத்திவிட்டானே' என்று அவனைச் சபிக்கிறார்கள். இதற்குள் மறைவட்ட முதல்வர் யேசுதாஸ் குளச்சலிருந்து ஓடி வந்தார். காவல்துறையும் வந்துவிட்டது. 'ஒரு சின்னப் பிரச்சினை, அதை நாங்களே சமாளித்து விட்டோம்' என்று அவர்களைத் திருப்பி அனுப்பினோம். பிறகு பயிற்சியைத் தொடர்ந்து நடத்தி முடித்தேன்.

அன்று மாலையில் நானும் எட்வின் சாமியாரும் பேசிக் கொண்டிருந்தபோது மக்களின் இந்த உருமாற்றத்தை விவாதித்தோம். மக்களுக்கு உங்கள் அணுகுமுறையில் ஒரு பிடிமானம் வந்துவிட்டது, இது நல்ல அடையாளம், இதை அப்படியே விட்டுவிடக்கூடாது, அடுத்த கட்டத்துக்கு எடுத்துச் செல்லவேண்டும் என்று பேசிக்கொண்டோம். முதலில் அன்பியம்/ சமூகம் என்கிற பெயர்கள் எதுவும் அறிமுகமாகவில்லை. குழுவாக்கத்தில் எனக்கும் நம்பிக்கை இருந்தது. ஆனால் ஊரின் வளர்ச்சிக்கான திட்டம் என்று எதையும் அன்று நான் யோசித்ததில்லை. மக்களுக்குப் பயிற்சிகள் வழங்குவது மட்டுமே என் பங்களிப்பாக இருந்தது. அடிப்படைக் கிறித்தவ சமூகம், முழு வளர்ச்சி சங்கம் என்பதெல்லாம் பிற்காலத்தில் வந்தவை.

நிறையப் பாதிரியார்கள் இதற்கு எதிராகப் பேசினார்கள். 'வழமைகளெல்லாம் மாறிப்போகிறது. யார் யாரோ முடிவுகள் எடுக்கிறார்கள்' என்று எரிச்சல் பட்டார்கள். குளச்சல் மறைவட்ட முதல்வர் யேசுதாசுக்கும் கோடிமுனையில் நிகழ்ந்த மாற்றங்கள் பிடிக்கவில்லை. 'கோடிமுனை சரியாகத்தான் போகிறது, இப்படிப்பட்ட மாற்றங்கள் தேவைதான்' என்றேன். 'என்ன சாமி! நீங்களும் அவரை ஆதரித்துப் பேசுகிறீர்களே' என்று அயர்ச்சி காட்டினார். என்னளவில் கோடிமுனையின் மக்களோடு நிற்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தேன். மும்பையில் எங்களுக்குப் பயிற்சி தரப்பட்டபோது 'திருச்சபை இப்படித்தான் (சமூகங்களின் சமூகம்) இருக்கவேண்டும்' என்று அழுத்தமாய்க் கற்றுத் தந்திருந்தார்கள்.

இந்தக் கருத்தியலுக்கு நான் ஆதரவானவன் என்றாலும் ஒரு ஊரில் அதை எப்படிச் செயல்படுத்துவது என்பதற்குள்ளே நான் போகவில்லை. எட்வின் சாமியாரிடம் அது குறித்த தெளிவான திட்டம் இருந்தது. எதிர்த்தவர்களிடம் அவர் அதிரடியாகத் தனது கருத்துகளைத் திணித்ததில்லை. எளிமையாக, பொறுமையாக, அதே வேளையில் தனது நிலைப்பாட்டில் உறுதியாக நின்று கருத்தை விளக்குவார். அடிப்படையில் மிகவும் எளிமையான மனிதர் அவர். தனக்கென்று எதையும் சேர்த்து வைக்க நினைத்ததில்லை- அதிகாரம் உட்பட.

ஊர் இப்படிப் போவதுதான் சரியானது என்கிற நல்லெண்ணம் பெரும்பான்மை மக்களிடம் இருந்தது என்றாலும் 100 விழுக்காடு ஆதரவு இருக்கவில்லை. ஒரு தரப்பு பொருமிக் கொண்டுதான் இருந்தது. 'நம் ஊர் எப்படி இருந்தது, இப்போது ஒரு பிடிமானம் இல்லாமல் போகிறது... அவள் எங்கு இருந்தவள், இன்று நமக்கெல்லாம் தலைவியா வந்திருக்கிறாள்...' என்று அவர்களின் சகிப்பின்மை அவ்வப்போது வெளிப்பட்டுக் கொண்டிருந்தது. ஊரில் புதிய தலைமைகள் நிறைய உருவாயின. முக்கியமாகப் பெண்கள் தலைமை நிறைய வந்தது. பெரும்பாலும் மக்கள் சபைகளில் பெண்கள்தான் பெரும் எண்ணிக்கையில் கூடுவார்கள்.

அடிப்படைக் கிறித்தவச் சமூகம் தோன்றுவதற்குப் பலகாலத்துக்கு முன்பே கோடிமுனையில் பெண்கள் தலைமை தோன்றியிருந்தது. இதைக் குறிப்பிட்டுச் சொல்லியாக வேண்டும். வாணியக்குடியின் கிளைப் பங்காக கோடிமுனை இருந்துவந்த காலத்தில் வாணியக்குடியில் பணிபுரிந்த பர்ணபாஸ் சாமியார் கோடிமுனையில் திருமணம் செய்துகொள்ளாத பெண்களைப் பயிற்றுவித்து மரிய கொரற்றி சபையை நிறுவியிருந்தார். பர்ணபாஸ் சாமியார் ஆன்மீகம், பக்தி முயற்சியைத் தாண்டி வேறெதையும் செய்யப் பெண்களைப் பயிற்றுவிக்கவில்லை. நோயில் பூசுதலுக்குச் சாமியார் திருவுடலுடன் (Holy communion) போகும்போது இருபுறமும் விளக்கேந்திச் செல்வது, ஊரில் சச்சரவுகள் நேர்ந்தால் உடனே அங்குப் போய் சமரசம் செய்வது - இப்படியான வேலைகளை அந்தப் பெண்கள் செய்து வந்தார்கள். கன்னியர்களைப் போல இவர்களுக்கும் ஊரில் மரியாதை இருந்தது. ஆனால் இந்தப் பெண் தலைமைகள் ஊரிலுள்ள பிரதானிகளின் தலைமைக்கு ஒருபோதும் சவாலானதில்லை. அடித்தளக் கிறித்தவச் சமூகம், முழு வளர்ச்சி சங்கம் உருவான காலத்தில் தோன்றிய பெண் தலைமைகளோ பிரதானிகளின் அதிகாரத்துக்கு அச்சுறுத்தலானார்கள். ஊரில் முடிவெடுக்கும் அதிகாரம் பிரதானிகளிடமிருந்து சாதாரண மக்களுக்கு, குறிப்பாகப் பெண்களுக்குக் கைமாறிப்போனதைப் பிரதானிகளால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. இந்தப் பிரதானிகளும் இவர்களுடன் உணர்ச்சிப் பூர்வமாக ஒட்டிக் கொண்டிருந்தவர்களும் பல வழிகளில் தங்கள் எதிர்ப்பைக் காட்டத் தொடங்கினார்கள். ஊருக்குள்ளே அதனால் பிளவுகள் ஏற்பட்டன. ஒருவேளை எட்வின் சாமியார் அங்கே தொடர்ந்திருந்தால் புதிய தலைமைகளோடு வந்த கட்டுமானம் நீடித்திருக்க வாய்ப்புண்டு...

பாதிரியார்கள் வைத்த குற்றச்சாட்டு - 'எட்வின் சாமியார் ஊரைக் குழப்புகிறார்'. 'சுமூகமாய் போய்க் கொண்டிருந்த ஊரில் என்னவெல்லாமோ செய்து இப்போது அங்கே ஒரே சண்டையாக இருக்கிறதாம்' என்றார்கள். மறைமாவட்டத் தரப்பில் 'ஊரில் அமைதி திரும்ப வேண்டும்' என்று பார்த்தார்கள். அது போலியான அமைதியா என்று பார்க்கவில்லை. அங்குத் தகராறு முடிவுக்கு வரவேண்டும் என்பது மட்டுமே அவர்களின்

எண்ணமாக இருந்தது. ஊரில் ஒரு தகராறு இருப்பதாக மறைமாவட்டத்தின் நடவடிக்கை கோரப்பட்டால் வழக்கமாக எடுக்கும் நிலைப்பாடுதான். சில மூத்த குருக்களை ஒரு விசாரணைக் குழுவாகப் போட்டு (Commission) அறிக்கை கேட்பார்கள். 'எது சரியானதோ அதை முன்னோக்கி நகர்த்திச் செல்வோம்' என்கிற துணிவான அணுகுமுறை அன்று இருக்கவில்லை. வழமைகளைக் கேள்வி கேட்கும் துணிவு அன்று இல்லை. பலம் யாரிடம் இருக்கிறதோ அவர்களைச் சார்ந்துதான் திருச்சபை ஓடிக்கொண்டிருந்தது. கோயிலுக்குள்ளே கலகம் (பிட் நோட்டீஸ்), (பெரிய வெள்ளி) சிலுவைப் பாதையில் கலகம் என்று ஊரில் நிலவிய அமைதியின்மை மட்டுமே மேலேயிருந்தவர்களுக்குப் பிரச்சினையாய்த் தோன்றியதே ஒழிய, அங்கு எதனால், யாரால் அமைதி குலைகிறது என்பதில் கவனம் செலுத்தவில்லை. இன்னும் சற்று கூர்மையாகச் சொல்வதென்றால் - பிரச்சினை திசைதிருப்பப் பட்டது. கட்டுக்கோப்புகளில் ஊறிக்கிடந்த பழக்கதோஷம்.



**'அடித்தளக் கிறித்தவச் சமூகம்' என்கிற பரிசோதனை முயற்சியை 42 ஆண்டுகளுக்கு முன்னால் கோடிமுனைக் கடற்கரை ஊரில் நீங்கள் (பணி. எட்வின்) தொடக்கிவைத்தீர்கள். இன்று இலத்தீன் அமெரிக்க, ஐரோப்பிய நாடுகளில் அது பேசப்படுகிறது. ஆனால் அடித்தளச் சமூகக் கருத்தியலின் விளைவாக உருவான கோடிமுனை முழுவளர்ச்சி சங்கம் இன்று உயிருடன் இல்லை. திரும்பிப் பார்க்கையில் உங்களுக்கு என்ன தோன்றுகிறது?**

**எம்.ஜெ.எட்வின்** *(75, முன்னாள் கோடிமுனைப் பங்குப் பணியாளர்):* முதலில் இதை அறிமுகப்படுத்துவது சிரமமாகவே இருந்தது. அப்போது எதிர்த்தவர்களும் இப்போது அன்பியத்தைப் பலமாகத் தூக்கிப் பிடித்துக் கொண்டு நிற்கிறார்கள். எவ்வளவுக்கு என்றால், அன்பியத்தை எப்படியாவது என்னிடமிருந்து காப்பாற்றிவிட வேண்டும் என்றுகூட நினைக்கிறார்கள். நான் அடுத்த கட்டத்துக்கு நகர்ந்துவிட்டதால் அன்பியம் அடிபட்டுப் போய்விடக்கூடாது என்று பயப்படுகிறார்கள். ஆனால் இந்த அன்பியங்கள் எதற்குப் பயன்படுகின்றன? வரி பிரிக்க, வழிபாடு நடத்த! காணிக்கைகள் கணக்காக வந்துவிடுகிறது. தேவையில்லாத அளவுக்குக் காணிக்கை சேர்க்கப்படுகிறது. தேவையில்லாத செலவுகளுக்கு அவை வாரியிறைக்கப்படுகிறது. எந்தச் செலவை எதற்காகச் செய்யவேண்டும் என்று மக்கள் கூடிப் பேசுவதற்கான தளமாக அன்பியம் இல்லை. கருத்துப் பரிமாற்றம் நிகழ வாய்ப்பில்லை. ஒரு புதிய உலகத்தை உருவாக்குவோம், எல்லோரும் இணைந்து நிற்போம் என்பதில் தீவிரம் இல்லை, அதற்கான பயிற்சி, உருவாக்கம் இல்லை.

கிறித்தவக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது ‘இறையாட்சி’ கருத்தியல் அன்பின் ஆட்சியை முன்வைக்கிறது. அன்பு ஆளுகிற உலகத்தில் உயர்வு தாழ்வற்ற சமநிலை நிலவும். சமத்துவம் நிலவும் உலகத்தை நோக்கி இயங்கும் உந்துதல் அன்பியங்களில் போதாமலிருக்கிறது.

ஆனால், கோடிமுனை முயற்சியின் உந்துதலால் இந்தியா முழுவதும் ஒரு இலட்சம் அன்பியங்கள் உருவாகியுள்ளது. கோடிமுனையைப் பின்பற்றிக் கேரளாவில் அன்பியங்கள் உருவாக்கப்பட்டபோது கேரள அரசு அதை முன்மாதிரியாகக் கொண்டு ஏழைப் பெண்களின் அண்டைக் குழுக்களை *(Neighbourhood Groups of Poor Women)* உருவாக்கியது. அதைப் பல நாடுகளிலிருந்து வந்து படித்துச் செல்கிறார்கள். இதுவரை வாய் பேசாதிருந்த பெண்கள் மூன்று இலட்சம் குழுக்களாக ஒருங்கிணைந்திருக்கிறார்கள். அவர்கள் தங்களுக்குள் விவாதிக்கிறார்கள், திட்டமிடுகிறார்கள். இந்தக் குழுக்கள் வார்டு, பஞ்சாயத்து நிலைகளில் ஒருங்கிணைக்கப் பட்டிருக்கின்றன. இந்த அரசியலாக்கம் எவ்வளவு வலுப்பெற்றிருக்கிறது என்றால் கடந்த இரண்டு உள்ளாட்சிப் பொதுத் தேர்தல்களிலும் ஆண்களைவிடப் பெண்கள் அதிகமாகத் தெரிவு பெற்றிருக்கிறார்கள். கேரளாவில் இதற்கு அடுத்த கட்டமாக - அக்கம்பக்கத்து சபா, அக்கம்பக்கத்து வார்டு சபா, பஞ்சாயத்து சபா என்று மூன்று அடுக்குளாக இந்தக் கட்டுமானம் மேம்பட்டிருக்கிறது. அயல் சபா என்று அவர்கள் குறிப்பிடுவதை நாங்கள் அக்கம் பக்கத்துப் பாராளுமன்றம் என்கிறோம். கேரளாவில் குடும்ப ஸ்ரீ அமைப்பு வெற்றிகரமாய்ப் போய்க் கொண்டிருக்கிறது. உலக நாடுகள் பலவும் இந்த அமைப்பைத் திரும்பிப் பார்க்கின்றன.

ஆனால் என் மனதிலுள்ள ஏமாற்றம் என்னவென்றால்- இதற்கெல்லாம் தூண்டுகோலாய் இருந்த நம்முடைய அன்பியங்களில் புதிய உலகத்தை உருவாக்கும் தீவிரத்துவம் வளர்க்கப் படவில்லை.

**அடித்தள மக்கள் குழுவாக்கத்தின் இப்போதைய பரிணாம நிலை என்ன?**

**எட்வின்:** அடித்தள மக்கள் குழுவாக்கத்தின் அடிப்படையில் ஒரு அரசியல் அமைப்பு முறையை உலக சமூகத்திற்கு முன்மொழிந்திருக்கிறோம். மதங்களைத் தாண்டிய முன்வைப்பு. திருச்சபை (கத்தோலிக்க நிறுவன சமயம்) தன்னை வளர்த்துக் கொள்வதற்காக உருவான அமைப்பல்ல; புதிய உலகை உருவாக்கும் பொருட்டு அது தன்னையே அழித்துக் கொள்ளவும் தயாராக வேண்டும். புதிய உலகம் கிறிஸ்தவர்களை மட்டும் உட்படுத்தியதல்ல.

கிறிஸ்தவர்களுக்கு ‘அன்பியம்’ இருப்பது போல எல்லா மக்களையும் உள்ளடக்கிய, அடித்தள மக்களுக்கான ஓர் அமைப்பு உருவாக வேண்டும். அது ஒவ்வொரு நபரின் குரலும் ஒலிப்பதற்கு ஏதுவான சிறு குழுவாக இருக்கவேண்டும்– எங்கள் மொழியில் அக்கம்பக்கத்துப் பாராளுமன்றம். அடித்தள மக்கள் இந்தக் குழுக்களில் பங்கேற்க, இவர்களின் பிரதிநிதிகள் அதற்கு அடுத்த மட்டத்தில் வர– இப்படி ஒவ்வொரு மட்டத்தில் இருப்பவர்களும் மேல் மட்டத்துக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்புகிற அளவிலான ஓர் அரசியல் அமைப்புமுறை. இதன் கட்டமைப்பை, இயக்கத்தை வரையறுக்கும் வகையில் ஐந்து அடிப்படைக் கோட்பாடுகளைப் பரிந்துரைக்கிறோம்:

ஒன்று – அளவில் சிறிதான அமைவு. கீழேயிலிருந்து ஒவ்வொரு மட்டத்திலும் அந்த வட்டம் சிறிதாக இருக்க வேண்டும். எல்லோரும் ஒரே வட்டத்தில் அமர்ந்து ஒலிவாங்கியில்லாமல் ஒருவர் பேசுவதை மற்றவர்கள் எல்லோரும் கேட்கும் அளவிலான சிறு குழு. அக்கம் பக்கத்துப் பாராளுமன்றமோ, தேசப் பாராளுமன்றமோ, உலகப் பாராளுமன்றமோ– கடைசி மனிதனின் குரல் அங்கு ஒலித்தாக வேண்டும்.

**அப்படியென்றால், எண்ணிக்கைப் பெரும்பான்மையை முன்னிறுத்தி மக்களாட்சியில் நிகழ்த்தப்படும் அவலங்களுக்கு அங்கே இடமிராது. சிறு குழுவாக்கக் கோட்பாடு மனித மாண்பைக் கொண்டாடுகிறது; பெரும்பான்மைவாதம் என்னும் இழிநிலைக்கு எதிரிடையானது. உள்ளூர் தொடங்கி உலக அரசியல் வரை பொருத்தப்பாடு கொண்டது.**

**எட்வின்:** ஆமாம். எண்ணிக்கைச் சீர்மையை (numeric uniformity) வலியுறுத்தும் சூழலில் பெரியநாடு சின்னநாடு மோதல் இல்லை, எல்லைப் போர்களும் இருக்காது.

இரண்டாவதாக ‘அடிமட்ட முதன்மைக் கோட்பாட்டை’ (Principle of subsidiarity) முன் வைக்கிறோம். கீழ்மட்டத்தில் செய்து முடித்துவிட முடிகிற ஒரு வேலையை மேல் மட்டத்துக்கு எடுத்து வரக்கூடாது. எந்தக் கீழ் மட்டமும் செய்யமுடியாத வேலையை மட்டுமே மேல்மட்டம் செய்ய வேண்டும். அதிகாரம் பெரும்பான்மையும் கீழ் மட்டங்களில்தான் இருக்கும்; பெரும்பான்மைத் தீர்மானங்கள் கீழ்மட்டத்தில்தான் எடுக்கப்படும். அவ்வாறு எடுக்க வேண்டும் என்றால் எல்லோரையும் கலந்தாலோசித்தாக வேண்டும்...

**பங்கேற்பதற்கான வாய்ப்பும் (Space for participation) அங்கீகாரமும் ஒவ்வொரு நபருக்கும் கிடைக்கும்...**

**எட்வின்:** அங்கீகாரம் கிடைத்துவிட்டால் போதும், இங்கு பல மனநோய்கள் ஒழிந்துவிடும். அடிக்கடி கூடுகை நடக்கும், ஒன்றையொன்று கட்டியெழுப்பும்.

மூன்றாவது, 'திரும்ப அழைத்துக் கொள்ளும் வாய்ப்பு' *(recall scope)*. சிறுகுழு அமைப்பில் கீழ் மட்டத்திலிருந்துதான் பிரதிநிதிகள் மேல்மட்டத்துக்குத் தேர்ந்தெடுக்கப் படுகிறார்கள். தேர்ந்தெடுத்து மேலே அனுப்பப்பட்டவரின் பணி திருப்தி அளிக்கவில்லை என்றாலோ, அல்லது அவரைவிட மற்றொருவர் தெளிவாய் விசயங்களை எடுத்துரைக்கத் தகுதியானவர் என்றாலோ - மேல் மட்டத்துக்கு அனுப்பப்பட்ட ஒருவரை எப்போது வேண்டுமென்றாலும் திரும்ப கீழ் மட்டத்துக்கு அழைத்துக் கொள்ளலாம். இங்கு தேர்ந்தெடுக்கும் அதிகாரம் ஐந்தாண்டுக்கு ஒருமுறையல்ல, நிரந்தரமாகவே மக்களிடம் தக்கவைக்கப்படுகிறது.

**விடுதலையின் விலை நிரந்தரக் கண்காணிப்பு என்பார்கள். மக்கள் பிரதிநிதிகளின் செயல்பாடுகள் மீது நிரந்தரக் கண்காணிப்பு/ மதிப்பாய்வு இங்குச் சாத்தியமாகிறது. தகுதியற்ற ஒருவர் அதிகாரத்தில் நீடிக்க முடியாது. அதிகாரத்தில் நீடிக்க விரும்புபவர் தன் தகுதியைத் தொடர்ந்து மேம்படுத்திக் கொள்ளவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது...**

**எட்வின்:** அப்படியென்றால் மக்களின் பிரச்சினைகள் நீடிக்க வழியில்லை. நான்காவது கோட்பாடு- 'நிகழ்வதெல்லாம் இந்த அமைப்பின் வழியாகவே நிகழவேண்டும்'. இதை ஒருங்கிணைதல் கோட்பாடு *(Principle of Convergence)* என்போம்

ஐந்தாவது, நாங்கள் பெரும்பான்மைவாதத்துக்கு எதிர் நிலைப்பாட்டை எடுக்கிறோம். எண்ணிக்கைப் பெரும்பான்மை கிடைத்துவிட்டால் எதையும் சாதித்துவிடலாம் என்கிற பார்வை ஒழியவேண்டும். இது மக்களைப் பிளவுபடுத்தவே வழி வகுத்திருக்கிறது. இதற்கு எதிர்வாக சமூகவாதக் கோட்பாட்டை *(sociocracy)* முன்வைக்கிறோம். தீர்மானங்கள் பெரும்பான்மை அடிப்படையில் அல்லாமல் பரஸ்பர இசைவின் *(mutual consent)* அடிப்படையில் அமைய முடியும். தேர்தலைக்கூட இரகசியக் காப்பின் தேவைகள் இல்லாமல் நடத்திட முடியும். இதற்கான பயிற்சியைக் குழந்தைகள் பாராளுமன்றத்தில் கொடுத்துவருகிறோம். மோதல்களற்ற புதிய கலாச்சாரத்தை இது உருவாக்கும். எல்லா மக்களுக்கும் முக்கியத்துவம் தருகிற ஒரு புதிய ஆட்சியை இது உருவாக்கும். இதற்கு அக்கம்பக்கத்து ஆட்சி *(Neighbourouacy)* என்று பெயரிட்டிருக்கிறோம்.

**கடைக்கோடி மனிதனின் குரலுக்கான தளத்தை நீங்கள் முன்மொழிந்து வருகிறீர்கள். அடித்தட்டு மக்களின் பொருளாதாரமும் அதிகாரமும் பறிபோய்க் கொண்டிருக்கும் இன்றைய உலக ஏகாதிபத்தியச் சூழலில் இதைச் சாத்தியப்படுத்த வழியுண்டா?**

**எட்வின்:** கடற்கரையில் அன்பியங்களின் வரவைத் தொடர்ந்து ஒரு கலாச்சார மாற்றம் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. முன்பு பிரதானிகள் இருந்த இடத்தில் அன்பியம் வழியாக இன்று சாதாரண மனிதன் உட்கார்ந்திருக்கிறான். இது சாதாரணமான மாற்றமல்ல. இது நடக்குமா என்று ஒரு காலத்தில் வியப்போடு கேட்டுக் கொண்டோம். இன்று அது நடந்திருக்கிறது. அமைப்புகள் உருவாகி வலுப்பட வலுப்பட, மற்றவையெல்லாம் தானாக நிகழ்ந்துவிடும். அடிமட்டத்திலிருந்து அமைப்புகளை உருவாக்குவதுதான் முக்கியமான வேலை.

அண்மையில் ஒரு கடற்கரை ஊருக்குப் போனேன். 'ஒரு நாளைக்குச் சாப்பாட்டுக்கு வீட்டில் சராசரியாக எவ்வளவு செலவிடுகிறீர்கள்' என்று அவர்களிடம் கேட்டேன். 'நானூறு ரூபாய்' என்றார்கள். '30 வீடுகளுக்கு ஒரு நாளைக்கு எவ்வளவு ஆகும்?', '365 நாட்களுக்கு எவ்வளவு ஆகும்?' உங்கள் ஊரிலுள்ள 70 அன்பியங்களுக்கும் கணக்கிட்டால் எவ்வளவு ஆகும்? கணக்குப் போடுங்கள்' என்று கேட்டேன். ஒரு பெரும் தொகை! 'இது சாப்பாட்டுக்கு மட்டுமான செலவினம்; பிற செலவுகள் எவ்வளவு வரும்?' என்று கேட்டேன். 'அந்தச் செலவில் 50% வரும்' என்று பதில் வந்தது. 'மொத்தச் செலவையும் 10 வருடங்களுக்குக் கணக்கிட்டால் 4,600 கோடி வருகிறது! இது யாருடைய பணம்? உங்கள் பணம். நீங்கள் பொருட்களை வாங்கும்போது இந்தப் பணம் ஏற்கனவே நிறையப் பணம் வைத்திருப்பவனுக்குப் போகிறது. அந்தப் பணத்தைப் பயன்படுத்தி அவன் நம்மை ஆதிக்கம் செய்கிறான், பட்டினி போடுகிறான். அவனது இலாபத்தை மட்டுமே இலக்கு வைத்து நம்மைத் துன்புறுத்துகிறான். இறுதியில் அரசாங்கத்தையே பணத்தால் விலைக்கு வாங்கி நம்மை ஆட்டிப்படைக்கிறான். இந்த பலத்தை அவனுக்குக் கொடாமல் மக்களே வைத்திருந்தால் அதிகாரம் மக்களிடமே இருந்திருக்கும்.

கோடிமுனையில் முழு வளர்ச்சி சங்கத்தில் ஒரு நீதிமன்றம் வைத்திருந்தோம். அதில் ஒவ்வொரு அன்பியத்திலிருந்தும் ஒரு நீதிபதி அனுப்பப்பட்டார். அது போல வணிகத்துக்கு அன்பியம் தோறும் ஒருவர் அல்லது மூவர் குழு அமைக்கலாம். அந்தக் குழு வாரம்தோறும் தங்கள் அன்பியத்தின் தேவைகளைப் பட்டியல் போட்டு, ஒட்டுமொத்த அன்பியங்களுக்கும்- அதன்

எண்ணிக்கை 5000 என்று வைத்துக் கொள்வோம் - சேர்த்து ஆர்டர் செய்தோம் என்றால் ஒட்டுமொத்த வணிகமும் மக்கள் கையில் வந்துவிடும். அடுத்த கட்டத்தில் உற்பத்தி, வேலைவாய்ப்பு என்று அதை நீட்டித்தால் என்னவாகும்? உற்பத்தியே மக்கள் கையில் வந்துவிடும். உற்பத்திக்கு விலை வைக்கும் அதிகாரம் இப்போது உங்கள் கையில்! தரத்தில் சமரசம் இராது, பதுக்கல் இராது, உணவு உத்தரவாதம் உறுதிப்படும். இன்று நிலைமை எப்படி இருக்கிறது? நாம் தரமாக உற்பத்தி செய்கிறோம் என்றாலும் நமது உற்பத்தி சந்தையில் நகரவில்லை. காரணம் சந்தையை வேறொருவன் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறான்

மக்கள் அமைப்புகள் உருவாகி வலுப்படும்போது மற்றவையெல்லாம் தானாக நிகழ்ந்துவிடும். அடிமட்டத்திலிருந்து அமைப்புகளை உருவாக்குவதுதான் முக்கியமான வேலை. அமைப்பு உருவாகும்போது வருகிற முக்கியமான பிரச்சினை, பணத்தை நாம் எப்படி அணுகுகிறோம் என்பது. பணம்தான் அரசை இயக்குகிறது. இந்தப் பணம் வணிகத்தினால் வருகிறது. இந்த வணிகம் ஏன் அடித்தள சமூகத்தில் நிகழக்கூடாது? 5000 அன்பியங்களும் முட்டை வாங்குவதாக இருந்தால் அவ்வளவு உற்பத்தி, வினியோகம், சரக்குச் சேவை, தொழில் வாய்ப்பு எல்லாம் மக்கள் கையில் தானாக வந்துவிடும். பொருளாதாரம் வரும்போது அதிகாரமும் வந்துவிடும்.

கோடிமுனையில் அன்பியங்களில் ஆண்களின் பங்கேற்பு குறைந்து கொண்டு வந்தபோது ஒருமுறை மறைமாவட்டத்திலிருந்து கோடிமுனைக்கு ஒரு நிதி வந்தது. நான் கோவிலில் அறிவித்தேன் 'இந்தப் பணத்தை எப்படிப் பயன்படுத்துவது என்று அடித்தளச் சமூகங்களில் முடிவெடுக்கப்படும்'. அன்று பார்த்தால், பெண்களோடு எல்லா ஆண்களும் கூட்டத்துக்கு ஆஜர்! பணம் அதிகார முக்கியத்துவம் கொண்டது. நிதியும் வணிகமும் உள்ளே வந்தால் எல்லோரும் உள்ளே வந்துவிடுவார்கள். இந்தக் கருத்தியலுக்கு உலக நாடுகளில் பெரும் வரவேற்பு இருக்கிறது. மெக்சிகோவில் ஒரு பல்கலைக்கழகம் இதைக் குறித்துப் பேச என்னை அழைக்கிறது. ஆஸ்திரியாவில் ஓர் அரசியல் மாநாட்டில் அழைத்திருக்கிறார்கள். அரசியல்வாதிகள் அங்கே வருகிறார்கள். இந்தக் கருதுகோளை அவர்கள் தீவிரமாய்ப் பரிசீலிக்கிறார்கள்.

கடந்த 70 ஆண்டுகளில் கடற்கரைச் சமூகங்களில் பெண்கள் நேரடிப் பொருளாதாரத்திலிருந்து முழுவதுமாக விலக்கப் பட்டிருக்கிறார்கள். மீன்பிடி தொழில் உலகமயமாகிவிட்ட இந்தச் சூழலில் கடல் பேரிடர் அபலைகளின் வாழ்வாதாரம் பெரும்

*அச்சுறுத்தலுக்கு உள்ளாகியுள்ளது. கீழிருந்து சந்தைப்படுத்தல் என்னும் உங்கள் கருதுகோளை இவர்களுடைய மறுவாழ்வுடன் பொருத்திப் பார்க்க முடியுமா?*

**எட்வின்:** நாம் ஒரு பெரும் சிக்கலின் வலைப்பின்னலில் மாட்டிக் கிடக்கிறோம். எப்படியாவது இதிலிருந்து வெளியேறியாக வேண்டும். நீங்கள் குறிப்பிடும் பிரச்சினை உட்பட பெரும்பாலான சமூகச் சிக்கல்களுக்கு மக்களுக்கான சந்தைப் பொருளாதாரம் தீர்வு தரும். எங்கள் விவாதங்களில் இந்தப் பொருளாதார அணுகுமுறையின் மூலம் சிறப்பு உதவி தேவைப்படுபவர்களுக்கு எப்படி உதவமுடியும் என்பதைக் கண்டடைந்திருக்கிறோம்.

ஒரு பொருளுக்குப் பத்து ரூபாய் விலை நிர்ணயித்துச் சந்தையில் விற்பனைக்கு வருகிறது என்று வைத்துக்கொண்டால், அதன் உண்மையான உற்பத்தி மதிப்பு வெறும் இரண்டே ரூபாய்தான். இதரச் செலவுகளையெல்லாம் சேர்த்து ஐந்து ரூபாய் ஆனாலும் கூட மீதி வருகிற ஐந்து ரூபாய் இலாபமாய்க் கிடைக்கிறது. யாரோ ஒருவர் கையில் குவிகிற இந்த இலாபம் உங்கள் கையில் வரத் தொடங்கினால் கணக்கில்லாத நிதி சேரும். மேலே குறிப்பிட்டபடி 5000 அன்பியங்களின் நுகர்வுத் தேவைகளை உள்சுழற்சிப் பொருளாதார முறையில் மக்களே கையாண்டால் ஓராண்டில் இலாபமாகத் தேறும் பெருநிதியை என்ன செய்வீர்கள் என்று விவாதத்தின்போது கேட்டேன்.

'நாங்கள் இயலாதவர்களுக்கும் நோயாளிகளுக்கும் நிதியுதவி வழங்குவோம்' என்பார்கள். 'இன்னும் நிறைய மீதி வருகிறதே?' 'படிக்க வசதியற்றவர்களுக்கு இலவசக் கல்வி வழங்க ஏற்பாடு செய்வோம்' என்பார்கள்; 'இன்னும் நிறைய மீதி இருக்கிறதே' என்றால், 'திருமணம் செய்து வைக்க வசதியற்றவர்களுக்கு உதவுவோம்' என்பார்கள்; 'கல்லூரி கட்டுவோம்' என்பார்கள். 'அட, இன்னும் நிறைய மீதியிருக்கிறதே?' என்பேன். எல்லோருக்கும் வீடு கொடுத்தாலும் நிறைய நிதி மிஞ்சும். இதற்கு மேல் என்ன செய்வதென்று பிடிபடாமல் என்னிடமே கேள்வியைத் திருப்புவார்கள். 'வெளி நாடுகளிலிருந்து நமக்கு உதவுகிற நிறுவனங்களைப் போல நாம் ஒரு நிதிநிறுவனத்தை நிறுவி, மற்றவர்களுக்கு நிதிக்கொடை வழங்கலாம்' என்பேன்...

நிதிக்கொடை நிறுவனங்கள் கார்ப்பொரேட் நிறுவனங்களின் விஷம் தடவிய நிதியை ஆயிரம் நிபந்தனைகளைப் போட்டு வழங்குகின்றன. அவ்வாறு, வளரும் நாடுகளில் வாழும் நிதிபெறும் சமூகங்கள் வளர்ந்துவிடாமல் பார்த்துக் கொள்கின்றன. அதற்குள்

இருப்பது குரூரமான கொடையரசியல். அடித்தள மக்கள் வழங்கும் நிதிக் கொடையில் நல்லெண்ணமும் தர்ம சிந்தனையும் இருக்கும். நீங்கள் குறிப்பிடும் சந்தை அணுகுமுறையில் வேறு பல நன்மைகளும் ஏற்படும். பெருநிறுவனங்கள் தங்கள் உற்பத்திகளைப் பெருஞ்செலவில் விளம்பரம் செய்து சாதாரண மக்களின் தலைமேல் திணிக்கும் நிலை ஒழிந்து, தேவைக்கு மட்டுமே உற்பத்தி செய்து அதனை வீணாக்காமல் நுகர்ந்து கொள்ளும் சூழல் உருவாகும். அடித்தளச் சமூகத்தின் அடிப்படைக் கட்டுமானத் தேவைகளுக்காக வேறு எவரையும் சார்ந்திருக்கும் நிலைமை எழாது; தொழில் நிறுவனங்களை உருவாக்கிக் கொள்வதும் சாத்தியமாகும்...

**எட்வின்:** மக்களின் பணம் எங்கே போக வேண்டும் என முடிவு செய்யும் அதிகாரம் மக்களிடம் இல்லாமல், 'தங்களிடம் இருக்கும் காசும் பறிபோய் நாம் நடுக்கடலில் தவிக்க நேருமோ' என்கிற பயத்தோடுதான் ஒவ்வொரு தனிமனிதனும் வாழ்ந்து கொண்டிருக்கிறான். அதன் மோசமான பின்விளைவு- மற்றவர்களைப் பற்றி அக்கறையில்லாமல் போட்டிப் போட்டுப் பணத்தைச் சேர்க்க முயல்கிறான். இந்தப் போட்டிச் சூழலுக்கு மாற்றாக, மக்கள் ஒன்றாய்க் கூடித் தங்களுக்குள் பேசி முடிவு செய்வார்கள் என்றால்- எந்த நபர் பாதிக்கப்பட்டாலும் அதற்கேற்றதொரு நிவாரணம் (தீர்வு) வழங்குவதற்கான நல்மனமும் வாய்ப்பும் உருவாகிவிடும். மக்களிடம் அந்த ஆற்றல் வந்துவிடும்.

*சுனாமி (2004) மறுகட்டுமானக் கட்டத்தில் நாம் நிகழ்த்திய உரையாடலின்போது கடலோர மீனவச் சமூகங்களின் எதிர்காலச் சவால்களாக இரண்டு சிக்கல்களைக் குறிப்பிட்டிருந்தீர்கள். ஒன்று, 'கடலில் மீன் இருக்குமா?' என்பது; இரண்டு 'மீனவர்களுக்குக் கடற்கரை மீந்திருக்குமா?' நீங்கள் முன்கணித்த இரண்டும் இன்று மீனவர்களின் துயரமான எதார்த்தங்கள். மீனவர்களை ஆற்றல்படுத்த இந்தச் சூழலில் என்னென்ன வாய்ப்புகள் இருக்கின்றன?*

**எட்வின்:** இன்றைக்கு அதிகார அமைப்பு எப்படி இயங்குகிறது? கொஞ்சம் பேரைப் பெரும் பணக்காரர்களாய் ஆக்குவது; மற்றவர்கள் எல்லோரையும் பிச்சைக்காரர்களாக்குவது, அந்தப் பெரும் பணக்காரர்களின் அடிமைகளாக்குவது. இதுதான் அரசின் வேலையாக இருக்கிறது. உலகம் ஒரு திறந்தவெளி சிறைச்சாலை ஆகியிருக்கிறது. அடித்தட்டில் இருக்கும் மனிதன், 'தான் உலகின் சம பங்காளி' என்பதை உணர்ந்து கொள்ளாமல், காசு இருப்பவன் சொல்லுக்கு ஆடி, அவன் சொல்லும் வேலையைச் செய்து, அவன் கொடுப்பதைத் தின்று வாய்மூடிக் கிடக்கிறான். அடிமட்டத்து

மக்களைத் திரட்டுவது ஒன்றே இதற்குத் தீர்வு. மக்கள் சக்திதான் மகத்தான சக்தி. மக்கள் இணைந்து வந்தால்தான் மக்கள் சக்தி சாத்தியமாகும். மக்களின் அதிகாரம் என்பது என்ன? அதை எப்படி வரையறுப்பது?

நீ சொல்வது எடுபடுகிறது என்றால் உனக்கு அதிகாரம் இருக்கிறது என்று பொருள். தனிமனிதனின் குரலுக்கு இடம் தரும் தளம் உருவானால் மட்டுமே அவன் சொல்வது எடுபடும். சிறு தளங்களில் மட்டுமே அது சாத்தியம்; பெரிய தளங்கள் வெறும் ஏமாற்று வேலை. சிறு தளங்களின் வலைப்பின்னலாக மக்கள் சக்தி திரண்டால் மீனவர்களை மட்டுமல்ல, எந்த அடித்தள மக்களையும் ஆற்றல்படுத்தலாம். இது முடியுமா என்று கேட்கிறார்கள். கேரளத்துக்கு வந்து பாருங்கள் - அங்கே இது நடந்திருக்கிறது. இன்னும் பல நிலைகளுக்கு அவர்கள் முன்னேறிப் போக வேண்டியிருக்கிறது என்பது வேறு விசயம். இதுவரை நடந்தவை பெரிய சாதனை என்கிறார்கள். மூன்றரைக் கோடி மக்கள் கேரளாவில் வாழ்கிறார்கள். உலக அளவில் 41 நாடுகளில் மக்கட்தொகை இதைவிடக் குறைவு. பெருவில் பேசும்போது சொன்னேன் 'உங்களுக்கு இதில் பாதி மக்கட் தொகைதானே, நீங்கள் எளிதாய்ச் செய்துவிட முடியும்'; சிலியில் சொன்னேன். 'உங்களுக்குப் பெருவைவிடக் குறைந்த மக்கட்தொகைதான், அதனினும் எளிதாகச் செயல்படுத்தலாம்'. நீங்கள் ஒவ்வொரு நாடாக இந்த மாற்றத்தை நிகழ்த்தும் தோறும் பிற நாடுகளுக்கு அது ஒரு சவாலாகிவிடும். 'உலகளாவிய சிந்தனை, உள்ளூர்ச் செயல்பாடு!'

கீழேயிருந்து மக்கள் சக்தியை ஒருங்கிணைத்துவிட்டால், 'எங்களைக் கேளாமல் எப்படித் தீர்மானித்தீர்கள்?' என்று மக்கள் கேட்கத் தொடங்கிவிடுவார்கள். அன்று கடைசி மனிதன் ஆற்றல் பெற்றுவிடுவான். உதாரணமாகச் சுற்றுச் சூழலுக்கு எதிராக ஒரு வர்த்தகம் வருகிறது என்றால் அதை மக்கள் கேள்வி கேட்பார்கள். அப்படிப்பட்ட மக்கள் குழுக்கள் பல நாடுகளில் உருவாகிக் கொண்டிருக்கின்றன. குழந்தைகளிடம் பேசுகிறேன். உலக நாடுகளில் இதைக் குறித்துப் பேசத் தொடங்கியுள்ளனர்.



நெய்தல் நிலத்தில் 'அடித்தள மக்களும் இயற்கைச் சீற்றங்களும்' குறித்துக் கடந்த சில ஆண்டுகளாக ஆய்வு செய்து வருகிறேன். ஓர் இயற்கைச் சீற்றம் பேரிடராக மாறுவது என்பது கடந்த காலத்தில்

இயற்கையை மக்கள் எவ்வாறு கையாண்டு வந்தார்கள் என்பதைப் பொறுத்தது. பேரிடர்ச் சூழல் பலவீனமான அடிப்படைக் கட்டுமானங்கள், அதிகாரமற்ற அடித்தளச் சமூகங்களின் மீது பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியதை சுனாமி, ஒக்கிப் பேரிடர்க் காலங்களில் நாம் பார்த்தோம். இதே காரணிகள் பேரிடர்த் தாக்கத்திலிருந்து மக்கள் மீண்டெழுவதற்கும் இடையூறாக அமைகிறது. சுனாமியின் தாக்கத்திலிருந்து கன்னியாகுமரி மீனவர்கள் மீண்டு வருவதற்கு அடித்தள அமைப்புகள் இல்லாமல் போனது முக்கியமான காரணம். 'அடித்தள மக்கள் குழுக்கள்' முறையாக வார்த்தெடுக்கப் பட்டிருந்தால் அந்தத் தோல்வி நேர்ந்திராது.

'அடித்தளச் சமூகங்களை ஆற்றல்படுத்துவதே சரியான அரசியல் தீர்வு' என்னும் பணி.எட்வினின் கருத்தியலை (கத்தோலிக்க) ஆன்மீகப் பணியாளர்கள் தங்கள் அதிகாரத்துக்கு அச்சுறுத்தலாய்ப் பார்க்கிறார்கள். 1990இல் கோடிமுனை முழு வளர்ச்சி சங்கம் சமயத் தலைமையால் கலைத்துவிடப்பட்டது. இந்த அத்தியாயத்தின் தொடக்கத்தில் குறிப்பிட்டது போல, 2004 சுனாமிக்குப் பிறகு சமயச் சிந்தனையாளர்களுடன் மக்கள் அதிகாரத்தை மீளக்கட்டுவது குறித்து நிகழ்த்திய விவாதங்களை 2006இல் ஒரு தொகுப்பாக (ஆழிப்பேரிடருக்குப் பின்) பணி.ஜோசஃப் ஜஸ்டசுடன் இணைந்து முன்வைத்திருந்தேன்.

2005இல் மறைமாவட்டம் 'கடற்கரையில் இரட்டை நிர்வாகம்' என்னும் கருத்தமர்வை நிகழ்த்தியது. 'மக்கள் பேசுவதற்கு வாய்ப்பற்ற ஒருவழிப் பாதையாகக் கத்தோலிக்க நிறுவனம் இயங்கும் நிலையில் மாற்றம் வேண்டும்' என்னும் கருத்தை அங்கு நான் முன்வைத்திருந்தேன் (வாசிக்க: அத்தியாயம் 4) அந்தக் கருத்துப் பட்டறையை அடுத்த கட்டத்துக்கு எடுத்துச் செல்லும் பொறுப்பு அந்நிகழ்ச்சியை ஏற்பாடு செய்திருந்த கடலோர அமைதி, வளர்ச்சி அமைப்பிடம் கொடுக்கப்பட்டது. 'இரட்டை நிர்வாகக்' கருத்துரு கிடப்பில் போடப்பட்டது.

'நல்ல முன்மொழிவுதான், ஆனால் இதை விவாதிக்கும் அளவுக்கு மக்கள் இன்னும் பக்குவப்படவில்லை, இதைப் பேசினால் கலவரம் உருவாகும்' என்றார் ஒரு பணியாளர். 'அதிகாரத்தை எல்லாம் உங்களிடம் தந்துவிட்டு பிறகு நாங்கள் என்ன செய்வது' என்று வேறொரு பணியாளர் என்னிடம் கேட்டார். ஆன்மீகப் பணியாளர்கள் சமய நம்பிக்கையின் பெயரால் அதிகாரத்தைச் சுவைத்துப் பழகிவிட்டார்கள். அதிகாரம் மக்களின் கைகளுக்குப் போவதில் அவர்களுக்கு உடன்பாடில்லை.

அதிகாரத்தைக் கையாளுவதற்கு மக்கள் பக்குவப்படவில்லையா? அப்படி என்றால் 1977 '90 காலத்தில் கோடிமுனை முழு வளர்ச்சி சங்கம் சாதித்தது வேறென்ன? எழுத்து வாசனையற்ற பாமர மீனவர் ஒருவர்தான் அதன் தலைவராயிருந்தார். வங்கி, தாலுகா அலுவலகம், ஒன்றிய, கோட்ட அலுவலகங்கள், கலெக்டர் அலுவலகம்- எங்கே போனாலும் அந்தத் தலைவருக்கு மரியாதை கொடுத்தார்கள். அவர் பேச்சுக்கு மதிப்பளித்தார்கள். மக்களுக்குப் பயனற்ற எத்தனையோ அமைப்புகளைக் காலம்தோறும் உருவாக்கி வளர்த்துக் கொண்டிருக்கும் சமய நிறுவனம் மக்களை ஆற்றல்படுத்த முனையவில்லை. முழு வளர்ச்சிச் சங்கத்துக்கு வளர்ச்சித் திட்டம் தயாரிக்க உதவி செய்து காரித்தாஸ் இந்தியா நிறுவனத்திலிருந்து நிதி பெற்றுக் கொடுத்த சமய நிறுவனத்துக்கு அத்திட்டத்தின் விளைச்சல் அச்சுறுத்தலாகத் தோன்றியதில் வியப்பில்லை.

'எட்வின் சாமியார் நடக்காத விசயங்களைப் பேசிக்கொண்டிருக்கிறார்' என்று சமயப் பணியாளர் பலர் விமர்சிக்கிறார்கள். கோடிமுனையில் அடித்தளக் கிறித்தவச் சமூகத்தை அறிமுகம் செய்தபோது 'இதெல்லாம் நிற்காது' என்றார்கள். அது நிமிர்ந்து எழுந்து நின்றது; 'முழு வளர்ச்சிச் சங்கம்' எடுபடாது என்றார்கள், மக்கள் அதிகாரத்தின் வெற்றிகரமான வகைமாதிரியாய் அது செயல்பட்டு, அதன் வளர்ச்சித் திட்டங்களின் பலனை உலகம் புரிந்துகொள்ளத் தொடங்கியபோது வலுநிர்பந்தமாய்க் கலைத்துவிடப்பட்டது. ஒரு கட்டமைப்பைக் கலைத்துவிட முடிந்ததே ஒழிய அக்கட்டமைப்புக்கு அடிப்படையாய் அமைந்த கருத்தியலை யாராலும் அழிக்க முடியவில்லை. அது கோடிமுனைச் சமூகமனத்தில் ஆழமாய் வேர்கொண்டுவிட்டது; உலகம் முழுவதும் பரவிக்கொண்டே இருக்கிறது; 'கோடிமுனை வகைமாதிரி'யாக (Kodimunai Development Model) உலகம் அண்ணாந்து பார்த்துக் கொண்டிருக்கிறது. ஒரு தெற்காசியக் கடற்கரைக் கிராமச் சூழலில் அதிகாரத்தில் பெண் பங்கேற்கும் சாத்தியப்பாட்டைச் செயல் ரீதியாக உலகுக்குச் சொன்ன இந்த அற்புதமான முயற்சியை மற்ற ஊர்களும் பின்பற்றத் தூண்டுவதற்குப் பதிலாக, சமய நிறுவனம் எதிர்த் திசையில் போனது கெடுவாய்ப்பு.

'கடற்கரையில் இரட்டை நிர்வாகம் இப்போதைய சூழலிலும் சாத்தியம்' என்கிறார் பணி.எட்வின்:

"அன்பியங்களின் அடிப்படையில் பங்குப்பேரவை அதன்பாட்டில் மேய்ப்புப் பணிகளில் கவனம் செலுத்தலாம்; அன்பியங்களிலிருந்து தெரிவு செய்யப்படும் பிரதிநிதிகளைக் கொண்ட ஊர்ப் பேரவையை

மக்களில் ஒருவரின் தலைமையில் ஏற்படுத்தி ஊரை நிர்வகிக்கலாம், அதில் சிறு குழுக்களின் பங்களிப்பை, கடைக்கோடி மனிதனின் குரலை உறுதி செய்துகொள்ள முடியும்"

1977-1990 காலகட்டத்தில் கோடிமுனை நிகழ்த்திய வரலாற்றை இளைய தலைமுறையின் கையில் கொடுத்துச் செல்லும் கடமை கோடிமுனை மக்களுக்கு இருக்கிறது. அதை ஒரு புனைகதை வடிவத்தில்கூட தங்கள் பிள்ளைகளுக்குச் சொல்லலாம். அவர்கள் கடந்த காலத்துடன் நிகழ்த்திய அமைதிப் போர் அது. அறியாமையின் இழிவுகளிலிருந்து விடுபட்டு, தங்களின் பலத்தை அவர்கள் நடைமுறைப்படுத்திய மறுமலர்ச்சிப் போர். அந்தப் பெருமைமிகும் வரலாறு கோடிமுனை தொடங்கி ஒட்டுமொத்த இந்தியக் கடற்கரையின் இளவல்களைத் தட்டியெழுப்ப வேண்டும். 42 ஆண்டுகளுக்கு முன்னால் கோடிமுனையில் விதைக்கப்பட்டது வீரியம் மிகுந்த விதை. அந்த மண்ணும் வளமானதே. அந்த விதையை இளவல்களிடம் ஒப்படைத்துவிடுவது காலக் கடமை. ■

### பின்னிணைப்பு 1

## கோடிமுனை முழு வளர்ச்சி சங்கம்: கால வரிசை.

- 25.04.1973 - 19.04.1977: பணி. சி.எம்.வென்செஸ்லாஸ்.
- 19.04.1977 29.01.1983: பணி. எம்.ஜெ. எட்வின். (கோடிமுனையில் அடித்தள மக்கள் குழு உருவாக்க முயற்சிகள்).
- 1980: CIDPISK திட்டம்; கோடிமுனை முழு வளர்ச்சி சங்கம் நிறுவுதல்.
- 29.01.1983 16.05.1984: பணி. மாற்கு ஸ்டீஃபன் சே.ச.
- 16.05.1984 - 16.10.1984: பணி. ஜோசஃப் நெடுங்காடு சே.ச.
- 16.10.1984 28.03.89: பணி. பாஸ்கல் எஸ். பிறாஸ்பர்.
- 28.03.89 22.05.1990: பணி. அலோஷியஸ் எம். பென்ஸிகர்.
- 22.05.1990 23.05.1992: பணி. ஜெரால்டு
- 1990: முழு வளர்ச்சி சங்கம் கலைக்கப்பட்டதாக அறிவிப்பு.
- 23.05.1992 03.06.1993: பணி.எஸ்.எம்.ஜூலியஸ்.

## பின்னிணைப்பு 2

### கோடிமுனை முன்னேற்ற சங்கத்தின் இலக்குகள்

- கோடிமுனை மக்களின் ஒருங்கிணைந்த வளர்ச்சிக்காக வேலை செய்தல்
- பிரச்சினைகளுக்குச் சமூகமாகத் தீர்வு காணல்
- கல்வி, சுகாதாரம், சமூக வளர்ச்சி, கலாச்சாரம், பொருளாதாரம் முதலிய களங்களில் திட்டங்கள் தீட்டிச் செயல்படுத்துதல்
- கிராமத்தின் முழு வளர்ச்சியை முன்னிட்டு பயிற்சிகள், கருத்தரங்குகள், விழிப்புணர்வு அமர்வுகள், பொதுக்கூட்டங்கள், கலைநிகழ்வுகள் ஏற்பாடு செய்தல்
- அசையும்/ அசையாச் சொத்துகளை உருவாக்குதல், உரிமைகொள்ளுதல்
- மக்களிடையே கூட்டுறவு மனப்பாங்கை ஏற்படுத்துதல்
- அரசு, அரசு சாரா நிறுவனங்களிலிருந்து கடன், மானியம் வழி நிதி பெறுதல், மேலாண்மை செய்தல்
- நிறுவனங்களை உருவாக்கி மேலாண்மை செய்தல்
- முழு வளர்ச்சியை முன்னிட்டு ஊரில் செயல்படும் பிற அமைப்புகளோடு ஒத்துழைத்தல்.

## பின்னிணைப்பு 3

### கோடிமுனை முழு வளர்ச்சி சங்கம் (Kodimunai Integral Development Society) இலக்கும் உருவாக்கமும்

- ஊர் மக்களின் சுய நிர்வாகத்துக்கும் கூட்டுறவுக்குமான கட்டமைப்புகளை நிறுவுதல்
- சமூக நடவடிக்கை, வளர்ச்சிக்காக முறைசாராக் கல்வி அளித்தல்
- நிலைமைக்குப் பொருத்தமான ஊரகத் தலைமைப் பயிற்சி நிகழ்ச்சிகள் வழங்குதல்
- கோடிமுனையைக் கடந்து அண்டை ஊர்களை ஒருங்கிணைக்கும் திறன் கொண்ட தலைவர்களைப் பயிற்றுவித்து உருவாக்குதல்
- திருமணம் முதலிய நிகழ்ச்சிகளுக்கு வாடகை வசூலிப்பதன் மூலம் கருத்தரங்குகள், முகாம்கள் நடத்துவதற்கான ஓர் அரங்கைக் கட்டுதல்
- தனிக் கழிப்பறை, கழிவு சேமிப்புத் தொட்டிகள் நிறுவ ஊக்குவித்து, ஊரின் சுகாதாரச் சூழலை மேம்படுத்துதல்
- கூட்டுறவு இயக்கங்கள், முறை சாராக் கல்விக்குப் பணி மையங்கள் உருவாக்குதல்

- துவைத்தல். குளியல், தனிநபர் கழிப்பறைக்குத் தூய்மையான நன்னீர் வழங்குதல்
- மக்கள் வளர்ச்சிக்கான பொறுப்பைப் பங்குப் பணியாளர்மீது சுமத்தாமல் தங்கள் கூட்டுப் பொறுப்பை உணர வைத்தல்
- ஆன்மீகத்தையும் வளர்ச்சி நடவடிக்கைகளையும் ஒன்றிணைத்தல்
- சிறுதொழில், சமையல்கட்டு தோட்டம் மூலம் மக்களுக்குப் பயனுள்ள பொழுதுபோக்கு வாய்ப்பளித்தல்
- இடைத்தரகர்கள், ஈட்டிக்காரர்களின் ஒடுக்குதலிலிருந்து மக்களை மீட்டெடுத்தல்
- கூட்டுறவு முறையில் மக்களின் வாழ்க்கைமுறைக்குப் பொருத்தமான வீடுகளை வழங்குதல்
- ஒட்டுமொத்த முயற்சிகளும் மக்கள் சார்பில், மக்களால், மக்களுக்காக என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளுதல்.

## பின்னிணைப்பு 4

## கோடிமுனை முழு வளர்ச்சி சங்க உருவாக்க காலத்தில் வழங்கப்பட்ட பயிற்சிகள்

- திறந்த மனப்பான்மை
- நாம் மிகமிக வித்தியாசமானவர்கள்- ஏன்?
- ஒன்றாய் உரையாடுதல்
- வீட்டுக்குள்ளே உரையாடுதல்
- இந்தியச் சூழல்
- கிறித்தவச் சமூகமாதல்
- சிறந்த தலைவர்கள்
- ஒப்புரவாதல்
- கடவுளின் பீடத்தில் ஒரே சமூகமாக.

# 02

# கடைக்கோடி மனிதனின் குரல்

**(கலந்துரையாடல்:**
**பணி. எம்.ஜெ.எட்வின்– வறீதையா கான்ஸ்தந்தின்)**

*சுனாமி மறுகட்டுமானக் காலத்தில் கன்னியாகுமரி மாவட்ட மீனவர்களின் எதிர்காலம் குறித்து பணி.ஜெ.எம்.எட்வினுடன் நான் நிகழ்த்தியிருந்த உரையாடலில் கோடிமுனை அடித்தள மக்கள் குழுவாக்க முனைவு குறித்து நிறைய விவாதிக்கப்பட்டன (பார்வை: ஆழிப் பேரிடருக்குப் பின், வறீதையா கான்ஸ்தந்தின், ஜோசஃப் ஜஸ்டஸ், காலச்சுவடு பதிப்பகம், 2005). இந்நூலின் மையப் பொருளுடனான பொருத்தப்பாடு கருதி அவ்வுரையாடல் இங்கே இணைக்கப்பட்டுள்ளது.*

**வறீதையா:** குமரி மாவட்ட கடல்சார் சமூகங்களைச் சமகால விளிம்புச் சமூகங்களுடன் ஒப்பீடு செய்யுங்கள்...

**எம்.ஜெ.எட்வின்:** 'விளிம்புச் சமூகம்' என்கிற மனநிலை கூர்ந்து கவனிக்கப்பட வேண்டும். கடற்கரைச் சமூகத்தை ஓரளவுக்கு விளிம்புச் சமுதாயமாகக் கருதலாம். ஆனால், 'விளிம்புச் சமூக மனப்பாங்கு' கடற்கரைச் சமூகங்கள் தம்மைப் பொது வாழ்க்கையில் தீவிரமாக ஈடுபடுத்தாமல் இருப்பதற்கான சாக்குப்போக்காக ஆகிவிடக் கூடாது. தன்னைத் தீவிரமாக ஈடுபடுத்திப் பொதுநலனுக்காக உழைக்கும் எவனும் தன்னை ஒரு விளிம்பு மனிதனாகப் பார்க்க முடியாது. அவன் எந்தச் சூழ்நிலையில் இருந்தாலும் அவனுடைய தாக்கம் தீவிரமான பாதிப்பை ஏற்படுத்திக் கொண்டுதான் இருக்கும். அந்த வகையில், கடலோர மீனவச் சமூகத்தை 'விளிம்பு' என்னும் கோணத்தில் பார்ப்பதில் எனக்கு வருத்தம் இருக்கிறது.

இரண்டாவது, பிற விளிம்புச் சமூகங்களில் பார்க்க முடியாத சில சிறந்த அம்சங்கள் கடற்கரை மக்களிடம் உண்டு; ஒன்று- கடற்கரை மக்கள் கிட்டத்தட்ட ஓர் ஆதிவாசிச் சமூகம் (*semi tribal society*). ஆதிவாசிச் சமூகத்தில் (*tribal society*) இருக்கும் சிறப்பு அவர்களிடம் நிலவும் சமத்துவ உணர்வு- தனி மனித மகத்துவ உணர்வு; கடற்கரை மக்களிடம் மேலோங்கி நிற்கும் உணர்வு - நாம் தாழ்ந்தவர்கள் அல்ல, 'நாம் மனிதர்கள்' என்பது. தந்தை ஜெயபதி சின்னவிளைக் கடற்கரையில் (கன்னியாகுமரி மாவட்டம்) தங்கிக் கடற்கரை மக்களைப் பற்றி ஓர் ஆய்வு நடத்தினார். அவரது ஆய்வு முடிவுகளில் ஒன்று, கடற்கரை மக்களின் வலுவான அம்சமாக நீடிக்கிற '*egalitarian attitude*'. மேல்மட்டத்தில் ஒரு சிலர் தங்களை மேலானவர்களாகப் பாவித்துக் கொண்டாலும் அடிப்படையிலும் எவரும் 'நான் தாழ்ந்தவன்' என்று ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. இது அவர்களின் தொழிலால் ஏற்பட்ட உணர்வாக இருக்கலாம். நிலம் சார்ந்த உறவு நிலைகளில் சமூக ஏற்றத்தாழ்வு பளிச்சென்று புலப்படுகிறது. நிலவுடமைச் சமூகத்தில் இந்த ஏற்றத்தாழ்வுகள் உறுதி செய்யப்பட்டிருக்கிறது. கடல் பரப்பு எல்லோருக்கும் பொதுவானது. கடலுக்குள்ளே போகிறபோது அவனும் ஒரு மன்னன். தொழிற்கருவிகளில், உற்பத்தியில் அவனுக்கும் ஒரு பங்களிப்பு (*role*) இருக்கிறது. மீனவனிடம் நாம் காணுகிற பாராட்டுக்குரிய வலுவான அம்சம் இந்தச் சமத்துவ உணர்வுதான். இந்த உணர்வின் அடிப்படையில் அவனது வளர்ச்சியைக் கட்டியெழுப்ப வேண்டும். கட்டியெழுப்பினால், கடற்கரைச் சமூகம் பிற விளிம்புச் சமூகங்களுக்கு ஒரு வழிகாட்டியாக இருக்க முடியும். சமுதாயமென்றால் ஏற்றத்தாழ்வுகளோடுதான் இருக்க முடியும் என்கிற நிலைமை மாறி எல்லோரும் பெரியவர்கள் என்கிற நிலையை உருவாக்க முடியும் என்பதற்கான முயற்சிகள், முன்னோடி முனைவுகள் (*pilot experiments*), மாதிரி வடிவங்கள் இங்கிருந்து விரிந்து பரவுவதற்கு நிரம்ப வாய்ப்பிருக்கிறது. இந்த வாய்ப்புகளை நாம் வலியுறுத்த வேண்டும். 'நீ விளிம்பு மனிதன்' என்னும் நினைப்பை உதறிவிட்டு, 'நீ இந்த நாட்டை மாற்ற வேண்டியவன்' என்கிற அர்ப்பண உணர்வினை அவர்களிடம் வார்த்தெடுக்கையில் அவர்கள் ஏற்படுத்தும் தாக்கம் பலம் வாய்ந்ததாக இருக்கும்.

மீனவர்களிடம் நான் பார்க்கிற மற்றொரு அம்சம் அவர்களுடைய முனைவார்வம் (*enterprising spirit*). மீனவன் ஒருபோதும் தூங்கி வழிந்து கொண்டிருப்பவனல்ல. தந்தை ஜெயபதி தன்னுடைய ஆய்வுகளில் சொல்வது என்னவென்றால், குமரி மாவட்ட மீனவச் சமூகம் தமிழ்நாட்டிலேயே முனைவார்வம் மிகுந்த சமூகம். இந்த

மக்களின் இயல்பையும் வளங்களையும் புரிந்துகொண்டு எதிர்கால இலக்குகளை நிர்ணயிப்பது மிக முக்கியமானது.

**வறீதையா:** மீனவர்களுடைய எதிர்காலத்தை அச்சுறுத்தும் முதன்மைப் பிரச்சினைகளாக நீங்கள் எதைக் குறிப்பிடுவீர்கள்?

**எட்வின்:** மீனவர்களை வதைத்துக் கொண்டிருக்கிற முதல் பிரச்சினை மக்கள் பங்கேற்பு அமைப்புகளுக்குப் போதிய வலுவூட்டும் அளவிலான முயற்சிகள் இல்லை என்பதுதான். அன்பியங்கள்/அடித்தளச் சமூகங்களை ஒரு முன்மாதிரி வடிவமாகக் கொடுத்தோம். இந்த மாதிரி வடிவம் உலக அளவில் படிப்படியாக ஏற்கப்பட்டு வருகிறது. இதை நாம்தான் தொடங்கி வைத்தோம் என்பதல்ல. நாமும் மற்றவர்களைப் பார்த்துத்தான் படித்தோம். ஆனால் அன்பிய அமைப்பை முதலில் அறிமுகம் செய்த நமது பகுதியில் அன்பியம் முன்னிலைப்படுத்துகிற 'பங்கேற்பு அம்சம்' பிரமாதமாக இருக்கிறது. இப்படிச் செழுமையான வாய்ப்பு இருந்தும், அதை நாம் போதிய அளவு பயன்படுத்திக் கொள்ளவில்லை. அதனால் என்ன நேர்ந்துவிட்டது என்று பாருங்கள்! அன்பியங்கள் என்பவை ஜெபமாலை சொல்பவர்களின் ஒரு கூட்டமாக அல்லது காணிக்கைப் பவனிக்கு ஆள்பிடிக்கிற கூட்டமாக அல்லது வரி பிரித்துக் கொடுக்கிற கூட்டமாகத் திரிந்துபோனது! அடிமட்ட அதிகாரப் பங்கேற்பு என்று சொல்லுகிற அளவுக்கு அது வளரவில்லை.

'அன்பியங்கள் எதையும் சாதிக்கவில்லை, அதில் பலம் இல்லை' என்று பலர் சொல்கின்றனர். ஏன் பலமில்லாமல் போனது? பலம் கொடுக்க வேண்டிய தரப்புகள் அதைச் செய்யவில்லை. அமைப்புக்குக் கொடுக்கவேண்டிய பணி வரையறை வழங்கப் பெறவில்லை. ஒரு விஷயத்துக்கு அதிகாரத்திலிருப்பவர்கள் எப்போது முக்கியத்துவம் தருகிறார்களோ அப்போது மற்றவர்களும் அதை உடனடியாக எளிதாகப் பின்பற்றிவிடுவார்கள். அருட்திரு ஜோசஃப் ஐஸ்டஸ் அவர்களை இதற்கு ஒரு உதாரணமாகப் பார்க்கிறேன். தல அளவிலான தலைமைக்குத் தனது பணித்தளத்தில் அவர் முக்கியத்துவம் கொடுக்கிறார். மக்கள் என்ன தேவைக்கு அவரை அணுகினாலும் 'உங்கள் அன்பியத் தலைவர் உங்கள் பிரதிநிதியாக இருக்கிறார், அவரிடம் உங்கள் தேவையைச் சொல்லி அவரை அனுப்பி வையுங்கள்; அல்லது அவரிடமிருந்து ஒரு கடிதம் கொண்டு வாருங்கள்' என்கிறார். இதனால் அடிமட்டத் தலைமைகள் வளர்கின்றன, பொறுப்புப் பகிர்தல் நிகழ்கிறது. நாங்களும் இணைந்து பணியாற்றுகிற முக்கியமான மனிதர்கள் என்கிற உணர்வு வரும்போது, அந்த உணர்வின் அடிப்படையில்

அவர்கள் செயல்படச் செயல்பட, மனமுதிர்ச்சி வரும். ஆனால் கடற்கரை ஊர்களைக் கவனித்துப் பாருங்கள்- பங்குப் பேரவை என்ற அளவில் ஒருவரைத் தேர்ந்தெடுக்கிறார்கள். அவர் எம்.எல்.ஏ. மாதிரி, தேர்தல் முடிந்த பிறகு அந்தப் பக்கம் எட்டிப் பார்ப்பதில்லை. இது ஒரு பெரிய பதவி என்று எண்ணுகிறார்கள்; பணி செய்யக் கிடைத்த பாக்கியமாகப் பார்ப்பதில்லை. இப்படியிருந்தால் அடிமட்டப் பங்கேற்பு வளராது. பங்கேற்புத் தளங்கள் வளராமல் அதிகாரக் கட்டுக்கோப்பு வராது. அன்பியங்களில் தேர்வு செய்தால் 'பலம்' உள்ளவன் வர வாய்ப்பில்லை. 'கமிட்டியை ஸ்ட்ராங்காகப் பிடித்துவை' என்பது கடற்கரை ஊர்களில் நடைமுறையாயிருக்கிறது. 'ஸ்ட்ராங்' என்றால் எந்த அடிப்படையில்? இது எங்கே போய் நிற்கும்? இவர்களும் ஒழுங்காக எதையும் செய்துவிடுவார்கள் என்னும் நிச்சயமில்லை. இவர்கள் அப்படி ஏதாவது செய்வதாக இருந்தால்கூட, ஒரு அடக்குமுறை, அச்சுறுத்தல் அடிப்படையில்தான் அந்த நிர்வாகம் இயங்குமே ஒழிய அன்பு, அரவணைத்துப்போதல், சமத்துவம், பங்கேற்பு என்கிற அடிப்படையில் எதுவும் வராது.

அடிப்படையில் நாம் எந்த வழிமுறையை ஊக்குவிக்கிறோம்? யாரெல்லாம் மது வாங்கிக் கொடுத்து, அடியாள் அமர்த்தியிருக்கிறார்களோ அவர்களெல்லாம் பெரியவர்கள் என்னும் நிலைமையை உருவாக்கியிருக்கிறோம். 'பழையது மாதிரி பிரதானிகள் வந்தாலென்ன?' என்று சிலர் கேட்கிறார்கள். கடற்கரை ஊர்களைப் பிரதானிகள் நடத்திவந்த காலத்திலும்கூட அந்த ஊர்கள் ஒன்றும் அமைதிப் பூங்காவாக இருக்கவில்லை; 'பிரதானிகளில் பிரதானி யார்?' என்பதை நிறுவுவதிலேயே ஊர்ச் சண்டைகள், வழக்குகள் குறைவில்லாமல் நடந்தன. 'பலசாலிகளை முன்னிறுத்தி ஒரு அமைப்பைக் கட்டியெழுப்புவோம்' என்பது வெறும் மாயை. அது ஒரு கிராமத்தில் சமத்துவமுள்ள, தோழமையான நிர்வாகத்தைத் தரவே முடியாது.

அடுத்தபடியாக, ஒரு காலத்தில் பங்குப் பணியாளர்களுக்கு ஒரு தலைமை இருந்தது. அதிகாரக் கட்டுக்கோப்பு அமைப்பு (*sanctioning system*) என்ற ஒன்று இல்லாமற்போனால் சமூகம் சீரழிந்துவிடும்; திட்டமிட்ட வளர்ச்சி ஒருபோதும் சாத்தியப்படாது. வெறும் விழாக் கொண்டாட்டங்களாய் அடங்கிவிடும். அதிகாரக் கட்டுக்கோப்புக்கு ஒரு அடையாளமாக திருச்சபை இருந்தது. 'நீ வரி கொடுக்கவில்லை என்றால், கட்டுப்படவில்லை என்றால் திருவருட்சாதனங்களை முடக்கி விடுவோம்' என்றெல்லாம் சொல்லி ஓட்டிக் கொண்டிருந்தோம். இந்த உத்தியைக் கொண்டு இன்றைய நிலையில் ஊர் நிர்வாகத்தை ஓட்டுவது முடியாத ஒன்று; அது கொள்கையளவிலும் ஏற்கப்படாத

ஒன்று. இது கைவிட்டுப்போன பட்சத்தில் எதை முடக்கிவைத்து நிர்வாகத்தை நடத்துவது? கட்டுக்கோப்பான ஒரு பங்கேற்பு, அதிகார அமைப்பு உருவாகாத சூழ்நிலையில் ஊரில் இருக்கும் ‘ஊச்சாளிகளை’ப் பிடித்துக்கொண்டு ‘நாங்கள்தான் ஊரைக் கண்ட்ரோல் பண்ணுவோம்’ என்று சொன்னதன் விளைவுகள் ஏற்கனவே வெளிப்பட்டுவிட்டன. இந்தச் சூழ்நிலைகளையெல்லாம் பகுத்தாய்ந்ததன் அடிப்படையில்தான் இந்தப் பரிந்துரையை நாம் முன்வைக்கிறோம். பங்கேற்பு அடிப்படையிலான அதிகாரக் கட்டுக்கோப்பு என்பது ஊர்களில் இயங்குகிற அன்பியங்களின் அடிப்படையில்தான் வரமுடியும். கடற்கரைகளின் எதிர்காலத்துக்கு இருக்கிற பெரும் அச்சுறுத்தல் அங்கே அதிகாரக் கட்டுக்கோப்பே இல்லாத ஒரு நிலை உருவாகிவிடுமோ என்பதுதான். இந்தப் பயம் ஏற்படுவதற்கு ஒரு காரணம் நமது தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள்.

கிராமங்களில் அனைத்து/ வளர்ச்சி நடவடிக்கைகளையும் அன்பியங்கள் வழியாகத்தான் செய்ய வேண்டும் என்பதில் நாம் உறுதியாக இருக்கிறோம். கடன்பெறுதல், சேமித்தல், சந்தைப்படுத்தல், தொழில் முயற்சிகள் இப்படி என்னென்ன செய்தாலும் அதை அடிப்படைச் சமூகங்கள் வழியாகவே செயல்படுத்த வேண்டும் என்கிற நிலைமை வரும்போது அன்பியங்களுடைய தன்மையும் அதிகாரமும் மக்களின் அங்கீகாரமும் உயர்ந்துவிடும். சுய உதவிக் குழுக்களையெல்லாம் அப்போது ஒவ்வொரு அன்பியத்துக்கு உள்ளேயே நிறுவ வைத்தோம். இப்போது என்ன ஆகிப்போனது? அன்பியம் ஒருபுறம் இருந்து கொண்டிருக்க, ஒவ்வொரு என்ஜிஓவும் உள்ளே புகுந்து தனக்கு ஆள்பிடித்து, தனக்குக் கீழே கொஞ்சம் பேரை வைத்துக் கொள்வதற்காக ஊரில் நிலவி வரும் அதிகாரக் கட்டுக்கோப்பைக் குலைக்கிறார்கள். ஒருங்கிணைந்த அதிகார மையத்தை ஊரில் கட்டியெழுப்புவதற்குப் பதிலாக ஒன்றோடொன்று போட்டி போடுகிற, ஒன்றுக்கொன்று தொடர்பு இல்லாத அதிகார மையங்களை உருவாக்குகிறார்கள். இப்படி ஒன்றோடொன்று மோதிக்கொள்ளும் அதிகார மையங்களை உருவாக்கும்போது ஓர் உருப்படியான கட்டுக்கோப்பு அதிகார அமைப்பு மேலெழும்பிவர இயலாது.

எங்கேயும் பணம் வருகிற இடத்தில்தான் கூட்டம் சேரும். சுய உதவிக் குழுக்கள் அன்பியங்களுக்கு வெளியிலிருந்து செயல்படுகையில் காசுபணமென்று கூடுபவர்களெல்லாம் இந்தக் குழுக்களைத் தேடி மொய்ப்பார்கள்; அன்பியங்களுக்கு வலு குறையும். நாங்கள் ஒன்றிரண்டு ஊர்களில் அன்பியங்களுக்குள்ளேயே சுய உதவிக்

குழுக்கள் அமைத்தோம். அவை சிறப்பாகவே இயங்கிவருகின்றன. எதாவது ஒரு விஷயத்திற்காக அன்பியக் கூட்டங்கள் நடந்துகொண்டே இருக்கும். எந்தவொரு காரியத்திற்கும் அன்பியத்தைத்தான் தேடிப் போகவேண்டும் என்ற நிலை உருவாகிவிடும். இப்படி மக்கள் பங்கேற்பைப் பரவலாகக் கொண்டு வருவதற்குத் தடையாயிருப்பவை என்ஜிஓக்கள். பன்முனை அதிகார மையங்களாக வெளியிலிருந்து இயங்குகிற சுய உதவிக் குழுக்களைப் பற்றிக் குறிப்பிட்டேன். இவை என்ஜிஓக்களின் கட்டுப்பாட்டில் இயங்குகின்றன. ஊருக்கு அப்பாற்பட்ட தலைமைகள் இவற்றை ஒன்றோடொன்று மோதவைத்துத் தங்கள் ஆதிக்கங்களை நிலைநாட்ட முயலும் வேளையில் அங்கே சீரான, ஒருங்கிணைந்த அதிகார அமைப்பு உருவாக முடியாது.

கோட்டார் மறைமாவட்ட நிறுவனங்கள்கூடப் போட்டி போட்டுச் சுய உதவிக் குழுக்களை உருவாக்கும் இந்த மனநிலையைத் தாண்டிப்போக முடியவில்லை. அதுவும் சங்கடமான விஷயம்தான்.

மீனவர்களின் எதிர்காலத்தை அச்சுறுத்துகிற மற்றொரு தீவிரமான பிரச்சினை 'நாளை கடலில் மீன் இருக்குமா?' என்பது. இது குறித்த மாற்று நடவடிக்கைகளை நாம் இன்னும் போதிய அளவு யோசிக்கவில்லை...

**வறீதையா:** மீனவர்களோ சிந்தனைக் குழுக்களோ இதை ஒரு எதார்த்தமாக இன்னும் பார்க்கத் தொடங்கவில்லையே...

**எட்வின்:** சில்லரைப் பிரச்சினைகளிலேயே மூழ்கிக் கிடக்கிறோம். அதற்கே நமக்கு நேரம் போதவில்லை! நாளைக்கு நமக்குப் பிழைப்பு உண்டா என்று யோசிக்கவில்லை. மீன்வள வீழ்ச்சி *(fish depletion)* ஒரு மிகப்பெரிய பிரச்சினையாக உலகளவில் உருவெடுக்கும் சமயத்தில் அதை நாம் எப்படிக் கையாளப் போகிறோம் என்பதைக் கொஞ்சமும் நினைத்துப் பார்க்கவில்லை.

அடுத்தபடியாக, நாளைக்கு இந்தக் கடற்கரைக் கிராமங்கள் இருக்குமா என்பதே மிகப்பெரிய கேள்வி.

**வறீதையா:** இதைப் புவியியல் வானிலை கணிப்புகளின் அடிப்படையில் சொல்கிறீர்களா?

**எட்வின்:** சூழலியல் நிலைமைகளை வைத்துச் சொல்கிறேன். கடல் நிலத்திற்கு உள்ளே வந்துகொண்டிருக்கிறது. கடந்த வருடங்களில் கடற்கரையாக இருந்த இடங்கள் இன்று தண்ணீர்ப் பரப்பாகக் காட்சி தருகின்றன. இனயம் கடற்கரையில் பல வருடங்களுக்கு முன்னால்

விளையாடுவதற்கெல்லாம் நிறைய இடமிருந்தது. இப்போது அதில் கடல் இருக்கிறது. வீட்டு வரிசைகளும் போய்விட்டன.

**வறீதையா:** கடற்கரைக் குடியிருப்புகள் சற்று உள்ளே நகர்ந்துபோவதற்கும் இடமில்லை. கடல் விளிம்பை விட்டால் 'காணாமல் போய்விடுவதுதான்' மீனவர்களுக்கு இருக்கிற ஒரே தெரிவு!

**எட்வின்:** இவை போன்ற முதன்மையான பிரச்சினைகளைப் பற்றி யோசிக்காமல் இருக்க முடியுமா? இதற்கு மாற்று அணுகுமுறைகள், திட்டங்கள் என்ன? இந்தத் திட்டங்கள் உருவாக வேண்டுமானால் மக்கள் கலந்து பேசிக்கொள்ள, இணைந்து திட்டமிடக் களங்கள் இருக்கின்றன! அவற்றை நாம் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லை.

முப்பது வருடங்களுக்கு முன்னாலிருந்த மீனவனல்ல இன்றைய மீனவன். இன்று மீனவன் சேமிக்கிறான்; சற்றுத் திட்டமிட்டுச் செயல்படவும் செய்கிறான். தனி வாழ்க்கையில் அவனிடம் வெளிப்படுகிற இந்தத் திட்டமிட்டும் அணுகுமுறை பொதுவாழ்க்கையில் நிகழவில்லை. அவர்கள் சேர்ந்து வந்து கலந்துபேசுகிற களம் அமைந்தால் பொதுவாழ்க்கைக்கான திட்டங்கள் உருவாகும். அன்பியம் போன்ற அடிமட்ட அமைப்பு இல்லாத பட்சத்தில் திட்டமிடும் அதிகாரம் சில பெரிய தலைகளிடம் சிக்கிக்கொள்ளும். ஒட்டுமொத்தமான அடிமட்ட மக்களின் விழைவுகளையும் ஏக்கங்களையும் பிரதிபலிக்கிற வகையில் அது இருக்காது.

இன்னொரு விசயத்தையும் நான் யோசிக்கிறேன். இப்போது ஒருவேளை அது *far stretching* ஆகத் தோன்றலாம். அடிமட்ட மக்கள் பங்கேற்கும் அமைப்புகள் உலகம் முழுவதும் நடைமுறையில் வராத வரை இங்குள்ள மக்களுக்கு விடுதலை என்பது கிடையாது. வருங்காலத்தில் எழுகிற பிரச்சினைகள் உள்ளூர் எல்லைகளைத் தாண்டியனவாக உலகளாவிய தன்மை கொண்டனவாக- இருக்கும். அந்தப் பிரச்சினைகளை உலக அளவில்தான் அலசி ஆராய்ந்து தீர்வுகாண வேண்டியிருக்கும். ஒரு குறிப்பிட்ட சமூகத்திலுள்ள, இடத்திலுள்ள மக்கள் மட்டும் நினைத்தால் தீருகிற பிரச்சினையாக அவை இரா. மீனவர்கள் என்பவர்கள் தங்கள் பிரச்சினைகளைப் பற்றி மட்டும் சிந்திக்கவில்லை, அவர்களுக்கு உலகப் பார்வை இருக்கிறது என்னும் நிலை வரவேண்டும்.

**வறீதையா:** டிசம்பர் 2004 ஆழிப்பேரிடரின் பாதகமான விளைவுகள் பலதரப்பில் பகுப்பாய்வு செய்யப்பட்டுள்ளன. எந்த அழிவிலும் சில நன்மைகளும் புதிய வாய்ப்புகளும் இருக்கும். சுனாமி அப்படி ஏதேனும் சாதகமான சூழலை ஏற்படுத்தியிருக்கிறதா?

**எட்வின்:** *சுனாமி ஏற்படுத்தியிருக்கும் சாதகமான சூழல்களில் முக்கியமானது- அது வளங்களின் வாய்ப்புகளைத் திறந்துவிட்டிருக்கிறது; நிதிவளத்தை மட்டுமல்ல நான் குறிப்பிடுவது. திறன்கள், திறன் வளர்த்தல் (capacity building) வாய்ப்புகள். உள்ளே நுழைகிற பல முகமைகளுக்கும் (agencies) நன்றாகச் செய்யவேண்டும், நீடித்த தாக்கத்தை ஏற்படுத்த வேண்டும் என்கிற ஆர்வம் இருக்கிறது. இதெல்லாம் வாய்ப்புகள். இந்த வாய்ப்புகளையெல்லாம் முறையாகப் பயன்படுத்திக் கொள்ளுகிற ஒருங்கிணைந்த முயற்சிகள் பற்றாக்குறையாக இருக்கின்றன. கன்னியாகுமரி மறுவாழ்வு வளங்கள் மையம் (KRRC) என்னும் ஒரு அமைப்பு இருக்கிறது. ஆனால் அடிமட்டத்தில் போதுமான அளவுக்கு ஒருங்கிணைப்பு வரவேண்டும். சில இடங்களில் (ஊர்களில்) என்ஜிஓக்கள்தான் அதிகமாக இருக்கின்றன.*

*ஒரு இடத்தில் காசு நிறைய வந்து, இணைந்து செயல்படும் திறன் அதற்கு இணையாக வரவில்லையென்றால் காசே பெரிய பிரச்சினைகளை உருவாக்கலாம். குமரி மாவட்டத்திலுள்ள ஒரு கடற்கரைக் கிராமத்தை இதற்கு உதாரணமாகச் சொல்ல முடியும். அங்கே தொழிற்கருவி வளம், கல்வி வளம் உட்பட ஏராளமான வளங்கள் வந்து சேர்ந்த பிறகும் இணைந்து செயல்படுவதற்குரிய வாய்ப்புகளும் கட்டுக்கோப்பான அதிகார அமைப்புகளும் கலந்துபேசுகிற தளங்களும் இல்லாததால் 'எங்கள் ஊரில் மெத்தப் படித்தவர்கள் நிறையப் பேர் இருக்கிறார்கள், நிறைய போட்டுகள் இருக்கிற ஊர்' என்று அவர்கள் மார்தட்டிக் கொண்டபோதிலும் வன்முறையிலும் கேசுக்குக் காசு வாரியிறைப்பதிலும் அவர்கள்தான் முதல்வர்கள் என்று பெயர் வாங்கினார்கள்...*

**வறீதையா:** ஒரு செய்தியை மிகத் தெளிவாகச் சொல்லுகிறீர்கள். காசு வருவதனாலோ கல்வி வாய்ப்புகள் பெருகுவதனாலோ ஒரு கிராமம் வளர்ந்துவிடும் என்பது பகல் கனவு...

**எட்வின்:** *ஆமாம். மக்கள் இணைந்து வரவேண்டும்; எதிர்காலத் தன்மையுள்ள பரந்துபட்ட பிரச்சினைகளை நீண்டகால அடிப்படையில் விவாதிக்க வேண்டும்; ஒத்த கருத்தை உருவாக்க வேண்டும். அதனடிப்படையில் அமைப்பாண்மை உருவாகி, மற்ற நிறுவனங்களுடன் இணைந்து செய்வதாக இருந்தால் இந்தக் கடற்கரையை 'மாதிரிக் கிராமமாக' (model village) மாற்ற முடியும். நாளையதினம் உலகம் நம்மை உற்றுப் பார்த்துக் கற்றுக்கொள்கிற அளவுக்கு அத்தகையதொரு மாற்றம் உருவாக முடியும். அப்படியொரு*

'மாதிரி வடிவத்தை' *(model structure)* உருவாக்குகிற வாய்ப்பைச் சுனாமி தந்திருக்கிறது.

**வறீதையா:** 'மக்களை ஆற்றல்படுத்தும் நிகழ்வில் *(development process)* அடித்தட்டு மக்களின் பங்கேற்பு இன்றியமையாதது' என்னும் கருதுகோளை உலகத்துக்குச் சொல்லிவருகிறீர்கள். கோடிமுனை முயற்சிக்கு ஏறத்தாழ கால் நூற்றாண்டுக்குப் பிறகு இக்கருதுகோளின் விளைச்சல் எப்படி இருக்கிறது?

**எட்வின்:** இங்கே ஒரு ஊரில் நாம் தொடங்கினோம். திருச்சபையைப் பொறுத்தவரையில் இதனுடைய விளைச்சல் மட்டும்தான் என்று முற்றிலுமாக உரிமை கொண்டாட முடியாது. இந்த முயற்சியின் தொடர்ச்சி என்று சொல்லலாம். இந்தியாவிலுள்ள எல்லா மறைமாவட்டங்களும் அன்பிய அமைப்பைத் தத்தெடுத்திருக்கின்றன. தமிழ்நாட்டின் எந்த (கத்தோலிக்க) மறைமாவட்டத்திலும் அன்பியம் என்னும் வார்த்தை பயன்படுத்தாத இடம் இல்லை.

**வறீதையா:** 'கத்தோலிக்க மறைமாவட்டங்கள் அனைத்தும் அன்பிய முறைமைக்குள்ளே புகுந்தது தங்கள் அதிகார அமைப்புகளை வலுப்படுத்துவதற்காகத்தானே ஒழிய, மக்கள் பங்கேற்கிற அமைப்பை உருவாக்க வேண்டும் என்கிற உண்மையான ஆர்வத்தினால் அல்ல' என்கிற குற்றச்சாட்டும் உள்ளது...

**எட்வின்:** மதத் தலைமைகளைப் பொறுத்தவரை மக்கள் பங்கேற்பை ஊக்குவிக்கும் கொள்கை தெளிவாக இருக்கிறது. ஆனால் நடைமுறையில் அடிமட்டத்துக்கு வருகிறபோது எல்லோருக்கும் அந்தத் தெளிவு இருக்கிறதா, அல்லது வெறும் நிர்வாக வாய்ப்பாக மட்டுமே இருக்கிறதா என்பதில் சிறு குழப்பம் இருப்பதாகத் தோன்றுகிறது. கொள்கை ரீதியாக எல்லோருக்கும் போதிய தெளிவு *(concept clarity)* இல்லை. அன்பியம் என்னும் அமைப்பு எதற்காக வேரூன்ற வேண்டும் என்று நாம் ஆசைப்படுகிறோமோ அதற்காகத்தான் எல்லோரும் அன்பியம் வேண்டும் என்கிறார்கள் என்று சொல்வதற்கில்லை. மறைமாவட்டம் சொல்கிறது அதனால் வேறு வழியில்லை என்று சிலர் ஏற்றுச் செயல்படுகிறார்கள்.

**வறீதையா:** அன்பியக் கருத்தியலிலும் *(concept)* நடப்பிலும் *(process)* மேய்ப்புச் சமூகத்தினரின் ஈடுபாடு *(clerical commitment)* எப்படி உள்ளது?

**எட்வின்:** அருட்பணிச் சமூகத்தினரிடையே 'பங்கேற்பு அமைப்பு' பற்றிய தெளிவும், அது விடுக்கும் சவால்கள் பற்றிய தெளிவும் இருக்கின்றனவா என்பதில் எனக்குச் சந்தேகமிருக்கிறது. ஆனால்

திசை அந்த வழியில்தான் இருக்கிறது, அது *irreversible* ஆகவும் இருக்கிறது. மெதுவாகவே நகர்கிறது என்றாலும்கூட சரியான பாதையில்தான் போகிறது. இப்போது அமைப்பாண்மை உருவாகிவருகிறது; அமைப்பாண்மைக்கு ஏற்ற மனப்பாங்கும் *(mind set)* உருவாக வேண்டும். அதற்கு இன்னும் சிலகாலம் பிடிக்கும்.

இந்த அமைப்பாண்மை கத்தோலிக்க மறைமாவட்டங்கள் என்னும் எல்லைகளைத் தாண்டிச் சென்று எல்லா மக்களையும் உட்படுத்துகிற அமைப்பாக உருவாக வேண்டும். எல்லா மதத்தினரையும் உட்படுத்துகிற அமைப்பாக, இதை முன்வைக்க வசதியாக அரசியல் பொருளாதார- சமூக வளர்ச்சிக்கான கட்டுக்கோப்பாகப் பார்க்கும் வகையில் சுற்றம் என்றழைத்தோம். மக்கள் மன்றம் என்று போடுங்களேன் என்றார்கள். இதற்கு ஒரு அரசியல் பரிமாணமும் இருக்கிறது என்பதை வெளிக்காட்டும் விதத்தில் அக்கம் பக்கத்துப் பாராளுமன்றம் என்று போடுங்களேன் என்றார்கள். இப்படி அண்டைச் சுற்றம் என்கிற அக்கம் பக்கத்துப் பாராளுமன்றத்திலிருந்து தொடங்கி அடுத்தடுத்த நிலைகளினூடே வளர்ந்து உலகப் பாராளுமன்றமாகப் பரிணமிக்கிற ஒரு புதிய கனவைக் கொடுக்க முயன்று வருகிறோம். இதற்குப் பெருத்த வரவேற்பும் இருக்கிறது. இதைப்பற்றி ஐக்கிய நாடுகள் சபையில் விவாதம் நடக்கிறது. மக்கள் பங்கேற்புக்கான சிறந்த வகைமாதிரி என்கிற அளவில் ஐ.நா.வின் பரிசீலனையில் உள்ளது.

ஒரு நல்ல விஷயத்தை எங்கே இருந்துகொண்டு செய்தாலும், அதைத் தீவிரமாகச் செயல்படுத்துவதாக இருந்தால் அதற்கொரு விளைச்சல் வந்தே தீரும். எல்லோரும் வறுமை ஒழிப்புக்கு, அரசியல் பங்கேற்புக்கு, திட்டமிட்ட வளர்ச்சிக்கு இந்தச் சுற்றம் பங்களிப்பு செய்திருக்கிறது என்பதற்கான நடைமுறை உதாரணங்கள் *(working models)* உண்டா என்று தேடுகிறார்கள். கன்னியாகுமரி மாவட்டத்தின் இப்போதைய நிலையைக் கணக்கிலெடுத்துக் கொண்டு இந்தக் கடற்கரை ஊர்களிலாவது இதை உருவாக்கி வைத்துவிட்டோமானால் உலகமெங்கும் இது போன்ற மாற்றங்களை வேகப்படுத்த உதவும்.

**வஹீதையா:** *'வாடகைத் தலைமைகள் கடற்கரைச் சமூகங்களின் நீடித்த வளர்ச்சிக்குத் துணை செய்வதைவிடத் தடைசெய்வதே அதிகம்' என்னும் நிலைப்பாட்டை எடுக்கும் சிந்தனையாளர்கள்/திறனாளர்களில் நீங்களும் ஒருவர். அப்படியென்றால் உள்ளூர் அளவில் வலுவான மாற்றுத் தலைமைகளை உருவாக்குவதற்கு நீங்கள் சொல்லும் உபாயம் என்ன?*

**எட்வின்:** உங்கள் கேள்விக்கு நான் தருகிற பதிலைச் சிலர் தவறாகப் புரிந்துகொள்ளக்கூடும். முதலில் ஒன்றைத் தெளிவு படுத்திவிட விரும்புகிறேன். பங்குத் தந்தையர்கள் நிறையச் செய்யவில்லை என்று ஒருபோதும் சொல்லமாட்டேன். அவர்கள் நிறையவே செய்திருக்கிறார்கள். கடற்கரை ஊர்களில் அன்று இருந்த நிலைமையில், வெவ்வேறு பிரச்சினைகளுக்கு நடுவில் அடிப்படையாக ஒரு தலைமையைக் கொடுத்தவர்கள் அவர்கள்தான். பொறாமையும் போட்டியும் நிலவிய வேளையில் கொஞ்சம் கொஞ்சமாக ஊரில் ஓர் ஆளைப் பிடித்து ஒரு பள்ளிக்கூடத்தை உருவாக்கி, ஏழாம் வகுப்பு வரையாவது படிக்க வைத்து, ஊருக்குள்ளே பள்ளியை நடத்துவதற்கு மேல்வகுப்பு படித்தவர்களைத் தேடியலைந்து... இப்படியெல்லாம் நிறையச் சொல்லலாம். இப்போதைய கேள்வி பங்கு சாமியார்கள் நன்றாகச் செய்திருக்கிறார்களா இல்லையா என்பதல்ல.

**வறீதையா:** இவற்றில் எதுவும் ஆன்மீகப் பணியாளர்களுக்கு விதிக்கப்பட்டதல்ல; அவர்கள் மேய்ப்புப் பணிக்காக ஊர்களுக்கு அனுப்பப்பட்டவர்கள். எதிர்காலப் பார்வையும் அர்ப்பண உணர்வும் கொண்டிருந்த சில பணியாளர்கள் நீங்கள் குறிப்பிடுவது போலச் சில பணிகளை- அவரவர்க்குத் தோன்றிய விதத்தில்- எடுத்துச் செய்தார்கள்.

**எட்வின்:** வாடகைத் தலைமை என்கிற வார்த்தையை நீங்கள் பயன்படுத்துகிறீர்கள். நீங்கள் சொல்லுவது போல, வெளியில் எங்கோ இருக்கிற ஒருவர் மூன்று நான்கு வருடங்களுக்கு ஒருவராக வந்து ஊரின் சார்பில் பேசுகிறார். இன்று வருகிறவர் ஒரு சிந்தனையோடு வருகிறார்; நாளை வருபவர் வேறொரு சிந்தனையோடு வருகிறார்; ஊருக்கு ஒரு நீடித்த, சீரான வெளிப்பாடு (*sustainable, consistent articulation*) இருக்கிறதா? அப்படி இல்லாமல் போகிறபோது, தலையே வேறுவேறு விதங்களில் பேசுகிறபோது வளர்ச்சி எந்தத் திசையில் போகும்? சீரான வளர்ச்சிக்கு இது உதவுமா? இதுதான் நம்முன் வைக்கப்பட்டுள்ள கேள்வி.

ஊர்களில் அடிபிடி வருகிறது. ஒருவன் சண்டையை உண்டாக்குகிறான், ஒளிந்து கொள்கிறான். அவன் சார்பாகப் பேசவேண்டிய ஆளாகப் பங்கு சாமியார் இருக்கிறார். அடிபிடி நடத்தியவன் ஒளிந்துகொள்ள, பங்குப்பேரவைத் தலைவர் பதில் சொல்ல வேண்டியிருக்கிறது! நாளை அந்தச் சாமியார் இடமாற்றம் பெற்றுப் போய்விடுகிறார், ஒளிந்து கொண்டவன் மீண்டும் ஊரில் சண்டையை உண்டாக்குகிறான். இப்போதும் பங்குச் சாமியார்தான்

பதில் சொல்ல வேண்டும். இதுதான் நமது ஊர்களில் நிலவிவரும் நிர்வாக அமைப்பு.

செய்கிற செய்கைகளுக்குப் பதில் சொல்லும் பொறுப்பு அந்த மக்களுக்கே இல்லையென்றால் அவர்களிடம் பொறுப்புணர்வும் முதிர்ச்சியும் வருவதற்கு வாய்ப்பில்லை. 'நாம் சண்டை ஏற்படுத்தினால் போலீஸ் நம்மைத்தான் கைது செய்யும்; நடவடிக்கை எடுக்கும். சாமியார் முந்தானையில் ஒளிந்து கொள்ள முடியாது' என்கிற அளவில் 'பொறுப்பேற்கிற நிலை' ஏற்பட்டால் ஊரில் பொறுப்புத் தன்மை அதிகரிக்க வாய்ப்பிருக்கிறது.

ஒவ்வொரு சாமியாரும் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு கருத்தியலோடு *(ideology)* வருகிறார். உதாரணமாக, இன்று வருகிறவர் '*left*' என்கிறார், யார் யார் '*left*' நிலை எடுத்திருக்கிறார்களோ அவர்கள் ஊக்குவிக்கப்படுகிறார்கள். மேலெழுகிறார்கள். அடுத்து வருகிற சாமியார் '*right*' என்பார். இப்போது '*left*' தரப்பு கீழே படுத்துவிட, '*right*' தரப்பு மேலெழும்பும். அடுத்து வருகிற சாமியார் '*left*'ம் இல்லை, '*right*'ம் இல்லை, '*centre*'! இப்படியே நிலைப்பாடுகள் சுழன்று சுழன்று ஒரு ரவுண்ட் முடிகிறபோது '*left*' தரப்பு யோசிக்கிறது நாம்தான் அடிவாங்கியாகிவிட்டதே, இனி பின்னுக்குப் போய்விடுவோம் என்று; '*right*' தரப்பும், '*centre*' தரப்பும்கூட இதையே யோசிக்கும். ஊரில் இருக்கிற தலைமைகள் முறையாகப் பொறுப்பேற்று அதனால் தங்களுடைய திறமைகளை வளர்த்துத் தங்களைப் பக்குவப்படுத்திக் கொள்வதற்கான வாய்ப்பு குறைகிறது. வெளியிலிருந்து (அரசு) அதிகாரிகள் வந்தாலும் சாமியாரைத்தான் போய்ப் பார்க்கிறார்கள். வேறு வழியில்லாத நிலையில் இன்றும் இது தொடர்கிறது. பழைய அணுகுமுறைகளைவிட இன்று நீடிக்கிற பங்குப்பேரவை என்னும் அமைப்பு அதிகமான ஜனநாயகத் தன்மையோடு இருக்கிறது; சற்று மேம்பட்ட 'நல்ல திட்டங்களை' செயல்படுத்துகிற அளவுக்கு மேம்பட்டுள்ளது என்று சொல்லலாம்.

**வறீதையா:** பங்கேற்பு முறையில் தீர்மானமெடுத்தல் *(participatory decision making)* சாத்தியமாகியிருக்கிறது என்று சொல்ல முடியுமா?

**எட்வின்:** ஆமாம்! அதனால் பல பிரச்சினைகள் தேய்ந்துபோய் விட்டன. அதிகாரப் போட்டிகளில் பல ஊர்களில் நிலவிய பிரச்சினைகள் இப்போது காணாமல் போய்விட்டன. சில ஊர்களில் பழைய நிலை இன்னும் நீடிக்கிறது.

**வறீதையா:** இது அரசாளும் தலைமை அல்ல, சேவை புரிவதற்கான வாய்ப்பு என்னும் மனப்போக்கு நுழைந்திருக்கிறதா?

**எட்வின்:** படிப்படியாக வருகிறது. முழுவதும் வந்திருப்பதாகச் சொல்ல முடியாது. இன்று இந்த நிலைமைக்குக் கொண்டு வந்திருக்கிறோம். 'இதையும் தாண்டி முன்னே செல்ல வேண்டாமா?' என்னும் கேள்வி எழுகிறது.

**வறீதையா:** கடினமான பாதைகளினூடே நெடும் பயணங்களை நிறைவு செய்திருக்கிறீர்கள். நிச்சயமாக இது வரலாற்றுச் சாதனை. இனி வருகிற பயணம்...

**எட்வின்:** அது எளிதாகவே இருக்கும். ஆனால் அதற்கான சிந்தனைத் தெளிவு ஏற்பட வேண்டும். புதிய அமைப்பாண்மை நடைமுறையில் வருகிறபோது எவர் எவருக்கு என்னென்ன பொறுப்பு, என்னென்ன வரையறைக்குள் அது இயங்கும், அதைக் கட்டிக்காப்பது எப்படி, சாமியாரிடமிருந்து விடுபட்ட பிறகு அந்த அமைப்புக்குப் பலம் இருக்குமா?- இவையெல்லாம் சில அருட்பணியாளர்கள் எழுப்புகிற கேள்விகள். இந்தக் கேள்விகளுக்கான பதில்கள் தெளிவாக உருவாகவேண்டும். குருக்கள் பலரிடம் இதை நான் விவாதித்திருக்கிறேன். தாங்கள்தாம் மேலிருந்த ஆளவேண்டும் என்னும் பிடிவாதம், ஆசை அவர்களுக்கு இல்லை. நிறையக் கேள்விகள் எழுகின்றன. இரட்டை நிர்வாகம் நடைமுறையில் வந்தால் பங்கு நிர்வாகத்தின் நிலை என்னவாக இருக்கும் என்பது ஒரு கேள்வி.

**வறீதையா:** அண்மையில் ஓர் ஆன்மீகப் பணியாளர் என்னிடம் கேட்டார்- 'அதிகாரம் எல்லாம் உங்கள் கையில் வந்துவிட்டால் பிறகு எங்களுக்கு என்ன வேலை?' கல்வி நிறுவனத்தின் மைய இலக்கு மாணவன்தான். மக்களாட்சியின் மைய இலக்கு குடிமகன். திருச்சபையின் மைய இலக்கு விசுவாசிகள்தானே? மாணவர்கள் இல்லையென்றால் ஆசிரியருக்கு என்ன வேலை? திருச்சபையில் மாற்றங்களை யோசிக்கும்போது குருக்களை முன்னிலைப்படுத்தும் அணுகுமுறை அடிப்படையிலேயே தவறானது என்று கருதுகிறேன்.

கத்தோலிக்கத் திருச்சபை நிறுவன அமைப்புக்கு உட்படாத சமூகங்கள் தங்களை எப்படி மேலாண்மை செய்துகொள்கின்றன? உலகின் மிகப்பெரிய குடியரசான இந்தியா கடந்த அரை நூற்றாண்டுக்கு காலமாக எப்படி நிர்வாகம் செய்கிறது? அரசியல் சாசனக் காப்பாளராகக் குடியரசுத் தலைவரும், மக்கள் அரசின் தலைவராக ஒரு பிரதமரும் அவரவர் அதிகார வரம்புகளுக்குள் நின்று சீராக இயங்க முடிகிறதல்லவா? அதிகார எல்லைகளை வரையறுத்து நூற்றைந்து கோடி மக்களை நிர்வகிக்கும் ஒரு குடியரசு நீடித்து இயங்குவது சாத்தியமென்றால், 3000 மக்கள் வாழுகிற

சிறு கிராமத்தை இது போன்ற ஒரு வழிமுறையில் ஏன் நிர்வகிக்க முடியாது? மாற்று வகைமாதிரிகளை உருவாக்கும் காலக்கடமை மக்களுக்கு உண்டு. முன்முடிவுகள் மனம் திறந்த விவாதத்துக்கு வழியில்லாமல் ஆக்கிவிடும்!

**எட்வின்:** இரட்டை நிர்வாகம் நடைமுறைக்கு வந்து, நிர்வாக அதிகாரங்கள் மக்கள் கைக்குப் போய்விட்டன என்றால் குருக்கள் எந்தப் பணிக்காக அனுப்பப் பட்டார்களோ அந்தப் பணியை இன்னும் சிறப்பாகச் செய்யலாம். குருக்களின் பணியை நான் ஒரு பூசாரியின் வேலையாகப் பார்க்கவில்லை. இயேசுவின் பார்வையில் குருக்கள் பூசாரிகள் அல்லர், ஏசுவின் சீடர்கள்; ஒரு புதிய உலகத்தை உருவாக்குவதற்காக அனுப்பப்படுகிற தூதர்கள்; இறையாட்சியைக் கொணர அனுப்பப்பட்டவர்கள். இறையாட்சி என்பது மக்களை மோட்சத்துக்கு இட்டுச்செல்கிற பணி. அன்பு ஆட்சி நடத்தினால் என்னென்னவெல்லாம் இருக்கும்! அப்படி ஒரு உலகம் இங்கு வரவேண்டும். இதை மக்கள் கனவுகாண வைப்பதுதான் குருக்களின் பணி. இதற்குக் குருக்கள் தங்களை அர்ப்பணித்துக் கொள்ளவேண்டும். ■

# 03

# நான் பணியாளனா, தலைவனா?

**பணி. மாற்கு ஸ்டீஃபன் சே.ச.**

எனது பயிற்சிக் காலத்தில் அவ்வளவாக எந்தப் பங்கிற்கும் சென்றதில்லை. பங்கை எப்படி நிர்வகிப்பது என்றோ பங்கில் எப்படிச் செயல்படவேண்டும் என்பதோ அதிகமாக எதுவும் தெரியாது. பங்கு நிர்வாகம் பற்றி அதிகம் தெரியாத என்னை, உதவிப் பணியாளராக நியமிக்காமல் பங்குப் பணியாளராக, அதுவும் திருநிலைப்படுத்தப் பட்டவுடன் நியமித்திருக்கிறாரே என்ற தயக்கம் என்னில் எழுந்தது. அதே சமயம் மாநிலத் தலைவர் என்னில் நம்பிக்கை வைத்து என்னை நியமித்திருக்கிறார். அந்த நம்பிக்கையைச் சிதறடித்துவிடக் கூடாது என்று எண்ணினேன். பங்குப் பணிக்குத் தயாரிக்க ஆரம்பித்தேன்.

பங்கு என்றதும் சிறுவயதில் எனது ஊரில் பணியாற்றியவர்கள் செய்த பணிகள் ஞாபகத்திற்கு வந்தன. பயிற்சிக் காலத்தில் நான் சென்ற பங்குத் தளங்களில் இருந்த பணியாளர்கள் செய்தவற்றையும், நான் கேள்விப்பட்ட சிறந்த பணியாளர்களின் தொண்டினையும் நினைத்துப் பார்த்தேன். அவற்றைப் பட்டியலிட்டேன்:

- பங்குப் பணியாளர் மக்களுக்குத் தலைமை தாங்கிப் பொறுப்புடன் முன்னின்று நடத்திச் செல்லுபவர். அப்படியானால் நான் ஒரு தலைவரா?
- குடும்பப் பிரச்சினைகளைப் பொறுமையுடன் கேட்டு, அவை தீர வழிகளைக் கூறுபவர். அப்படியானால் நான் ஓர் ஆலோசகரா?
- மக்களின் பிரச்சினைகள் தீர இறைவனிடம் பரிந்து பேசுபவர். நான் ஒரு பரிந்துரையாளரா?
- பங்கில் நடக்கும் எல்லாப் பணிகளையும் கண்காணிப்பவர். நான் ஒரு மேற்பார்வையாளரா?

- அதிகாரிகளோடும், அரசியல் தலைவர்களோடும் தொடர்பு வைத்துக் கொண்டு மக்களுக்குத் தேவையானவற்றைப் பெற்றுத் தருபவர். நான் ஓர் இடைத்தரகரா?
- சூழ்நிலைக்கு ஏற்றபடி வளைந்துகொடுத்துச் செயலாற்றுபவர். நான் ஒரு சந்தர்ப்பவாதியா?
- பங்கின் வளர்ச்சிக்காகக் கட்டடம் கட்டுபவர். நான் ஒரு பொறியாளரா?
- பள்ளியைக் கட்டி சிறப்புடன் நடத்தி வருபவர். நான் ஒரு நிர்வாகியா?
- மக்களுக்காக வெளிநாட்டிலிருந்து கோதுமை, பால்பவுடர், எண்ணெய் போன்றவற்றை வாங்கிக் கொடுப்பவர். நான் ஒரு தர்ம சேவகரா?
- வெளிநாட்டுக்குச் செயல் திட்டங்களை எழுதி அனுப்பி பங்கின் வளர்ச்சிக்காக பணம் சேர்ப்பவர். நான் ஒரு வங்கி அதிகாரியா?
- பணக்காரன்- ஏழை, உயர்ந்தவன்- தாழ்ந்தவன் என்று யார் பக்கமும் சாராதவர். நான் ஒரு நடுநிலையாளரா?
- கிறிஸ்தவ மக்கள்மீது வழக்கு நடைபெற்றால் பல விதங்களில் முயற்சி செய்து அவர்களை விடுவிப்பவர். நான் ஒரு வழக்குரைஞரா?
- மேடையேறி மக்களுக்கு புத்திமதி கூறுபவர். நான் ஒரு மறையுரையாளரா?
- நோயாளிகளைச் சந்தித்து, அவர்களுக்காகச் செபித்து தீர்த்தம் தெளித்து நோயைக் குணமாக்குபவர். நான் ஒரு மந்திரவாதியா?
- வெள்ளை அங்கியை எப்போதும் அணிந்திருந்து மற்றவர்களுக்குத் தான் ஒரு குரு என்று உடையால் அறிவிப்பவர். நான் ஒரு வேஷதாரியா?
- பெண்களுடன் பழகாமல் மிகவும் கவனமாக இருப்பவர். நான் ஒரு புலனடக்க வாதியா?
- பங்கின் வரவு செலவுகளைச் சந்தேகத்திற்கு இடமில்லாமல் எழுதி வைப்பவர். நான் ஒரு கணக்கரா?
- பங்கின் சொத்துகளை யாரும் அபகரிக்காமல் காத்துவருபவர். நான் ஒரு காவல்காரரா?
- சொத்துகளை எப்படிச் சேர்க்கலாம் என்று திட்டமிட்டுச் செயலாற்றுபவர். நான் ஒரு முதலாளியா?
- நிலங்களில் விவசாயம் செய்து விளைச்சலைப் பெருக்குபவர். நான் ஒரு பண்ணையாரா?
- பங்கில் பிரச்சினை எழும்போது அதைத் தீர்த்துவைப்பவர். நான் ஒரு நீதிபதியா?

- பிரச்சினை எழும் என்றால் அதை வளரவிடாமல் தடுப்பவர். நான் ஒரு போலீஸ்காரரா?
- மக்களுக்கு வேலை தேடிக் கொடுப்பவர். நான் ஒரு வேலை வாய்ப்பு அலுவலரா?

நான் நினைத்துப் பார்த்த பட்டியல் நீண்டுகொண்டே சென்ற அதே வேளையில் இத்தனை அவதாரங்களைப் பணியாளராகிய நான் எடுக்க வேண்டுமா என்ற கேள்விகளும் என்னில் எழுந்தன.

இதில் பெரும்பாலான வேலைகளைப் பணியாளர் செய்ய வேண்டியதில்லை. பொதுநிலையினரே செய்யலாம் என்ற எண்ணம் என்னில் உதித்தது.

நான் கிராம மக்களை ஒருங்கிணைத்துப் பணியாற்றிய 'பல்மேரா' அமைப்பின் செயல்பாடுகள் என் மனதில் எழுந்தன. அந்தச் சமூகப் பணியையும், பங்குப் பணியையும் இணைத்து சமூகப் பங்குப் பணி என்ற நிலையில் செயல்பட்டால் என்ன என்ற எண்ணம் என்னில் எழுந்தது.

அந்தப் பணியை எப்படிச் செய்யலாம் என்று நினைத்தேன். அதே நேரத்தில் சந்தேகங்களும் கூடவே எழுந்தன.

- நான் மக்களுக்குத் தலைவன் அல்ல. மக்களுக்குப் பணிபுரிய வந்த ஒரு தொண்டன். எனவே நான் தலைவன் என்று அழைக்கப்படக் கூடாது. தொண்டன் அல்லது பணியாளன் என்றே அழைக்கப்பட வேண்டும். நான் உண்மையில் ஒரு பணியாளரா?
- நான் பணியாளராக இருப்பதால் மக்கள் தலைமை ஏற்கவேண்டும். மக்களிடம் தலைமைப் பண்பை வளர்ப்பேன். மக்களின் தலைமையை நான் ஏற்பேனா?
- பணியாளர்களே செய்துவந்த சொத்தைப் பாதுகாப்பது, பணப்பொறுப்பை ஏற்பது, கணக்கு எழுதுவது, தீர்ப்பு வழங்குவது போன்ற பல பணிகளை மக்களைச் செய்ய வைப்பேன். மக்களிடம் பணப்பொறுப்பை என்னால் கொடுக்க முடியுமா?
- நான் மக்களுக்காக உழைக்க மாட்டேன். மாறாக மக்களை உழைக்க வைப்பேன். இது சாத்தியமா?
- மக்களின் இன்ப துன்பங்களில் பங்கு கொள்வேன். எப்போதும் இது முடியுமா?
- எனது பணி கிறிஸ்தவர்களுக்கு மட்டும் அல்ல. எல்லா மதத்தினருக்கும் பணியாளனாய் இருப்பேன். அது சரியான அணுகுமுறையா?

- ஏழைகள் சார்பாக இருப்பேன். அதற்காக எந்தத் தியாகத்தையும் செய்யத் தயங்க மாட்டேன். ஏழைகள் சார்பாக எப்போதும் இருக்க முடியுமா?
- ஏழைகளின் நிலையிலிருந்து சிந்தித்துப் பிரச்சினையைப் புரிந்து கொள்வேன். இது இயலுமா?
- ஏழைகள் சக்தியில் நம்பிக்கை வைத்து, அந்த ஏழைகள் சக்தியை உருவாக்க அவர்களை ஒருங்கிணைக்கும் பணியில் முழு மூச்சுடன் ஈடுபடுவேன். ஒருங்கிணைக்க முடியுமா?
- பணம், உணவு, மருந்து, உடை, வெளிநாட்டு உதவி போன்ற தற்காலிக உதவிகளைச் செய்ய மாட்டேன். இந்த உதவிகள் செய்பவரைப் பெரியவராகச் சித்திரிக்கும். மக்கள் நன்றியுள்ளவர்களாக இருப்பர். அதனால் மக்களிடம் பணியாளர் பற்றிய ஆய்வுக் கண்ணோட்டம் இருக்காது. மேலும் மக்களுக்குக் கொடுத்துக் கொடுத்து அவர்களைப் பிச்சைக்காரர்களாக உருவாக்க மாட்டேன். கஞ்சன் என்று மக்கள் கூறுவார்களோ?
- ஏழைகளே தங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்க வேண்டும். அத்தகைய சூழ்நிலையை உருவாக்குவேன். உருவாக்க முடியுமா?
- மறுஉலகம் பற்றிப் பேசி மக்களைத் திசை திருப்பாமல் இவ்வுலகிலேயே இறையரசு மலரும் சாத்தியக் கூறுகளை எடுத்துச் சொல்வேன். உண்மையிலேயே இது சாத்தியமா?
- நீதி, உண்மை, சமத்துவம், சகோதரத்துவம், பகிர்வு போன்ற மனித மதிப்பீடுகள் அன்பு என்ற அடித்தளத்திலிருந்து மலர்கின்றன. இத்தகைய மதிப்பீடுகளில்தான் இறையரசு இருக்கிறது என்பதை மக்களுக்கு விளக்குவேன். எப்போதும் இது முடியுமா?
- இத்தகைய மதிப்பீடுகளுக்கு ஆதரவு தரும் கட்சிகள், இயக்கங்கள் முதலியவற்றுடன் தோழமை உணர்வுடன் பழகுவதோடு மக்களிடமும் இத்தகைய தோழமை உணர்வை வளர்ப்பேன். வளர்க்க முடியுமா?
- இந்த அமைப்புகள் மனித உரிமைக்காக நடத்தும் போராட்டங்களில் மக்களுடன் இணைந்து பங்கு கொள்வேன். அப்படிப் பங்கேற்க முடியுமா?
- மக்களை ஒருங்கிணைக்கும் பணியில் ஈடுபட்டுள்ள தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள், இயக்கங்கள், தொழிற்சங்கங்கள் முதலியவற்றுடன் இணைந்து செயல்படுவேன். இணைந்து செயல்பட விடுவார்களா?
- பங்கில் பெண்களுக்குச் சம வாய்ப்புக் கொடுப்பேன். ஆணாதிக்கச் சூழ்நிலையில் இவ்வாறு செயல்பட முடியுமா?

- வழிபாடுகளை அர்த்தம் நிறைந்ததாக மாற்றி, மக்கள் ஈடுபாடு அதிகம் இருக்கும்படி கவனித்துக் கொள்வேன். வழிபாட்டை மாற்ற முடியுமா?
- ஒவ்வொரு வழிபாடும் மக்களைச் சமூகத்தில் பங்கெடுக்கச் செய்யும் சமூக வழிபாடாக மாற்றி அமைப்பேன். எப்போதும் இது சாத்தியமா?
- பிற மதத்தினரின் வழிபாட்டை மதிப்பதோடு மற்றவர்களையும் மதிக்கச் செய்வேன். மதிக்க முடியுமா?

இப்படித்தான் செயல்பட வேண்டும் என்று நினைத்தாலும் இப்படிச் செயல்படுவது சாத்தியமா என்ற கேள்வியும் என்னிடம் எழுந்தது.

யாரிடமாவது உதவிப் பங்குப் பணியாளராக இருந்திருந்தால் பங்குப் பணியை இப்படித்தான் செய்ய வேண்டும் என்று மூளைச்சலவை செய்திருப்பார். யாரிடமும் உதவிப் பங்குப் பணியாளராக இல்லாமல், பங்கு பற்றி அதிகம் தெரியாமல் செல்வதே நல்லது என்று அப்போது எனது மனதுக்குப் பட்டது. நான் நினைத்தபடி செயல்பட ஓரளவு திட்டமிட்டு பணியை ஆரம்பிப்போம், இறைவன் வழிநடத்துவார் என்று இறைவன்மீது முழு நம்பிக்கையை வைத்து பணித்தளம் நோக்கிப் புறப்பட்டேன்.



மறுநாள் கோட்டார் சென்றேன். ஆயர் ஆரோக்கியசாமியைச் சந்தித்து என்னை அறிமுகப்படுத்திக் கொண்டேன்.

“அடடே அது நீங்கள்தானா. வாங்க. உங்களைக் கோட்டார் மறைமாவட்டம் அன்புடன் வரவேற்கிறது. கோட்டார் மறைமாவட்டத்தில் கிறிஸ்தவத்திற்கு அடித்தளமிட்டதே இயேசு சபையினர்தான். இந்த மறைமாவட்டத்தின் பாதுகாவலர்கூட சவேரியார் என்ற ஓர் இயேசு சபைப் புனிதர்தான். ஆனால் இயேசு சபையினர் இங்கு எந்தப் பங்கிலும் இல்லை. இயேசு சபையினர் வேண்டும் என்று நான்தான் அழைத்தேன். உங்கள் பணி சிறக்க வாழ்த்துகள். நான் கோடிமுனைப் பங்குத் தந்தைக்குத் தகவல் அனுப்புகிறேன். அவர் வந்து உங்களை அழைத்துச் செல்வார்” என்று அன்புடன் வரவேற்றார்.

மாலையில் கோடிமுனைப் பணியாளர் எட்வின் வந்தார். அவர் மூலம்தான் இயேசு சபையினர் எப்படிக் கோடிமுனைக்கு வர நேரிட்டது என்ற விவரம் கிடைத்தது. தெற்கு ஆசிய மதச் செய்திகள் *(South Asian Religious News)* என்ற அமைப்பில் குஜராத் மாநிலத்தைச்

சேர்ந்த இயேசு சபையினர் ஒருவர் பணியாற்றியிருக்கிறார். அவருக்குப் பதிலாக பணியாளர் எட்வின் அப்பொறுப்பை ஏற்பதாக இருந்தது. எனவே எட்வினுக்குப் பதிலாக ஒரு இயேசு சபையினர் வேண்டும் என்ற நிலையில் நான் கோடிமுனைக்கு அனுப்பப் பட்டிருக்கிறேன்.

பணியாளர் எட்வின் அன்பானவர். மனித நேயமுள்ளவர். சிறந்த சிந்தனையாளர். எழுத்தாளர். மக்களுக்கு ஏற்ற பணிபுரிவதில் வல்லவர். அன்பியங்களைத் தமிழகத்தில்– ஏன், இந்தியாவிலேயே முதன்முறையாகக் கோடிமுனையில் ஆரம்பித்துச் சிறப்பாக வழிநடத்தியவர். இன்று நான் ஓரளவு சிறப்பாகப் பங்குப்பணி புரிகிறேன் என்றால் அதற்கு அடிப்படைக் காரணம் எட்வின் என்றுதான் சொல்வேன்.

நான் பிறந்து வளர்ந்த ஊர் மேற்குத் தொடர்ச்சி மலையின் அடிவாரத்தில் இருந்தது. மலையிலிருந்து வந்த நீரோட்டத்தின் காரணமாக வயல்கள் எப்போதும் பசுமையாக இருந்தன. எங்குப் பார்த்தாலும் கண்ணுக்குக் குளுமையான பச்சை நிறம். ஊரில் பலசாதி மக்களும் வாழ்ந்தனர். ஒருவர் ஒருவரைச் சார்ந்தும், விலகியும், விட்டுக்கொடுத்தும் வாழ்ந்தனர். கோடிமுனை அதற்கு முற்றிலும் மாறாக இருந்தது. கடற்கரை கிராமம். அனைவரும் கத்தோலிக்கக் கிறிஸ்தவர்கள். ஒரே சாதியினர். முக்குவர். அனைவரும் மீனவர்கள். சுமார் ஆறாயிரம் பேர் கிராமத்தில் இருந்தனர். கிளைப் பங்கு என்று எதுவும் கிடையாது.

துணிவுடன் பங்குப் பணியாளர் பொறுப்பை ஏற்றேன். கோடிமுனையில் பங்குப் பணியாளர் என்ற முறையில் மேடையில் (பணியாளரின் இருப்பிடத்தை மேடை என்றுதான் அழைக்கின்றனர்) தனியாகத் தங்குவதற்குக் கடினமாக இருந்தது. அதுவரை குழுமத்துடன் இருந்து பழக்கப்பட்ட எனக்குத் தனியாக இருப்பது என்னவோபோல் இருந்தது. ஒரு கிலோமீட்டர் தொலைவில் குளச்சல் என்ற பங்கு இருந்தது. அப்பங்கின் பணியாளர்தான் சின்ன ஆண்டவராக (மறைவட்ட முதல்வரை இவ்வாறு அழைப்பர்) இருந்தார். அவருடன் இரண்டு உதவிப் பணியாளர்கள் இருந்தனர். நான் சின்ன ஆண்டவரிடம் அங்கு தங்கிக் கொள்ளலாமா என்று கேட்டேன். தாராளமாகத் தங்கச் சொன்னார். எனவே இரவில் தங்குவதற்கு அங்குச் சென்றேன்.

நான் திட்டமிட்டவாறு ஒருசிலவற்றை என்னால் செய்ய முடியாத சூழ்நிலை ஏற்பட்டது. குழந்தைகளுக்கு நான் திருமுழுக்குக் கொடுக்கமாட்டேன் என்று முடிவெடுத்திருந்தேன். ஆனால் இங்கு வந்த பின்பு அப்படிப்பட்ட உறுதிமொழிகளைக் கடைப்பிடிக்க

முடியாது என்ற யதார்த்தத்தை நான் உணர்ந்தேன். அதே சமயம் புதியவற்றைக் கற்றுக் கொண்டேன்.

கோடிமுனையில் ஒவ்வொரு அன்பியத்திற்கும் முப்பது வீடுகள் இருந்தன. மொத்தம் பதினாறு அன்பியங்கள். ஒவ்வொரு அன்பியத்திலிருந்தும் ஆண், பெண் பிரதிநிதிகள் தேர்வு செய்யப்பட்டு, பங்குப் பேரவை என்ற முழு வளர்ச்சிச் சங்கம் இருந்தது. அதில் நிதிக்குழுவும் இருந்தது. நிதிப் பொறுப்பை நிதிக்குழுவே ஏற்றுக் கொண்டது. நிதியைப் பங்குப் பணியாளர் கையாளக்கூடாது என்ற பாடத்தை நான் எட்வினிடமிருந்து புரிந்து கொண்டேன்.

கோடிமுனையில் அன்பியங்களை ஆரம்பித்த எட்வின் மற்றப் பங்குகளிலும் அன்பியங்கள் ஆரம்பிக்கப் பயிற்சி கொடுத்தார். அந்தப் பயிற்சியை நானும் மற்றப் பங்குகளுக்குக் கொடுக்க ஆரம்பித்தேன்.

மக்களோடு வெகு இயல்பாகப் பழக எண்ணினேன். எனக்கென்று தனியாகச் சமைக்கவில்லை. தினமும் காலையும் பகலும் ஏதாவது ஒரு வீட்டில் உணவு உண்டேன். இரவு உணவிற்குக் குளச்சல் சென்று விடுவேன். ஒவ்வொரு நாளும் யாராவது ஒரு வீட்டினர் உணவிற்கு அழைப்பர். யாரும் அழைக்கவில்லை என்றால்கூட உணவிற்குப் பிரச்சினையில்லை. ஏதாவது ஒரு வீட்டிற்குச் செல்வேன். அவர்கள் உணவு தருவர். பணியாளர் ஒருவருக்கு மட்டும் சமைக்க ஒரு வேலையாள் வைப்பது என்பது தேவையற்றது. பணியாளர்கள் மக்களது வீடுகளில் உணவு உண்பதுதான் இயேசு விரும்பும் ஆன்மீகமாக இருக்கும் என்று நான் நம்பினேன்.

வீடுகளில் உணவு உண்டதால் மக்களோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு கிடைத்தது. சில சமயங்களில் அவர்களோடு கடலுக்குச் சென்று மீன்பிடித்தேன். கடலில் மூழ்கி அவர்களைப் போல தோடு எடுத்தேன். கடலுக்குச் செல்லும்போது வலைப்பட்ட மீன்களில் எனக்கும் ஒரு பங்கு கிடைத்தது.

மலையின் பிரமாண்டத்தையும், அதன் அழகையும், அங்கு வாழும் பறவைகள், விலங்குகளையும் கண்டு வியந்த நான் கடலின் பிரமாண்டத்தையும், அழகையும் அதில் வாழும் பலவகை மீன்களையும் உயிரினங்களையும் கண்டு அதிசயித்தேன். கடலில் மூழ்கி முத்தெடுப்போர் அணியும் கண்ணாடியை அணிந்துகொண்டு தோடு எடுக்கக் கடலில் மூழ்கியபோது கடலின் உள்ளேயுள்ள இயற்கை அழகை மூச்சு முட்டும்வரை ரசித்துள்ளேன். விண்ணகம் இப்படித்தான் இருக்குமோ என்று வியந்தேன். கடலின் தொடர் அலையோசைக்குப் பழகிக் கொண்டேன். முதலில் தொந்தரவாகத் தோன்றிய அலையோசை பிறகு தாலாட்டாக மாறியது.

அப்போது கோடிமுனையில் கல்லறைப் பிரச்சினை எழுந்தது. கல்லறையில் இறந்தவர்களைப் புதைப்பதற்கு இடம் இல்லை. மாற்று இடம் வாங்குவதில் நிதிக்குழு தீவிரமாக இருந்தது. அதற்கான நிதி ஆதாரத்தைச் சேர்க்க முடியாமல் தவித்தது.

கல்லறையைச் சென்று பார்த்தேன். மூன்று விதமான கல்லறைகள் இருந்தன. மிகவும் அழகிய கட்டடமாகக் கட்டப்பட்ட பணக்காரக் கல்லறைகள், கல்லால் சிலுவை நடப்பட்டிருந்த நடுத்தர வர்க்கத்துக் கல்லறைகள், மரத்தால் சிலுவைகள் மட்டுமே நடப்பட்டிருந்த ஏழைக் கல்லறைகள் என்று இருந்தன. கல்லறைகளில்கூட இந்தப் பாகுபாடா? கல்லறையிலிருந்து ஏன் சமத்துவத்தை ஆரம்பிக்கக்கூடாது? மேலும் மேலும் கல்லறைகளாகவே கட்டினால் உலகில் கல்லறைகள்தானே மிஞ்சும்! மனிதர்கள் வாழ்வதற்கு இடமே இருக்காதே! எனவே கல்லறைகள் அனைத்தையும் இடித்துச் சமமாக்கிவிட்டு மறுபடியும் இதே இடத்தில் புதைப்பதற்கு ஏற்பாடு செய்தால் என்ன என்ற எண்ணம் என்னில் எழுந்தது. முயலலாம் என்று முடிவெடுத்தேன். ஒவ்வொரு அன்பியத்தையும் அழைத்து கல்லறைப் பிரச்சினை பற்றிப் பேசி கல்லறையை மறுபடி பயன்படுத்தும் விதத்தைக் கூறினேன். இது நல்ல கருத்து என்று பலர் ஆதரித்தனர். ஒருசிலர் வேண்டாம், புதிதாக இடம் வாங்குவோம், பணம்தானே பிரச்சினை, அதற்கு வரி போடுவோம் என்றனர்.

அன்பியம் செபக் குழுவாக மட்டும் செயல்படக் கூடாது; சமூகப் பொறுப்பும் அதற்கு உண்டு என்பதை உணர்ந்த நான் கல்லறைப் பிரச்சினை தீர என்ன வழி என்று அன்பியக் கூட்டத்தில் விவாதித்துப் பதிலை எழுதித் தரவேண்டும் என்றேன். ஆச்சரியப்படும் விதத்தில் அனைத்து அன்பியங்களும் கல்லறைகளை இடித்துவிட்டு அதையே மறுபடியும் பயன்படுத்தலாம் என்றனர். மகிழ்ந்தேன். வழக்கமாக ஏழைகள்தான் அன்பியக் கூட்டங்களில் அதிக ஆர்வம் காட்டுவர். பணக்காரர்கள் அன்பியக் கூட்டங்களுக்கு வருவது மிகவும் அபூர்வம். எனவே எடுக்கப்பட்டது ஏழைகளின் முடிவாக இருந்தது.

ஏழைகளின் முடிவைச் செயல்படுத்தத் திட்டமிட்டேன். மிகவும் கவனமாகச் செயல்பட்டேன். பங்குப் பேரவை என்ற முழு வளர்ச்சி சங்கத்தில் மறுபடியும் கல்லறைப் பிரச்சினை பற்றிக் கூறி அன்பியங்களின் முடிவைக் கூறினேன். பங்குப் பேரவையும் அன்பியங்களின் முடிவை ஆதரித்தது. மூன்று வாரங்கள் தொடர்ந்து ஞாயிற்றுக் கிழமைகளில் பங்குப் பணியாளர் முழு வளர்ச்சி சங்கத்தின் முடிவை அறிவிக்க வேண்டும். தங்களது சொந்தக்காரர்கள் புதைக்கப்பட்ட கல்லறைகளைச் சம்பந்தப்பட்டவர்களே இடித்துச்

சமப்படுத்த வேண்டும். அல்லது நான்காம் வாரம் அனைத்துக் கல்லறைகளும் இடித்துச் சமமாக்கப்படும். இனிமேல் இறந்தவர்களைக் கல்லறையில் வரிசையாகப் புதைக்க வேண்டும். புதைத்த இடத்தில் யாரும் கல்லறை கட்டக் கூடாது. மரத்தினாலான சிலுவையை மட்டும் நடலாம். மறுபடியும் அந்த இடத்தைப் பயன்படுத்தும் விதத்தில் மரச்சிலுவையையும் ஒரு வருடத்திற்குப் பின் அகற்றிவிட வேண்டும் என்று முடிவு எடுத்தோம்.

முடிவுப்படி நான் தொடர்ந்து ஞாயிற்றுக் கிழமைகளில் கல்லறை பற்றிய முழு வளர்ச்சிச் சங்கத்தின் முடிவை அறிவித்தேன். குளச்சலில் சின்ன ஆண்டவருடன் தங்கியபோதும் கல்லறை உடைப்பு பற்றி நான் அவரிடம் எதுவும் கூறவில்லை. கூறினால் அவர், ‘இது உணர்வுப் பூர்வமான விசயம்... அவசரப்படாதீர்கள்... இடம் வாங்குவதற்கு முயற்சி செய்யுங்கள்’ என்று சொல்வார். அப்படிச் சொன்னபின் அவரை மீறிச் செய்வது நன்றாய் இருக்காது என்று நினைத்தேன். வலக்கை செய்யும் நல்லதை இடக்கை அறியக்கூடாது என்பதுதானே கிறிஸ்தவ வழிமுறை. நல்ல காரியத்தைச் சொல்லாமல் செய்வதுதான் ஆன்மீகம் என்று நான் நம்பினேன். எனவே அவரிடம் இது பற்றி எதுவும் கூறவில்லை.

தங்களது சொந்தங்களின் கல்லறைகளை யாரும் அகற்றவில்லை. எனவே முழு வளர்ச்சி சங்கத்தின் முடிவுப்படி நான்காம் வாரம் திருப்பலி முடிந்ததும் அனைவரும் கல்லறைக்குச் சென்று அனைத்துக் கல்லறைகளையும் இடித்துச் சமப்படுத்திவிட்டோம்.

அதன் பின்புதான் பிரச்சினையே ஆரம்பமானது. அவ்வூரைச் சேர்ந்த பணக்காரர் ஒருவர் வெளியூரில் வசித்தார். அவரது குடும்பக் கல்லறை ஒன்றும் இடிக்கப்பட்டது. ‘எங்கள் கல்லறையை எப்படி உடைக்கலாம்? கல்லறையை உடைப்பதற்குச் சாமியார் யார்? அவருக்கு அதிகாரம் இருக்கிறதா? ஆயரிடம் அனுமதி பெற்றாரா?’ மிகவும் கோபப்பட்ட அவர், முதன்மைக் குருவிடம் முறையிட்டார் (ஆயர் அவர்கள் வெளிநாடு சென்றிருந்தார்கள்). மறைமாவட்ட முதன்மைக் குரு என்னிடம் விளக்கம் கேட்டார். நான், ‘அன்பியங்கள் எடுத்த முடிவு’ என்றேன்.

“கல்லறைப் பிரச்சினை உணர்வு பூர்வமானது. மிகப்பெரிய பிரச்சினையாக உருவாகலாம். கல்லறையை உடைக்க உங்களுக்கு அதிகாரம் இல்லை. திருச்சபைச் சட்டப்படி பங்குப்பணியாளர் கல்லறையைப் பாதுகாக்க வேண்டும். உங்களுக்கு எதிராகப் பாதிக்கப்பட்டவர் நீதிமன்றத்திற்குச் சென்றால் நீங்கள் தண்டிக்கப்படுவீர்கள். எனவே மறுபடி கல்லறையைக் கட்டிக்கொள்ள

அனுமதியுங்கள். பணக்காரர் இதற்குச் சம்மதித்துவிட்டார்" என்று முதன்மைக் குரு கூறினார்.

சின்ன ஆண்டவரிடம் சொல்லாமல் நான் கல்லறைகளை இடிக்க அனுமதித்தது அவருக்கும் மன வருத்தத்தைக் கொடுத்தது. அவரும் முதன்மைக் குருவின் கருத்தையே பிரதிபலித்தார்.

"கல்லறைகளை இடிக்க வேண்டும் என்பது எனது தனிப்பட்ட முடிவு அல்ல. அன்பியங்களின் முடிவு. முடிவை மாற்ற வேண்டும் என்றால் மக்களிடம்தான் கேட்கவேண்டும்" என்றேன். அவர்களிடம் கேட்பது என்று முடிவு செய்தோம்.

அன்பியப் பிரதிநிதிகள் கூட்டம் ஆரம்பமானது. பணக்காரருக்கு ஆதரவாகப் பக்கத்துக் கிராமப் பணக்காரரும், வழக்குரைஞர் ஒருவரும் கூட்டத்தில் கலந்து கொண்டனர். எனது வாழ்நாளிலேயே மறக்க முடியாத கூட்டமாக அக்கூட்டம் அமைந்தது. அன்பியங்களின் செயல்பாட்டை வெளிப்படுத்தும் கூட்டமாக அமைந்தது. ஏழை மக்களின் சிந்தனைகளை, திறமைகளை, பேச்சாற்றலை, ஒற்றுமையை வெளிப்படுத்திய கூட்டம் அது.

அன்பியப் பிரதிநிதி பேச்சை ஆரம்பித்தார். "எங்க ஊருக்கு ரோடு வசதியில்லை. குடிநீர் வசதியில்லை. தெருவிளக்கு சரியா எரியலை. பெரியவங்க எல்லாரும் வந்திருக்கீங்க. எங்க பிரச்சினைகளுக்கு முடிவு செஞ்சா நல்லா இருக்கும்."

வந்திருந்த பணக்காரருக்கும் வழக்குரைஞருக்கும் என்ன பேசுவது என்று தெரியவில்லை. இருந்தாலும் சமாளித்தபடி வழக்குரைஞர் பேசினார். "நீங்க கேட்ட எல்லாப் பிரச்சினைகளையும் தீர்க்கலாம். ஆனா அதுக்கு முன்னால ஒரு பிரச்சினை இருக்கு. ஊருல உள்ள கல்லறைகளை இடிச்சிருக்கீங்க. இதையே உதாரணமா வச்சி மத்த ஊர்கள்ளயும் கல்லறைகள இடிக்க ஆரம்பிச்சா என்ன ஆகும்? உங்க ஊருல இருக்கிற ஒற்றுமை மத்த ஊருகள்லயும் இருக்குமா? இருக்காது. அப்ப ஊருக்குள்ளே கலகம் ஏற்படும். வெட்டு, குத்து, கொலைன்னு நடக்கும். இதையெல்லாம் யோசிச்சீங்களா?"

"எங்களுக்குப் புதைக்க இடமில்ல. அதனால நாங்க ஒற்றுமையா இருந்து முடிவெடுத்தோம். அடுத்த ஊருல ஒற்றுமை இல்லங்கிறதுனால நாங்க ஒற்றுமையா இருக்கக்கூடாதா? ஒற்றுமையா நாங்க எதையும் செய்யக்கூடாதா?"

"அப்படியில்ல. இப்ப பாருங்க. நீங்க யார் கல்லறையை உடைச்சீங்களோ அவங்க ஊருக்கு எவ்வளவோ நல்லது செஞ்சிருக்காங்க. கோயில்ல உள்ள மின் இணைப்பெல்லாம் அவங்க

போட்டதுதான். மைக்செட் அவங்க வாங்கிக் கொடுத்தது. ஊருக்கு நல்லது செஞ்ச அவங்களுக்கு நீங்க காட்டுற நன்றியா இது?"

"அவருதான் கோயிலுக்குச் செஞ்சாரா? நாங்க செய்யலையா? நாங்க கடலுல காத்துலயும் மழையிலயும் அலையிலயும் போராடி மீன் பிடிச்சி அதுல பத்துல ஒரு பங்கைக் கோயிலுக்குக் கொடுத்தோம். எங்க வருமானத்துல கட்டிய கோயிலு இது. மேடையும் நாங்க கட்டியதுதான். எங்களைப் போல பத்துல ஒரு பங்கு இவரும் கொடுத்திருந்தா இதைப்போல இன்னும் அதிகமாக் கொடுத்திருக்கணும். குறைச்சிக் கொடுத்தவருக்கு ஏன் சலுக காட்டணும்?"

"நாம கிறிஸ்தவங்க. நவம்பர் ரெண்டாம்தேதி கல்லறைத் திருநாள் கொண்டாடுவோம். அன்னைக்கு கல்லறைக்குப்போயி மாலை போட்டு இறந்தவுங்களுக்காக வேண்டுவோம். இப்ப எங்க போறது? எப்படி வேண்டுறது?"

முதலில் செய்த உதவியைக் காட்டிப் பேசிய வழக்குரைஞர் அதில் தோல்வி அடையவே மக்களைத் திசை திருப்பும் நோக்கில் மத உணர்வைத் தூண்டினார்.

"நீங்க செத்துப் போனவங்க கல்லறைக்குப் பூவைக்க முடியலையேன்னு கவலப்படுறீங்க. நாங்களோ இப்ப யாராவது செத்தா எங்க புதைக்கிறதுன்னு தெரியாமக் கவலப்படுறோம். உங்கள யாரும் செத்தவங்களுக்காக வேண்ட வேண்டாம்னு சொல்லலையே. தாராளமா வேண்டுங்க. கல்லறை கட்டணுமா? தாராளமா மனசுல கட்டுங்க. பூ வாங்கி வைக்கணுமா? தாராளமா வீட்டுல உள்ள போட்டாவுல போடுங்க. இல்லைனா அந்தப் பணத்த ஏழைகளுக்குச் செலவிடுங்க. கல்லறை கட்டுங்கன்னு சேசு சொன்னாரா?"

வாதத்தில் வெல்ல முடியாத அவர்கள் பணத்தால் வெல்ல நினைத்தனர்.

"கல்லறைக்கு இடம் இல்லைனா நாங்க பணம் தாரோம். புதுசா நெலம் வாங்கி புதுக் கல்லறைத் தோட்டத்த உருவாக்கலாம்."

அந்த மக்களிடம் ஒரு பழக்கம் இருந்தது. குடும்பங்களிலுள்ள மூத்த பிள்ளை இறந்துவிட்டால் அதைப் புதைத்துவிட்டு கல்லறைக்குக் காவலாகச் சிலர் இரண்டு வாரங்கள் இரவில் தங்குவர். அப்படி இல்லாவிட்டால் மந்திரவாதி இரவில் வந்து பிணத்தைத் தூக்கிச் சென்றுவிடுவான் என்று நம்பினர். அவர்களது நம்பிக்கை இப்போது பதிலாக வந்தது.

அன்பியங்கள் செபக் குழுக்களாக மட்டும் செயல்படாமல் சமூகச் செயல்பாட்டிற்குத் திட்டமிடும் குழுக்களாக இயங்கியதையும், ஏழைகளே முடிவு செய்தால் அவர்கள் எவ்வளவு பெரிய காரியத்தையும் சாதிக்கலாம் என்பதையும், நல்லது செய்யும்போது முடிந்த அளவு மற்றவர்களிடம் சொல்லாமல் செய்வதே சிறந்தது என்பதையும் நான் அறிந்தேன். நல்லது செய்தபின் பிரச்சினை எழுந்தால் அதைச் சந்திக்க இறைவன் சக்தியைக் கொடுப்பார் என்கிற ஆன்மீக அனுபவமும் கிடைத்தது.

கோடிமுனைக் கல்லறையில் ஏற்பட்ட மாற்றமானது, அதன்பின் பக்கத்துக் கிராமங்கள் ஒவ்வொன்றிலும் பரவியது. ஒவ்வொரு கிராமத்திலும் கட்டப்பட்ட கல்லறைகள், நடப்பட்ட கல்லால் ஆன சிலுவைகள் அகற்றப்பட்டு கல்லறைகளில் மரத்தால் ஆன சிலுவைகளை ஓர் ஆண்டு மட்டும் புதைத்த இடத்தில் நட்டுவைக்கும் பழக்கம் பரவியது. எனது வாழ்நாளில் நான் தூண்டுகோலாக இருந்த மிகப்பெரிய ஆன்மீகச் செயல்பாடாக நான் இதை உணர்கிறேன்.



கோடிமுனையில் வார நாட்களில் தினமும் காலை ஆறு மணிக்குத் திருப்பலி இருக்கும். பெண்கள்தான் திருப்பலியில் கலந்துகொள்வர். ஆண்கள் கலந்து கொள்வதில்லை. ஆனால் ஞாயிற்றுக் கிழமைகளில் ஊரில் உள்ள அனைத்து ஆண்களும் பெண்களும் கலந்து கொள்வர். அன்று காலையிலேயே இரண்டு திருப்பலிகள் நடைபெறும்.

ஞாயிறுகளில் யாரும் கடலுக்குச் செல்லாமல் ஓய்வெடுப்பர். அவர்களது ஓய்வு சனிக்கிழமை மாலையே ஆரம்பித்துவிடும். ஞாயிறு மாலை ஓய்வை முடித்துக் கொண்டு மீண்டும் மீன்பிடிக்கச் செல்வர்.

ஞாயிறு மட்டும் ஆண்கள் திருப்பலியில் கலந்துகொள்கின்றனர். மற்ற நாட்களில் வருவதில்லை. என்ன செய்யலாம்? மக்களோடு இணைந்து திட்டமிட்டேன். சனிக்கிழமை மாலையில் ஆண்களுக்கு மட்டும் திருப்பலி நிறைவேற்றினால் என்ன என்ற எண்ணம் என்னில் எழுந்தது. பெண்களுக்கு நன்கு பயிற்சி கொடுத்து அன்று தங்கள் வீடுகளில் உள்ள ஆண்களை மட்டும் கோயிலுக்கு அனுப்பிவையுங்கள் என்று கேட்டுக்கொண்டேன். அவர்களும் சரி என்றனர். அன்று ஆண்கள் மட்டும் கோயிலுக்கு வந்து திருப்பலியில் கலந்து கொண்டனர். மற்றபடி எந்த நேரத்தில் திருப்பலி என்றாலும் மணி அடித்தால் போதும், கோயிலுக்கு வரும் பெண்கள் கூட்டம் அலைமோதும்.

வார நாட்களில் பெண்கள் மட்டுமே திருப்பலிக்கு வருவதால் பெண்கள்தான் வாசகங்களை வாசிப்பர். ஞாயிற்றுக் கிழமைகளில் நற்செய்தி தவிர இரண்டு வாசகங்கள் உண்டு. அந்த இரண்டு வாசகங்களையும் ஆண்களே வாசித்தனர்.

இரண்டு வாசகங்களையும் ஆண்களே ஏன் வாசிக்க வேண்டும்? ஒரு வாசகத்தை ஆணும், ஒரு வாசகத்தைப் பெண்ணும் வாசித்தால் நன்றாக இருக்குமே என்று நினைத்து அப்படியே செய்தேன்.

திருப்பலி முடிந்ததும் ஆண்கள், குறிப்பாகப் பல இளைஞர்கள் என்னிடம் வந்து 'பெண்கள் ஞாயிற்றுக் கிழமைகளில் வாசகம் வாசிக்கக்கூடாது' என்றனர்.

'வார நாட்களில் அவர்கள்தானே வாசிக்கின்றனர். பெண்கள் ஞாயிற்றுக் கிழமைகளில் வாசித்தால் என்ன' என்று கேட்ட நான், 'பெண்கள் வாசகம் வாசிக்கக்கூடாது என்று திருச்சபை சொல்லவில்லையே' என்றேன்.

'பெண்கள் வாசகம் வாசிக்க அனைவருக்கும் முன்பாக வரும்போது அது எங்களுக்குச் சோதனையாக இருக்கிறது' என்றனர்.

'திருமணமான, வயதான பெண்களையே ஞாயிற்றுக்கிழமை வாசிக்கச் சொல்கிறேன்' என்றேன்.

'அதெல்லாம் கூடாது. பெண்கள் வாசகம் வாசிக்கக் கூடாது. வாசித்தால் பீடத்தில் ஏறி வாசிக்கும் பெண்களின் சேலையை உருவி நிர்வாணப் படுத்துவோம்' என்று எச்சரித்துவிட்டுச் சென்றனர்.

நான் அவர்களின் மிரட்டலுக்கு அஞ்சவில்லை. நடந்தவற்றைப் பெண்கள் கூட்டத்தில் சொன்னேன். அவர்கள், 'நாங்கள் கட்டாயம் வாசகம் வாசிப்போம். மிரட்டல்களுக்குப் பயப்படப்போவதில்லை' என்றனர்.

இவ்வளவு கறாராக எச்சரித்த பின்பும் வாசகத்தைப் பெண்கள் வாசிக்கிறார்களே என்ற கோபம் இளைஞர்களிடம் எழுந்தது. அடுத்த ஞாயிறு திருப்பலிக்கான திருவுடையை அணிந்து கொண்டிருந்தேன். அப்போது ஒருவர் வந்து இளைஞர்கள் வாசகப் புத்தகத்தைத் தூக்கிக்கொண்டு சென்றுவிட்டதாகவும், அவர்களே இரண்டு வாசகங்களையும் வாசிக்கத் திட்டமிட்டிருப்பதாகவும் சொன்னார்.

இந்தச் சூழ்நிலையை எப்படி சமாளிப்பது என்று எனக்குத் தெரியவில்லை. அதற்குள் நான் திருவுடையை அணிந்து பலிபீடத்திற்கு வந்துவிட்டேன். திடீரென்று ஓர் எண்ணம் என் மனதில் உதித்தது.

'வாசகப் புத்தகத்தை யாரோ திருடிச் சென்றுவிட்டனர். வாசகப் புத்தகம் இல்லாமல் திருப்பலி நிறைவேற்ற முடியாது' என்று ஒலிபெருக்கியில் கூறிவிட்டு பீடத்திலேயே திருவுடையைக் களைந்துவிட்டு மேடைக்கு வந்துவிட்டேன்.

ஞாயிற்றுக்கிழமை திருப்பலி இருக்காது என்பது கடற்கரைக் கிராமங்களில் நினைத்துக்கூடப் பார்க்க முடியாத ஒன்று. 'யாருடா வாசகப் புத்தகத்தை எடுத்தது?' என்று ஒருசில பெரியவர்கள் இளைஞர்களுக்கு எதிராகப் போர்க்கொடி தூக்கினர். வாசகப்புத்தகம் எடுத்தவனைக் கண்டு அவனை எச்சரித்தனர். புத்தகத்தை அவனிடமிருந்து பெற்று என்னிடம் கொண்டுவந்து கொடுத்து திருப்பலி நிறைவேற்றக் கேட்டுக் கொண்டனர். நான் புன்னகையுடன் சென்று திருப்பலி நிறைவேற்றினேன். அன்றும் ஒரு வாசகத்தைப் பெண் வாசித்தார்.

அடுத்த வாரம் எந்தப் பிரச்சினையும் இல்லாமல் திருப்பலியை நிறைவேற்றினேன். இனி இளைஞர்கள் பிரச்சினை செய்யப்போவதில்லை என்று எண்ணினேன். எனது கணிப்பு தவறாயிற்று. திருப்பலி முடிந்ததும் இளைஞர்கள் கோயிலுக்கு முன்பாக ஒன்றுகூடி பெண்கள் வாசகம் வாசிப்பதற்கு எதிராக உண்ணாவிரதம் இருக்க ஆரம்பித்தனர்.

அவர்கள் ஒலிபெருக்கியில், 'நமது பங்குப் பணியாளர் விவிலியத்துக்கு விரோதமாக நடக்கிறார். அதற்குச் சான்றாக விவிலியத்திலிருந்து ஒரு வாசகத்தை வாசிக்கிறோம். வீடுகளில் உள்ளவர்கள் விவிலியத்தை எடுத்து தூய பவுல் கொரிந்தியருக்கு எழுதிய முதல் திருமுகத்தில் பதினான்காம் அதிகாரத்தில் முப்பத்தி நான்காவது, முப்பத்தி ஐந்தாவது வசனங்களை எடுத்து வாசித்துப் பாருங்கள். 'பெண்கள் சபையில் பேசாமல் அமைதியாக இருக்க வேண்டும். அவர்களுக்குப் பேச அனுமதி இல்லை. மாறாகத் திருச்சட்டம் கூறுவது போல அவர்கள் பணிந்திருக்க வேண்டும். அவர்கள் எதையேனும் அறிய விரும்பினால் அதை வீட்டில் தங்கள் கணவர்களிடம் கேட்டு அறிந்து கொள்ளட்டும். பெண்கள் திருச்சபையில் பேசுவது வெட்கத்திற்குரியதாகும்' என்பதை வாசிப்பீர்கள். இந்தத் திருச்சட்டத்தை நமது பணியாளர் மீறுகிறார். ஆகவே இனிமேல் பெண்கள் யாரும் வாசகம் வாசிக்கக்கூடாது' என்று அறிவித்தனர். அன்று மாலை வரை இதே போன்ற எண்ணங்களை வெளிப்படுத்தும் விதத்தில் பேசினர். நான் எந்த எதிர்ப்பும் தெரிவிக்கவில்லை. குளச்சல் சென்றுவிட்டேன்.

அடுத்த வாரம் திருப்பலியில் பிரச்சினை ஏதும் வருமோ என்று எண்ணினேன். ஒன்றும் வரவில்லை. ஆனால் திருப்பலி

முடிந்ததும் பெண்கள் வாசகம் வாசிப்பதை ஆதரித்துச் சில படித்த இளைஞர்கள் துண்டறிக்கைகளை வினியோகித்தனர். வார நாட்களில் பெண்கள் தானே வாசகம் வாசிக்கின்றனர். வார நாட்களிலும் ஆண்கள் அனைவரும் திருப்பலிக்கு வரத் தயாரா? பெண்கள் எதையேனும் அறிய விரும்பினால் அதை வீட்டில் தங்கள் கணவர்களிடம் கேட்டு அறிந்து கொள்ளட்டும் என்று கடந்த வாரம் விவிலியத்திலிருந்து ஒரு பகுதியை வாசித்தனர். அப்படியானால் பெண்கள் கோயிலுக்கே வரவேண்டாமே. வீட்டில் இருந்துகொண்டு தங்கள் கணவர்களிடமே கேட்டுக்கொள்ளலாமே. ஒரு காலத்தில் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் ஒரு குறிப்பிட்ட மக்களுக்காக எழுதியதைச் சூழலிலிருந்து அந்நியப்படுத்திப் பார்க்கக்கூடாது என்பது போன்ற எண்ணங்களை வெளிப்படுத்தியது அந்தத் துண்டறிக்கை.

பணியாளருக்கு ஆதரவான ஒரு குழு, எதிராக ஒரு குழு என்று இரண்டு குழுக்கள் அங்கே உருவாகிவிட்டன. இவ்வாறு மக்கள் இரண்டுபட நான்தான் காரணமா என்ற வினா என்னில் எழுந்தது.

துண்டறிக்கையானது பெண்கள் வாசகம் வாசிக்கக்கூடாது என்று போராடிய இளைஞர்களைக் கோபம் கொள்ளச் செய்தது. அவர்கள் ஒன்றுசேர்ந்து என்னிடம் கோபத்துடன் வந்தார்கள். ‘சாமி, பெண்கள் வாசகம் வாசிக்கக்கூடாது. நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?’ என்று கேட்டனர்.

திருச்சபை என்ன சொல்கிறதோ அதைத்தான் கேட்பேன் என்று உறுதியாகச் சொன்னேன்.

‘பெண்கள் வாசகம் வாசிக்கலாம் என்றால் நீங்கள் எங்கள் பங்குக்கு வேண்டாம். இப்போதே ஊரிலிருந்து கிளம்பவேண்டும்’ என்றனர்.

இவர்கள் சொல்லி நாம் இங்கிருந்து செல்லவேண்டுமா என்ற எண்ணம் என்னில் எழுந்தது. அப்போது இயேசு தனது சீடர்களை இருவர் இருவராகப் பணிக்கு அனுப்பியபோது சொன்னவை எனக்கு நினைவுக்கு வந்தது. ‘உங்களை எந்த ஊராவது ஏற்றுக் கொள்ளாமலோ உங்களுக்குச் செவிசாய்க்காமலோ போனால் அங்கிருந்து வெளியேறும் பொழுது, உங்கள் கால்களில் படிந்துள்ள தூசியை உதறிவிடுங்கள். இதுவே அவர்களுக்கு எதிரான சான்றாகும்’ *(மாற்கு 6:11).*

இயேசு சொன்னவை எனது நினைவிற்கு வந்ததும் அங்கிருந்து புறப்படுவது என்று முடிவு செய்தேன். பங்கு அனுபவம் பெறுவதற்காக பணியாளர் புஷ்பராஜ் வந்திருந்தார். அவரையும்

அழைத்துக்கொண்டு எங்களது உடைமைகளை எடுத்துக்கொண்டு அப்போது வைத்திருந்த இருசக்கர வாகனத்தில் கோட்டாரில் உள்ள ஆயர் இல்லத்தை நோக்கிப் புறப்பட்டேன்.

செல்லும்போது இடி மின்னலுடன் பலத்த மழை பெய்தது. இருவரும் மழையிலிருந்து எங்களைக் காத்துக்கொள்ள வழியில் ஓரிடத்தில் ஓய்வெடுத்தோம். அதன் பின்பு ஆயர் இல்லம் சென்றோம். அங்கே சென்றால் எங்களுக்கு அதிர்ச்சி காத்திருந்தது.

இடி, மின்னலுடன் கோடிமுனையிலும் மழை பெய்திருக்கிறது. கோயில் கோபுரத்தில் இரு கைகளையும் விரித்திருந்தபடி இருந்த இயேசுவின் திரு இருதய சுரூபத்தின்மீது ஓர் இடிவிழ, சுரூபத்தின் ஒரு பகுதி உடைந்துவிட்டது. நன்கு பணிசெய்த பணியாளரை விரட்டி விட்டதால்தான் இடி விழுந்தது என்று அதற்கு விளக்கம் கொடுக்கப்பட்டது. இந்த விளக்கம் ஊரில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தியது. அடுத்த நிமிடமே ஒரு வாடகைக் காரில் எங்களை மறுபடியும் பங்குக்கு அழைத்துச் செல்லச் சிலர் ஆயர் இல்லம் வந்துவிட்டனர்.

நாங்கள் ஆயர் இல்லம் வந்தபோது கோடிமுனை மக்கள்தான் எங்களை வரவேற்றனர். பெண்களுக்கு வாசகம் வாசிக்க உரிமை இருக்கிறது என்று ஆயர் கூற அதை ஏற்றுக் கொண்டனர். எங்களை அழைத்துக் கொண்டு கோடிமுனைக்கு வந்தனர்.

அதன்பின் எந்தப் பிரச்சினையும் இல்லாமல் திருப்பலி நடந்தது. இந்த நிலையில் புனித வாரம் வந்தது. வழிபாட்டில் எனக்கு உதவிபுரிய இயேசு சபைக் குருமாணவர்களாகிய மைக்கேல்ராஜ், வின்சென்ட் பிரிட்டோ வந்திருந்தனர்.

அன்று பெரிய வெள்ளி. அவ்வூரின் வழக்கப்படி பெரிய வெள்ளி திருச்சடங்குகள் பிற்பகல் மூன்று மணிக்கு ஆரம்பித்து ஐந்து மணிக்கு முடிவடைந்தன. அதன்பின் மாலை ஆறுமணிபோல சிலுவைப்பாதை கோயிலுக்கு வெளியே அமைக்கப்பட்ட மேடையில் ஆரம்பமானது. நானும், எனக்கு உதவி செய்ய வந்திருந்த ஒவ்வொருவரும் சிலுவைப்பாதையின் ஒவ்வொரு தலத்தையும் வழிநடத்துவதாகத் திட்டமிட்டிருந்தோம். சிலுவைப் பாதையில் 4,6,8, போன்ற தலங்கள் பெண்களுக்குச் சாதகமாக இருந்தன. எட்டாவது தலம் நடைபெற்றுக்கொண்டு இருந்தது. பெண்களின் உரிமை பற்றிப் பேசப்பட்டது. பெண்களுக்கு உரிமையா? இதை எப்படி ஏற்பது? அங்கே ஒரு போராட்டம் வெடித்தது.

‘நிறுத்துடா சிலுவைப்பாதையை’ என்று கத்தியபடியே ஒரு கூட்டம் ஒலிபெருக்கியைச் செயலிழக்கச் செய்தது. சிலுவைப்பாதை

வேண்டும் என்று மற்றொரு கூட்டம் போர்க்கொடி தூக்கியது. அந்த இடமே போர்க்களமாக மாறியது. அடித்துக் கொண்டனர். வெட்டிக் கொண்டனர். குத்திக் கொண்டனர்.

எங்களை அடிப்பதற்காக மேடையை நோக்கிச் சிலர் ஓடிவந்தனர். சூழ்நிலையைக் கண்ட பெண்கள் நூற்றுக்கணக்கில் எங்களைச் சுற்றி அரண் போல நின்றுகொண்டு யாரும் எங்களை நெருங்கிவிடாதபடி பாதுகாத்தனர். அவர்களே எங்களை ஒரு வீட்டிற்கு அழைத்துச்சென்று அங்கு பாதுகாத்தனர். பின்பு பாதுகாப்புடன் இரவு குளச்சல் பங்குக்கு அழைத்துச் சென்றனர்.

'ஏன் இந்த நிலை? எதற்காக இந்தப் போராட்டம்? எதை எதையோ சாதித்த இவர்கள் கேவலம் பெண்கள் வாசகம் வாசிப்பதை ஏற்றுக்கொள்ள முடியவில்லையே! இங்கு அன்பியங்கள் இருக்கின்றனவா? அன்பியங்கள் என்ன செய்கின்றன?' அன்று இரவு நான் தூங்கவில்லை. என் மனதில் பல்வேறுவிதமான குழப்பங்கள்.

திடீரென்று மின்னலென ஓர் எண்ணம் தோன்றியது. கல்லறை இடித்தது என்பது மக்கள் எடுத்த முடிவு. அதனால் மிகப்பெரிய பிரச்சினை எழுந்தபோதும் மக்கள் உறுதியுடன் நின்றனர். பெண்கள் வாசகம் வாசிப்பது என்பது நான் எடுத்த முடிவு. அதனால்தான் இந்த முடிவை நிறைவேற்றுவதில் பிரச்சினை எழுந்தது. எந்த முடிவும் மக்களிடமிருந்து வரவேண்டும். அதற்கு வேண்டிய விழிப்புணர்வைக் கொடுக்க வேண்டும். அதுவரை பொறுமையுடன் காத்திருக்க வேண்டும். மக்கள் முடிவெடுக்கும் சூழ்நிலையை ஏற்படுத்துவது ஆன்மீகச் செயல்பாடு. அதுவரை பொறுமையுடன் காத்திருப்பதும் ஆன்மீகம் என்ற விழிப்புணர்வு என்னிடம் எழுந்தது.

இளைஞர்கள் இவ்வளவு அதிகமாக ஆணாதிக்கச் சிந்தனையுடன் இருக்கிறார்களே! அவர்களை என்ன செய்வது என்று நினைத்துப் பார்த்தேன். அவர்கள் மட்டுமா ஆணாதிக்கச் சிந்தனையில் இருக்கிறனர். திருச்சபையும் ஆணாதிக்கச் சிந்தனையில்தானே இருக்கிறது. திருச்சபையில் பெண்கள் இரண்டாம்தர மக்களாகத்தானே கருதப்படுகிறனர். அவர்களுக்குக் குருத்துவம் என்ற திருவருட்சாதனம் மறுக்கப்படுகிறது, அது ஏன்? திருச்சபையே ஆணாதிக்கத்தில் இருக்கும்போது இந்த இளைஞர்களிடம் அதே கருத்து இருப்பது எனக்குப் பெரியதாகப் படவில்லை.

ஆணாதிக்கம் இறைவனுக்கு எதிரானது என்ற அசைக்க முடியாத நம்பிக்கை என்னில் எழுந்தது. திருப்பலிகூட ஆணாதிக்கத்தின் வெளிப்பாடாக இருக்கிறது என்ற எண்ணம் என்னில் உதித்தது. ஆணாதிக்கத்தின் வெளிப்பாடான இந்தத் திருப்பலியில் இறைவன்

# 04

# சமூகத் தலைமையும் சமய நிறுவனமும்

**வறீதையா கான்ஸ்தந்தின்**

இந்து ஆங்கில நாளேட்டில் (டிசம்பர் 2005) பெட்டிச் செய்தியாய் வெளிவந்த உண்மை நிகழ்ச்சி இது:

ஊரெங்கும் மூக்கைப் பிடிக்கும் வீச்சம்! அந்தப் பிணநாற்றம் ஓரிடத்திலிருந்து வருவதாக இல்லாமல் நகர்ந்து பரவிக் கொண்டிருக்கிறது. மக்கள் வீடுகளிலிருந்து வெளியே வந்து, கூரையை அண்ணாந்து பார்க்க, அங்கே ஒரு குரங்கு ஒரு நாய்க்குட்டியின் அழுகிய சடலத்தை இறுக அணைத்துக் கொண்டு அங்குமிங்கும் தாவிக் கொண்டிருக்கிறது. மக்கள் குரங்கைக் கல்லெறிந்து விரட்டப் பார்க்கின்றனர். குரங்கோ பிணத்தைக் கைவிடுவதாக இல்லை. இரண்டு நாட்களுக்கு முன்னர் நலிவுற்றுக் குளிரில் நடுங்கிக் கொண்டிருந்த ஒரு நாய்க்குட்டியை இந்தக் குரங்கு அரவணைத்துக் கொண்டிருந்ததை சிலர் கவனித்திருக்கிறார்கள். அந்த நாய்க்குட்டி இறந்துபோனதும் அதன் உடல் அழுகிச் சிதைந்து கொண்டிருப்பதும் அந்தக் குரங்குக்கு உறைக்கவில்லை.

டிசம்பர் 2005இல் கோட்டார் ஆயர் இல்லத்தில் 'கடற்கரையில் இரட்டை நிர்வாகம்' என்னும் பொருளில் அருட்பணியாளர்களுக்கான கலந்தாய்வு ஏற்பாடு செய்யப்பட்டு, அதில் உரையாற்றுமாறு நானும் அழைக்கப்பட்டிருந்ததன் பின்னணியில் அந்தப் பகிர்வு நிகழ்ச்சி பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தேன். அந்த வேளையில் இந்தக் கதை பொட்டில் அடித்ததுபோல் என்னை உசுப்பியது. தென் திருவிதாங்கூர்க் கடலோரக் கிராமங்களில் இயங்கிவரும் கத்தோலிக்கத் திருச்சபைக்கும் அந்தக் குரங்கின் செய்கைக்கும்

இருக்கமாட்டார் என்று நான் முழுவதுமாக நம்பினேன். அப்படியானால் திருப்பலியை எதற்காக நிறைவேற்ற வேண்டும் என்ற எண்ணமும் எழுந்தது. இந்த எண்ணம் எழுந்ததும் திருப்பலி மிகவும் புனிதமானது என்ற எண்ணம் என்னிடமிருந்து மறைந்தது. அதேநேரத்தில் எழுந்த கேள்விக்குப் பதிலும் கிடைத்தது என்று சொல்லலாம்.

திருச்சபையின் இத்தகைய நிலைப்பாட்டிற்குப் பல்வேறு காரணங்கள் இருக்கலாம். ஆனால் நான் எத்தகைய சிந்தனையில் இருக்கிறேன் என்பதுதான் முக்கியம். நான் ஆணாதிக்கச் சிந்தனையில்லாமல் பெண்களின் குருத்துவத்திற்கு ஆதரவு தரும் நிலையில் திருப்பலி நிறைவேற்ற வேண்டும். அந்தத் திருப்பலியில் இறைவன் நிச்சயம் இருப்பார். ஆனால் ஆணாதிக்கச் சிந்தனையுடன் இருந்து, இறைவனின் ஆவி என்னில் செயல்பட எத்தகைய வாய்ப்பும் கொடுக்காமல் எனது உள்ளத்தை மூடியபடி திருப்பலி நிறைவேற்றினால் அங்கு இறைவன் நிச்சயம் இருக்கமாட்டார் என்று நான் நம்பினேன். இந்த எண்ணத்துடன் நிறைவேற்றும் திருப்பலி இறைவனையே அவமதிப்பதாகும் என்று நம்பினேன்.

பெண்கள் குருத்துவநிலை அடையத் திறந்த மனதுடன் இருக்கிறேன் என்பதன் வெளி அடையாளமாகப் பெண்களுக்கு வழிபாட்டில் முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்று நினைத்தேன். பெண்கள் வாசகம் வாசிப்பது, பீடச் சிறுமிகளாகத் திருப்பலிக்கு உதவுவது, பெரிய வியாழன் அன்று பாதம் கழுவும் சடங்கில் பங்கேற்கச் செய்வது, பெண்களை இறைவார்த்தையை விளக்கச் சொல்வது போன்ற வழிகளில் செயல்பட வேண்டும். இப்பிரச்சினையை மையப்படுத்தி ஒரு நாவல் எழுதவேண்டும். இவ்வாறு செயல்படுவது எனது ஆன்மீகத்தின் அடுத்த கட்டம் என்பதை உணர்ந்தேன்.

மறுநாள் பெரிய சனிக்கிழமை. கோடிமுனைப் பெரியவர்கள் வந்து உயிர்ப்புத் திருப்பலிக்கு அழைத்தனர். பெண்கள்தான் வாசகம் வாசிப்பர் என்ற முடிவுடன் உயிர்ப்புத் திருப்பலி நிறைவேற்றச் சம்மதித்தேன். ■

**மாற்கு ஸ்டீஃபன் சேசு சபைப் பாதிரியார்; முன்னணி தலித்தியச் செயல்பாட்டாளர். மீனவ, தலித் பணித்தளங்களில் நீண்டகால அனுபவம் கொண்டவர். தான் கற்றுக்கொண்ட இறையியலின் வெளிச்சத்தில் தனது வாழ்க்கையையும் களச் செயல்பாட்டு அனுபவங்களையும் அவதானிப்புடன் 'தேடல்', 'இப்படியும்', 'எப்படியும்', 'மறுபடியும்', 'செயலறம்' போன்ற பல தலைப்புகளில் நூல்களாகப் படைத்துள்ளார். இக்கட்டுரை 'பேருவகை' (தமிழினி, சென்னை) என்னும் இவரது சுயவரலாற்று நூலிலிருந்து எடுக்கப்பட்டது.**

அடிப்படையில் என்ன வித்தியாசம் இருக்கிறது என்று சிந்திக்கத் தொடங்கினேன். மூன்று தினங்களுக்கு முன்னால் குளிரில் திணறிய நலிந்த நாய்க்குட்டிக்கு அந்தக் குரங்கு செய்தது நேயமிக்க சேவை; அதையே இன்று செய்ய முயல்வது இயற்கை இகந்த செய்கை அல்லவா?

ஏறத்தாழ 480 வருடங்களுக்கு முன்னால் தென் திருவிதாங்கூர்க் கடற்கரையில் நிலவிய அரசியல், சமூக, பொருளாதாரச் சூழல்கள் தனித்துவமானவை. அன்று கத்தோலிக்கம் தழுவிய கடலோர விளிம்புநிலைச் சமூகங்களைத் திருச்சபை கையாண்ட விதத்தை நியாயப்படுத்தலாம். கடந்த ஐந்து நூற்றாண்டுகளில் பொருளாதாரம், தொழில், கல்வியறிவு என்னும் அத்தனை களங்களும் எவ்வளவோ மாறிவிட்டன. சுதந்திர சிந்தனை, மக்கள் தலைமை, எதிர்காலத்தைத் திட்டமிடும் உரிமை என்பதெல்லாம் குமரி மாவட்டக் கடற்கரைக் குடியிருப்புகளில் எவ்வளவு எதார்த்தம்? ஆன்மீகம், வழிபாட்டுமுறை, நலம் பேணும் மேய்ப்பன் என்னும் மேம்போக்கான பார்வையைக் கடந்து, கடற்கரைச் சமூகங்கள் சொந்தக் காலில் நிற்பதற்கு இத்தனை காலமாகக் கத்தோலிக்கத் திருச்சபை செய்த பங்களிப்பைப் பாரபட்சமற்ற ஆய்வுக்கு உட்படுத்தியாக வேண்டும். கத்தோலிக்கத் திருச்சபையின் தலைமைகள் இது பற்றி சுய பரிசோதனை நடத்த வேண்டும்.

மக்கள் தமது வாழ்க்கைக்குத் தாங்களே பொறுப்பேற்கும் நிலை கத்தோலிக்க நிறுவனத் திருச்சபையைச் சார்ந்து வாழும் கன்னியாகுமரிக் கடற்கரைச் சமூகங்களில் இல்லை. இந்த நிலையில், ஒரு மாற்றத்தை நீண்டகால அடிப்படையில் ஏற்படுத்த முடியுமா என்ற கேள்வி பலகாலமாக விவாதத்திற்கு வைக்கப்பட்டு வருகிறது. டிசம்பர் 2004 சுனாமி அவ்வாறான ஒரு விவாதத்தை மீண்டும் தூண்டியுள்ளது.



*முதலில், கத்தோலிக்கத் திருச்சபையின் இருவேறு தரப்பினரையும் குறிக்கும் 'அருட்பணியாளர்கள்' (Clergy), 'விசுவாசிகள்' (lay man) என்னும் என்னும் சொற்களுக்குப் பொருள் என்னவென்று வினவியபோது, 'Clergy' என்றால் 'விசுவாசிகள் வாழ்வின் அனைத்து அம்சங்களையும் நெறிப்படுத்துவோர்' என்றும் 'lay person' (பொதுநிலையினர்) என்றால் 'அவ்வாறு வழிநடத்தப் படுபவர்' என்றும் பதில் கிடைத்தது.*

திருச்சபையில் பொதுநிலையினர் என்போரின் ‘அழைத்தல்’ (vocation) என்ன? ‘ஆன்மீகத் தலைவர்கள்’ என்னும் பொறுப்பில் இருப்பவர்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவதற்காகப் பயன்படுத்தப் படுகிற ‘lay person’ என்னும் சொல், ‘மக்கள் பாமரர்கள்’ என்பதாகப் புரிந்துகொள்ளப் படுகிறது. அறிவியல், தொழில் நுட்பம், பொறியியல் துறைகளிலும் ‘பாமரன்’ என்னும் சொல் பயன்படுத்தப் படுகிறது. அந்தக் கோணத்தில் பார்த்தால், கற்றறிந்து களத்தில் இருப்போர் மேதைகள் என்றும் ஆன்மீகப் பணியாளர்களைப் பாமரர்கள் என்றும் பொருள் கொண்டால் பிழையில்லை.

திருச்சபையில் யார் பெரியவன் என்கிற வறட்டு வாதத்துக்காக இதைக் குறிப்பிடவில்லை. ஒரு நிறுவனத்தின் (இயக்கத்தின்) வளர்ச்சி என்பது அதன் அத்தனை வளங்களையும் பயன்படுத்திக் கொள்வதில் அடங்கியிருக்கிறது. ‘இருபத்தோராம் நூற்றாண்டில் இந்தியாவை உலகின் மிகப்பெரும் பொருளாதாரச் சக்தியாக்கும் மனிதவளம் இங்கே இருக்கிறது’ என்கிறார் கணினி ஜாம்பவான் பில் கேட்ஸ். ஆனால் ‘இந்தியா 21ஆம் நூற்றாண்டில் வல்லரசாகிவிடும்’ என்கிறார் பில் கிளிண்டன். இந்தியா தனது மனித வளத்தின் சரிபாதியைச் சமையல்கட்டில் புதைத்து வைத்துக் கொண்டு ‘நாடு பின்தங்கிப் போய்விட்டது’ என்று புலம்புகிறது. திருச்சபைகூட, தனது வளத்தின் 99%ஐ மூழ்கடித்துவிட்டு, ‘முன்னேற்றம் இல்லை’ என்று பொருமுகிறது. அனைத்துத் தரப்பினரின் திறன்களையும் பங்கேற்பையும் உட்படுத்த ஏதுவான அரசியல் சூழலை உருவாக்குவது குறித்துத் தீவிரமாய் விவாதிக்க வேண்டிய காலம் வந்திருக்கிறது.

அருட்பணியாளர் கணக்கியல் கற்கவில்லை, அவர் ஊர்க் கணக்கைக் கையாளுகிறார்; நிர்வாகவியல் கற்கவில்லை, கிராமத்தை நிர்வகிக்கிறார்; பொறியியல் கற்கவில்லை, கட்டுமானங்களை மேற்பார்வை செய்கிறார்; உயர்கல்வி பெறவில்லை, பள்ளி - கல்லூரி - தொழில்நுட்ப நிறுவனங்களின் தாளாளராக/மேலாண்மையராக இயங்குகிறார். நடுவண் அரசின் குடிமையியல் நிர்வாகத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படும் திறமைமிக்க சிலர் இதற்கென்றே ஓராண்டு பயிற்சியும் தொடர்ந்து பணிநிலைப் பயிற்சியும் பெறுகின்றனர். ஒரு கடற்கரைக் குடியிருப்பின் நிர்வாகத்தைக் கையாளுவதற்கு ஒரு தனிநபரின் திறமைகள் போதுமானதா? பொதுநிலையினர் என்பவர்கள் உண்மையிலேயே பாமரர்களா, உதவாக்கரைகளா? அவர்களுக்குத் தனித்திறமைகள் இல்லையா? அவர்களின் திறன்கள்/ பங்களிப்பு கிராமத்தின் வளர்ச்சிக்குத் தேவையில்லையா

தாய் தன் குழந்தையின் அழுகுரலை செவியுறும் கணத்தில் பேறுகால வேதனையை மறந்துவிடுகிறாள் (திருச்சபைத் தாய்க்குப் பேறுகால வேதனை என்பது இல்லை; தானாக ஆடுகள் மந்தையில் சேர்ந்து கொள்கின்றன, வாழ்க்கை முழுவதும் கட்டுப்பட்டு நிற்கின்றன). தாய் தன் குருதியைப் பாலாக்கிக் குழந்தைக்கு உயிரமுதம் ஊட்டுகிறாள். தாலாட்டிச் சீராட்டித் தொட்டிலில் இடுகிறாள். நடை பயிற்றுகிறாள்; குழந்தை தத்தித், தவழ்ந்து, தாவி, விழுந்து, எழுந்து, இறுதியில் தன் காலில் நிற்கப் பழகிக் கொள்கிறது. ஒரு நேசமிக்க, பொறுப்புமிக்க தாய் வழிகாட்டுகிறாள், வளர்ச்சிக்கான வாய்ப்புகளை உருவாக்கித் தருவதன் மூலம் குழந்தையை ஆளாக்குகிறாள். சொந்தக்காலில் நிற்பதற்குத் தனது குழந்தையைப் பயிற்றுவிப்பதைவிட முதன்மையான கடமை தாய்க்கு வேறெதுவும் இல்லை.

திருச்சபையைத் தாய் என்றும் அருட்பணியாளர்களை ஞான மேய்ப்பர்கள் என்றும் விசுவாசிகளை 'மந்தை' என்றும் கனிவின் மொழியில் சொல்லும் வழக்கம் உள்ளது. கடலோரச் சமூகங்களுக்குக் கத்தோலிக்கத் திருச்சபை பொறுப்புமிக்க தாயாக இருந்திருக்கிறாளா? ஞான மேய்ப்பர்கள் உலகியல் வாழ்வுக்கு வழிகாட்ட வேண்டியவர்களா? குழந்தைகளை முதிர்ச்சியடைந்த மனிதர்களாக்குவது யார் வேலை?

கட்டுப்படுத்திக் கோலோச்சும் அதிகார அமைப்பாகத் தன்னை நிறுவிக் கொள்வதில் திருச்சபை காட்டிய முனைப்பில் ஒரு சிறு அளவிலாவது மீனவச் சமூகங்களின் வளர்ச்சியின்பால் காட்டவில்லை என்பதே உண்மை. கடற்கரைக் கிராமங்களை சமய நிறுவனம் தொட்டில் குழந்தையாகவே கையாண்டு வந்துள்ளது.

'என் கையைப் பற்றிக் கொள்ளாமல் உன்னால் எழுந்து நடக்க இயலாது' என்று ஒவ்வொரு தாயும் தன் மகவிடம் சொல்லியிருந்தால் மனிதகுலமே முடமாகிப் போயிருக்கும். கத்தோலிக்க மீனவ சமூகங்களுக்கு நடக்கச் சொல்லித் தராதது எவர் குற்றம்?

'நீ பலவீனமானவன், உன்னால் சுயமாக எதையும் சாதிக்க முடியாது. மதத் தலைமையை நிரந்தரமாகச் சார்ந்திருப்பதே உனக்குப் பாதுகாப்பானது' என்று மீனவச் சமூகத்தின் ஆழ்மனத்தில் பொறித்து வைப்பவர்கள் யார்? இந்தச் சமூக-வரலாற்று அவலத்தைச் சரிசெய்வது எப்படி?

கடலோர அமைதி, வளர்ச்சி அமைப்பு (Coastal Peace and Development) நிறுவப்பட்டபோது (1990கள்) அந்த நிறுவனத்தின் ஏற்பாட்டில் எனது ஒருங்கிணைப்பில் நான்கு பேராசிரியர்கள் குமரி மாவட்டக் கடலோர மாணவர்களுக்கு உயர்கல்வி/வேலைவாய்ப்பு

வழிகாட்டல் கருத்தரங்குகளை நடத்திக் கொண்டிருந்தோம். அந்த நேரத்தில் குளச்சல் மறைவட்டத்தைச் சார்ந்த ஒரு கடலோரக் கிராமத்தில் எழுந்த கலவரத்தைக் கையாளுவது பற்றி அருள்வாழ்வு இல்லத்தில் மூத்த அருட்பணியாளர்களும் ஊர்ப் பிரதிநிதிகளும் ஆயரின் தலைமையில் தீவிரமாக விவாதித்துக் கொண்டிருந்தனர். அதில் கலந்துகொள்ள நானும் அழைக்கப் பட்டிருந்தேன்.

'கல்வி, தொழில் வாய்ப்பு, பொருளாதார வளர்ச்சியில் பிரிவினைக் கிறித்தவ நண்பர்களைவிட நாம் அரை நூற்றாண்டு பின்தங்கியிருக்கிறோம்; கடலோரங்களில் நிலைமை இன்னும் பிற்போக்காக இருக்கிறது. கோட்டார் திருச்சபையின் அணுகுமுறை வழமையாக 'திட்டமிட்ட வளர்ச்சியை முன்னிறுத்துவதாக' *(prospective planning/ mission with vision)* இல்லாமல், 'நெருக்கடிகளை மேலாண்மை செய்தல்' *(crisis management)* என்பதாக இருப்பதே இதற்கு முதன்மைக் காரணம். கடற்கரைகளில் தொடரும் தீராத பூசல்களின் வேர்களை இன்றுவரை சமயநிறுவனம் கையாண்டதில்லை, பூசல்களை எப்படியாவது சமாளித்துவிட வேண்டும் என்பதே அதன் இலக்காக இருக்கிறது. அதனால் கடற்கரை என்றதுமே பிரச்சினைகள் மட்டும்தான் கண்முன் நின்று மிரட்டுகின்றன. தொலைநோக்குப் பார்வையோடு அடிப்படைக் கல்வியை நடப்பாக்குவதும், வேலை வாய்ப்புகளை உருவாக்குவதும் நிலைமையை மேம்படுத்தலாம்' என்று அந்த அரங்கில் என் கருத்தை முன்வைத்தேன். இன்றைக்கும் நிலைமை சற்றேனும் மேம்பட்டிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. மறைமாவட்டத் திருச்சபை மக்களுக்கு அறிவு புகட்டும், விழிப்பூட்டும் பணியைச் செய்திருக்கிறதா என்பதுதான் கேள்வி.



2004 சுனாமி கடற்கரையில் பணியாற்றிய சமயப் பணியாளர்களுக்குப் பெரும் சோதனை காலமாக இருந்தது. திருச்சபையின் அதிகாரக் கட்டுக்கோப்பின் அடையாளச் சின்னமாய் இருந்துவந்த சமயப் பணியாளர்கள் சுனாமி நெருக்கடியைச் சமாளிக்கத் திணறித்தான் போனார்கள். தனிமனிதர்களால் எதிர்கொள்ள முடியாத எதிர்பார்ப்புகளை அவர்கள்மீது மக்கள் சுமத்தினர். அது மக்களின் குற்றமல்ல, அவர்களை அவ்வாறுதான் திருச்சபை பழக்கியிருந்தது. பல அருட்பணியாளர்கள் 'இங்கிருந்து தப்பித்தால் போதும்' என்கிற மனநிலைக்கு வந்துவிட்டார்கள். சுனாமி பாதித்த மக்களுக்கு மட்டுமல்ல, இவர்களுக்கும் உளநல ஆற்றுப்படுத்தல் வழங்கவேண்டும் என்று மூத்த அருட்பணியாளர்களிடம் சொல்லிக் கொண்டிருந்தேன்.

கடற்கரை ஊர்களில் நடப்பிலிருந்த பங்குப் பேரவை என்கிற அதிகார அமைப்பு மக்கள் ஆட்சி முறையாகக் காட்டப்பட்டு வந்தாலும் பங்குத்தந்தை என்பவருக்கே இறுதி முடிவு எடுக்கும் (இரத்து அதிகாரத்தைப் பயன்படுத்தும்) உரிமை இருந்ததே ஒழிய, மக்கள் தலைமை என்கிற ஒரு கூட்டு முயற்சி/ பங்கேற்பு வளர்ச்சி அணுகுமுறை செயலளவில் எந்த கிராமத்திலும் இருந்ததில்லை. சுனாமி நெருக்கடியின் அத்தனைச் சுமையும் பங்குப் பணியாளர் என்னும் தனிமனிதரின் மீது தானாகவே வந்து வீழ்ந்ததில் வியப்பில்லை. 'பொறுப்புகளை மக்களிடம் பகிர்ந்து கொடுத்துவிட்டு வழிபாட்டை மட்டும் நாம் கவனித்துக் கொண்டால் என்ன?' என்று சமயப் பணியாளர்களுள் சிலர் வெளிப்படையாகவே பேசலாயினர். நெருக்கடிகளின்போது அருட்பணியாளர் வட்டங்களில் 'மக்கள் தலைமை' கருத்தாக்கம் தீவிரமாய்ப் பேசப்படுவதும், நெருக்கடியின் தீவிரம் குறைந்ததும் அந்தப் பேச்சு காற்றோடு போய்விடுவதுமே வழக்கமாக இருந்துவருகிறது.

ஓர் அமைப்பு 25 வருடங்களாக அப்படியே இருக்கிறது என்றால் அந்த அமைப்பின் ஈரல் கெட்டுப்போய்விட்டது என்று பொருள். இது சமூகவியல் அறிஞர்களின் பார்வை. 2000 ஆண்டுகளாக உலகளாவிய ஒரு நிறுவன அதிகார அமைப்பு அப்படியே இருக்கிறது; அதிகாரம் குறித்த அந்நிறுவனத்தின் பார்வையில் பெரிதான மாற்றங்கள் ஏதும் நிகழ்ந்துவிடவில்லை. தொழில்நுட்பம், தகவல் உள்ளிட்ட அனைத்துத் துறைகளிலும் மாற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றன. சமூகக் கட்டமைப்பிலும் பெரும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. மக்களின் வாழ்வில் செல்வாக்குச் செலுத்தும் ஒரு நிறுவனத்தின் அதிகாரக் கட்டமைப்பில் மட்டும் மாற்றம் தேவைப்படவில்லையா?

'கடலோரக் கிராமங்களைக் கட்டியாள்வது ஆன்மீகப் பணியாளர் என்பது காட்சிப் பிழை. உண்மையில் கடற்கரைக் கிராமங்கள் சில தனிமனிதர்கள்/அரசியல் கட்சித் தொண்டர்களின் கட்டுப்பாட்டில் இருக்கிறது' என்கிறார் பணி.டயனீஷியஸ் (பார்வை: பின்னிணைப்பு 1). மெய்தான். ஆனால், அவ்வாறான பதிலி அதிகார முறையில் ஆன்மீகத் தலைவர்கள் ஏன் கட்டுண்டு கிடக்க வேண்டும்? நிழல் தலைமைகளுக்கு மாற்றாக மக்கள் பிரதிநிதித்துவ அதிகார முறையை நடைமுறைப்படுத்திட அவர்கள் அரசியல் தீர்க்கமுடன் களமிறங்கலாமல்லவா?

'ஞான மேய்ப்பர்கள்' குறித்துக் கடலோரக் கத்தோலிக்க மக்களிடையே நிலவிவரும் பொதுவான பார்வை என்ன?

'சாமியார்கள் எல்லாம் தெரிந்தவர்கள். மக்களின் பிரச்சினைகளுக்கு அவர்களே தீர்வு தரமுடியும்.'

'சாமியார்களிடம் தெய்வீக சக்தி இருக்கிறது, எல்லாம் அவர்களுக்குக் கைகூடும்.'

'சாமியார்களின் சாபம் விழுந்தவர்கள் உருப்பட்டதே இல்லை (குரு நிந்தை குல நாசம்).'

'போப்பு தவறுகளுக்கு அப்பாற்பட்டவர்' *(Papal infalliability)* என்கிற கருத்தியல்கூட அண்மைக் காலம் வரைக் கத்தோலிக்கத் திருச்சபையில் நிலவி வந்ததுதான். அந்தக் கருத்தியல் தகர்க்கப் பட்டுவிட்டது. கத்தோலிக்கப் பாதிரியார் என்பவர் மனிதர்களுக்கு மேலானவர், தவறுகளுக்கு அப்பாற்பட்டவர், அமானுட சக்தி வாய்ந்தவர் என்பதான கருத்துகள் இன்றும் ஒரு தரப்பினரிடையே நிலவுகின்றன. கல்வியும் மேம்பட்ட வாழ்க்கைத்தரமும் கைவந்த சமூகங்களில் இந்த நம்பிக்கைகள் படிப்படியாகத் தகர்ந்து கொண்டிருக்கின்றன என்பதை இங்கு குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

கடற்கரைச் சமூகங்களுக்கு மாற்றுச் சிந்தனைகள் இன்னும் பெரிதாய் வசப்படவில்லை. மிகப்பெரிய நம்பிக்கைகளால் எழுப்பிய கோபுரத்தின் உச்சியில் ஆன்மீகப் பணியாளரை மக்களே அமர வைத்திருக்கிறார்கள். ஒரு பேரிடர், பெரும் நெருக்கடி வருகிறபோது அந்த அமானுட சக்தி பற்றிய மக்களின் நம்பிக்கை அடியோடு தகர்ந்து போகிறது. அந்த ஏமாற்றம் சினமாகவும், புகார்களாகவும் புகையத் தொடங்குகிறது. காலம் இகந்த ஒரு நிறுவனக் கட்டமைப்பின் கோளாறுகள் பங்குப் பணியாளர் என்னும் தனிநபர் மீது சுமத்தப்படுகின்றன. மக்கள் பங்கேற்கும் அதிகார அமைப்பு - கூட்டுப்பொறுப்பு முறை நடப்பில் வந்தால் மக்களுக்குத் தங்கள் பொறுப்புகள் பற்றிய தெளிவு இருக்கும், இதுபோன்ற பழிபோடும் ஆட்டம் தொடர்ந்து அரங்கேறும் வாய்ப்பு இல்லாமல் போகும்.

ஆன்மீகப் பணியாளர்களுக்குப் பணி எல்லைகள் விதிக்கப் பட்டிருக்கின்றன. இந்த எல்லைகளைத் தாண்டி பல பணியாளர்கள் மக்களின் வாழ்வியல் களங்களில் துணிச்சலுடன் இறங்கி சீரிய சேவைகள் ஆற்றியுள்ளனர். கடற்கரையில் பள்ளிக்கூடங்கள் கட்டியதும் ஊருக்குச் சாலைகள் அமைத்ததும் அப்படியான தனிநபர் முனைவுகளேயன்றி மறைமாவட்டத் தலைமை திருச்சபையின் செயல்திட்டமாக/கொள்கை நிலைப்பாடாக வடிவம் கொண்டதில்லை. கடற்கரையில் படித்தவர்களின் எண்ணிக்கை பெருகியதும், ஊருக்கு வருவாய் பெருகியதும் சமய இடையீட்டினால் நேர்ந்தவையல்ல. தனிநபர் வளர்ச்சிக்கோ சமூகத்தின் ஒருங்கிணைந்த வளர்ச்சிக்கோ சமயம் பெரிதாய் உதவிடவில்லை.

மக்களின் வளர்ச்சிப் பிரச்சினைகளுக்கான தீர்வுகள் மக்களிடமிருந்தே வரவேண்டும். அதற்கு மக்கள் தலைமைதான்

தீர்வு. சமூகம் தனது எதிர்காலத்திற்குப் பொறுப்பேற்கும் முதிர்ச்சியை எட்டுவதற்குப் பாதிரியார்கள் ஆற்றியிருக்கும் பங்கு விமர்சனத்துக்கு உரியது. பணி.டயனீஷியஸ் சொல்வது போன்று, 'மனித மாண்பையும் குடிகளின் உரிமைகளையும் நிலைநாட்டுவதற்கான உரிமையுணர்வை ஊட்டும் உன்னதப் பணிதான் அருட்பணியாளரின் பணி' (பார்வை: பின்னிணைப்பு 1) இந்தப் பணியில் கத்தோலிக்கத் திருச்சபை செயல் ரீதியாகத் தடம் பதிக்கவில்லை.

**மக்கள் பங்கேற்பு என்னும் மைய இழை**

பெல்ஜியம் பணியாளர் அமரர் ஜேம்ஸ் தொம்பர் கோட்டார் மறைமாவட்டத்தில் ஆற்றிய சீர்திருத்தப் பணிகள் ஏராளம். கோட்டார் சமூக சேவைச் சங்கத்தின் முதல் இயக்குநராகப் பணியேற்பதற்கு முன்னரும் பின்னரும் அவருடைய பணிகளில் ஒரு தேர்ந்த, தெளிவான அணுகுமுறை இருந்தது; வளர்ச்சியில் மக்களைப் பங்காளி ஆக்குதல் என்பதே அந்த அணுகுமுறை. பொருந்திய தொழில்நுட்பத்தின் பிதாமகர் என்று கன்னியாகுமரி மக்கள் கொண்டாடும் மற்றோர் பணியாளர் பியர் ஜிலேயிடமும் இந்த அணுகுமுறை இருந்தது கவனிக்கத் தகுந்தது. திறந்த மணல்வெளிக் கடற்கரையில் கரையிறங்குவதற்கு ஏதுவான வெளிப்பொருத்து இயந்திரப் படகுகளை வடிவமைத்துப் பரவலாக்கிய அவரது நீண்ட பயணத்தில் பாரம்பரிய மீனவர்களின் இயல்பான கடல் திறன்களை உள்வாங்கும் சூட்சுமம் இருந்தது. தொம்பர் - ஜிலே இரட்டையரின் சீர்திருத்த அணுகுமுறைக்கு கோட்டார் திருச்சபையின் ஒத்துழைப்பும் ஆதரவும் இல்லாமல் போயிருந்தால் மறைமாவட்டம் இன்று சாதித்திருக்கும் வளர்ச்சி கைகூடாமல் போயிருக்கும்.

பாமரத்தனமும் வறுமையும் புரையோடிக் கிடந்த கன்னியாகுமரி இலத்தீன் கத்தோலிக்கச் சமூகங்களின் அரை நூற்றாண்டுக்கு முந்தைய சூழலில் சீர்திருத்த அணுகுமுறைகளை மக்களுக்குக் கற்றுக்கொடுத்து மாற்றுப்பாதை காட்டுவது அத்தனை எளிதாக இருக்கவில்லை.

கடற்கரைப் பள்ளியை நிலை மேம்பாடு செய்த லோப்பஸ் பாதிரியாரின் கசப்பான அனுபவத்தையும் தொம்பர் - ஜிலே இரட்டையர்களின் கடற்கரைப் பணி அனுபவங்களையும் ஒப்பிடத் தோன்றுகிறது. குளச்சலில் பணியாற்றிய காலத்தில் பள்ளிக்கூடம் கட்டுவதற்கு ஊருக்கு அருகில் சொத்து வாங்கிய அந்தப் பாதிரியாருக்கு மக்களின் எதிர்காலம் குறித்த கனவு இருந்தது; மக்கள்மீது நேர்மையான அக்கறையும் இருந்தது. செயல்வீரராய் உருமாறிய இறைவாக்கினர் அவர். புரிந்து கொள்ளாத மக்களோடு

அந்தக் காலத்தில் தனிமனிதனாகப் போராடினார். ஊர் மக்களின் ஒட்டுமொத்த எதிர்ப்பையும் எதிர்கொண்டு துணிச்சலுடன் முன்னேறிய அவரது அணுகுமுறை மக்களை உட்படுத்துகிற முயற்சியாக இருந்திருந்தால் வளர்ச்சி இன்னும் எளிதாய்க் கைகூடியிருக்கும். லோப்பஸ் பாதிரியார் தனது கனவின் பாதையில் பயணித்தார்; அவர் மக்களைக் கனவுகாண வைத்திருக்க வேண்டும்.

உட்படுத்தும் அணுகுமுறை ஒன்றும் அத்தனை எளிதான விஷயமல்ல. தொம்பர்- ஜிலே இரட்டையரும் கரடுமுரடான பாதைகளினூடே பயணித்தவர்களே. கலந்தாய்வு, ஆலோசனைகள், மதிப்பீடு, திட்டமிடல், செயல்படுத்தல் என்பதான இவர்களின் அறிவியல் ரீதியான அணுகுமுறையில் மக்களை உட்படுத்தத் தவறிவிட்டதை ஜிலே ஒரு நூலில் *(Small is difficult)* ஒப்புக் கொண்டுள்ளார். நீண்ட பரிசோதனை முயற்சிகளின் இறுதியில் ஜிலே- கிஃபோர்ட் குழு முட்டம் படகு கட்டும் மையத்தில் வடிவமைத்த 'கோட்டார் கட்', 'ஜிலே கட்' என்னும் இரண்டு வகைக் கண்ணாடியிழைக் கட்டுமரங்களை மீனவர்கள் முற்றாக நிராகரித்துவிட்டிருந்தனர். மீனவர்களைக் கடலில் வழிநடத்தியது அவர்களின் அனுபவ அறிவு. பாரம்பரியமாக அவர்கள் பயன்படுத்திவந்த கட்டுமரத்தைவிட எளிமையான ஒரு படகை வடிவமைப்பது சாத்தியமில்லை என்று ஜிலே புரிந்துகொண்டார்.

**மீனவர் சமூகத் தலைமை**

2004 இந்தியப் பெருங்கடல் சுனாமி, உலக சமுதாயத்தின் கவனத்தை ஆசியக் கடற்கரைச் சமூகங்களின்பால் திருப்பியது; பாரம்பரிய மீனவர் வாழ்வியல் பற்றிய மாயைகளைத் தகர்த்தெறிந்தது. பன்னாட்டு, தேசிய, உள்ளூர் அளவில் மீனவர் எதார்த்தங்களில் விளிம்புநிலை வாழ்க்கை என்னும் பொதுமைத்தன்மை உள்ளது. சுனாமிக்குப் பிறகு அரசுகளும் தொண்டு நிறுவனங்களும் அதனதன் போக்கிலேயே நிவாரணம், மறுவாழ்வு, மறுகட்டமைப்புப் பணிகளைக் கொண்டுசென்றன. தமிழ்நாட்டில் சுனாமிப் பேரிடரால் பாதிக்கப்பட்ட கடலோர மாவட்டங்களில் ஒன்றான கன்னியாகுமரி சற்று மாறுபட்ட கள எதார்த்தங்களை வெளிக்கொணர்ந்தது. அங்கு நானூற்றுக்கு மேற்பட்ட தொண்டு முகமைகள் நிவாரண, மறுவாழ்வுப் பணிகளில் இறங்கியிருந்த வேளையிலும் மீனவ மக்கள் திருச்சபை நிறுவனக் கட்டமைப்பின் தனித்துவமான கட்டுப்பாட்டில் இருந்தது; அந்த ஒற்றை முகமையின் தலையசைப்புக்காக அனைத்துத் தரப்பினரும் காத்துக் கிடந்தது. இதன் காரண- விளைவுகளை ஆய்ந்து பதிவு

*செய்திருந்தோம் (ஆழிப் பேரிடருக்குப் பின், வறீதையா கான்ஸ்தந்தின், ஜோசஃப் ஐஸ்டஸ், காலச்சுவடு பதிப்பகம், 2006).*

*கன்னியாகுமரி மாவட்ட கடற்கரைச் சமூகங்கள் குறித்துப் பல கருத்தாளர்களும் தங்கள் கூர்ந்தறிதலாக முன்வைக்கும் முக்கியமான கருத்து, சமூகத் தலைமை பற்றியதாகும். மீனவர்களின் பின்னடைவுக்கு இனக்குழுத் தலைமை சாத்தியப்படாமல் இருப்பதே முதன்மைக் காரணமாக அவர்களால் சுட்டிக் காட்டப்படுகிறது (பார்வை: பின்னிணைப்பு 1):*

**பணி.கு.அமிர்தராஜ்:** *மக்கள் அதிகார அமைப்பு முறையாக இல்லாத சூழலில் சில தனியுடைமை எதேச்சாதிகாரக் குழுக்களின் கட்டுப்பாட்டில் கடலோரம் வந்துவிடுகிறது... ஏதோ இரண்டு மூன்று வருடங்கள் இருந்துவிட்டுப் போகிற ஒரு தனிநபரின் கையில் கடலோரத்தின் எதிர்காலத்தைத் தூக்கிப்போடுவது பெரிய தவறு... முழுக்க முழுக்க குருக்களைச் சார்ந்திருப்பதுதான் கடலோரத்தின் பெரிய சாபம்.*

**பணி.பெ.டயனீஷியஸ்:** *படிப்படியாக மதம் சாராத நிர்வாக முறைமைகள் கடற்கரையில் வந்துவிட வேண்டும்.*

**பேரா.பெர்னார்ட் சந்திரா:** *வாழ்வியல் முன்னேற்றத்துக்கான ஆதரவு நிலைகளை வளர்த்தெடுக்காத அளவிலான பங்களிப்பைத்தான் கத்தோலிக்கம் தருகிறது. இதன் விளைவாகத் தலைமை உருவாக்கம், குடிமையியல் அதிகாரத்தில் பங்கேற்பு, பல்துறை அமைப்புகள் உருவாக்கம் என்னும் முன்னேற்றக் குறியீடுகளை இன்று மீனவர்களிடம் காண முடியவில்லை...*

**பணி. ஆன்றனி கிளாரட்:** *முற்றாண்மை மாபெரும் சோதனை. அது மாற்றப்பட வேண்டும்... பாதிரியார் தலைமை வழிபாடு செய்யும் மனப்போக்கு மக்கள் வாழ்வியலிலும் தொடர்வதை விடுத்து மக்கள் முதிர்ச்சியான தலைமையில் வளர வாய்ப்புகளைத் தேட வேண்டும்; மற்றவர்கள் வழிவிட வேண்டும்.*

**பணி.எம்.ஜே.எட்வின்:** *மக்கள் நிர்வாக அதிகாரம் மக்கள் கைக்குப் போய்விட்டது என்றால் குருக்கள் எந்தப் பணிக்காக அனுப்பப் பட்டார்களோ அந்தப் பணியை இன்னும் சிறப்பாகச் செய்யலாம்.*

**முனைவர் ஜான்சன் ராஜ்:** *தாங்கள் கடலில் மட்டுமே வல்லவர்கள், நிலத்தில் தங்கள் சமூகப் பிரச்சினைகளை நிர்வகிக்கத் திராணியற்றவர்கள் என்ற நம்பிக்கைக்கு மீனவர்கள் உள்ளாக்கப் பட்டிருக்கிறார்கள்.*

**திரு.எம்.சி.இராயன்:** நானூற்றைம்பது ஆண்டுகால மத வரலாற்றுக்குப் பிறகும்கூட கத்தோலிக்கத் திருச்சபை கடற்கரையில் 50 விழுக்காடு கல்வியை உறுதிசெய்ய முடியவில்லை. மதத்தைக் கடந்து வந்தால்தான் கடலோடிகளுக்கு விடுதலை சாத்தியம்.

**பேரா.பாத்திமா பாபு:** ...எண்ணிக்கைகளின் ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருக்கும் இந்தக் காலத்தில் மீனவர்கள் ஒருங்கிணைந்தாலன்றி அவர்கள் வாழ்வுரிமைக்கு உத்தரவாதம் இருக்காது, நீதி கிடைக்காது. இந்த அரசியலை மீனவர்கள் புரிந்துகொள்ள வேண்டும்.

இந்தக் கருத்துகளின் வெளிச்சத்தில் கன்னியாகுமரி மாவட்டத்தின் பிரிவினைக் கிறிஸ்தவ நாடார் சமூகத்தின் வளர்ச்சியைக் கடலோரக் கத்தோலிக்கச் சமூகத்தின் வளர்ச்சியுடன் ஒப்புமைப்படுத்திப் பார்க்கத் தோன்றுகிறது. கடற்கரைச் சமூகத்தில் கத்தோலிக்கத்தின் இருப்பானது கட்டுக்கோப்பு அரசியலாகவும் நாடார் சமூகத்தில் பிரிவினைக் கிறித்தவத்தின் இருப்பானது பங்கேற்பு (உட்படுத்தும்) அரசியலாகவும் நீடித்து வருகிறது. தலைமை ஏற்கும் வாய்ப்பு மறுக்கப்பட்ட சூழல்தான் மீனவர்களின் பின்னடைவுக்கு மூலகாரணம் ஆகும்.

மீனவரிடையே தலைமைகள் உருவாவதற்குத் தடையாய் இருக்கும் மற்றோர் அம்சம் ஆதிவாசிகளிடம் காணப்படும் இனக்குழு மனப்பாங்கு. ‘நானும் ஒரு மன்னன் என்பதான மகத்துவ உணர்வு பழங்குடி மனிதனிடம் நீடிக்கிறது’ என்கிறார் பணி.எட்வின். ‘ஒவ்வொரு மீனவனும் ஒரு தலைவனின் தகுதியனைத்தும் தனக்கு இருப்பதாய்ப் பாவித்துக் கொள்ளுகிறான். மற்றொருவனின் தலைமையை அவன் எளிதில் ஏற்றுக்கொண்டு விடுவதில்லை’ என்கிறார் பேரா.பாத்திமா பாபு.

இனக்குழுத் தலைமை உருவாக்கத்திற்கு மற்றொரு பெருந்தடை திரைப்படக் கவர்ச்சி அரசியல். குமரி மாவட்டக் கடலோரக் கத்தோலிக்கக் குடியிருப்பிலுள்ள பல வீடுகளில் ஒருகாலத்தில் வீட்டின் தலைவாசலில் ஒரு திரைப்பட நடிகரின் படமிருக்கும்; வீதிதோறும் இரசிகர் மன்றங்கள் இருக்கும்; திரையுலக மகா புருஷர்கள் பெயரில் கட்சிக் கொடிக்கம்பங்கள் நிற்கும். அடிமட்டத்தில் கிடந்த பிற விளிம்புச் சமூகங்கள் எவ்வளவோ மாறிவிட்டன. மீனவ இளைஞர்கள் இன்னும் திரைப்பட நடிகர்களின் கவர்ச்சியில் கட்டுண்டு கிடக்கின்றனர்.

நிறுவனங்களின் ஊடுருவலும் கடற்கரை சமூகத் தலைமை உருவாக்கத்துக்குப் புதிய அச்சுறுத்தல்களை ஏற்படுத்தியுள்ளன.

மழைக் காளான்போல் முளைத்துப் பரவி வரும் இவ்வமைப்புகள் கிராமத்தில் படிப்படியாக மக்களிடையே வேரூன்றிய அடிப்படைச் சமூகம் (அண்டைச் சமூகம்) என்னும் பங்கேற்பு முனைவைக் கலைத்துப் போட்டது. ஊருக்குள் நுழைந்த தொண்டு நிறுவனங்கள் தங்கள் இருப்பை உறுதிப்படுத்திக் கொள்ளும் ஒற்றை இலக்குடன் தத்தம் போக்கில் சுய உதவிக்குழுக்களை அங்கு உருவாக்கின. மக்களைச் சுயசார்பின் தடத்தில் வழிநடத்துவதற்குப் பதிலாக 'இருபதுபேர் சேர்ந்துவிட்டால் வங்கிக்கடன் பெறலாம்' என்பதான உடனடி நிவாரணியாகக் குறுகிப்போயின. வெளியிலிருந்து நிதியுதவி பெறும் தொண்டு நிறுவனங்கள் இனக்குழு சமூகத்துக்குத் தலைமையேற்க முடியுமா? அவர்களின் உரிமைக்கான போராட்டத்தைத் தலைமையேற்று நடத்த முடியுமா? சமூகத் தலைமைக்குத் தொண்டு நிறுவனங்கள் மாற்றாக முடியுமா? விளிம்பு மக்கள் தங்கள் தலைமையை உருவாக்குவதற்குப் பெரும்பான்மையான தொண்டு நிறுவனங்கள் துணையாக இல்லை, தடையாகவே இருக்கின்றன. ஆழிப் பேரிடர் நிவாரண- மறுகட்டமைப்புக் கட்டங்களில் இது தெளிவாக வெளிப்பட்டது.

சமூகத் தலைமை உருவாக்கம் படிப்படியாக நிகழவேண்டிய ஒன்று. வேட்டைச் சமூகங்களின் காலத்திலிருந்து இன்றுவரை சமூகத் தலைமைகளின் உருவாக்கமும் பல்வேறு நிலைகளைத் தாண்டி வந்திருக்கிறது. சமகால இனக்குழு சமூகங்கள் சாதித்தது போன்ற வேகமான வளர்ச்சி குமரி மாவட்ட மீனவ இனக்குழுச் சமூகத்துக்குக் கைகூடவில்லை. இதன் காரணங்கள் விரிவாக ஆய்வு செய்யப்பட வேண்டியவை.

திருவனந்தபுரம் இலத்தீன் கத்தோலிக்கப் பேராயர் 2006இல் ஒரு தொலைக்காட்சிப் பேட்டியில் 'திருச்சபையில் சர்வாதிகாரமும் (dictatorship) இல்லை, மக்களதிகாரமும் (democracy) இல்லை, இறை அதிகாரமே (theocracy) நிலவுகிறது' எனக் குறிப்பிட்டிருந்தார். இறையதிகாரத்தின் பிரதிநிதிகளாகத் திருச்சபையில் விளங்குபவர்கள் சமயப் பணியாளர்களே. மக்கள் வாழ்வியலைக் கட்டுப்படுத்தும் நடவடிக்கைகளில் மக்கள் முடிவு எடுப்பதற்கும் கருத்துச் சொல்வதற்கும் இறையதிகாரத் திருச்சபையில் வாய்ப்பில்லை. பிரிவினைக் கிறித்தவச் சபையினரின் வளர்ச்சியும் கடலோரக் கத்தோலிக்கரின் பின்னடைவும் மக்களதிகாரம் சார்ந்த இருவேறுபட்ட அணுகுமுறைகளின் விளைவு என்றே நான் வாதிடுவேன். மற்றொரு மேம்பட்ட அதிகார அமைப்பு உருவாகும் வரை மக்களாட்சி முறையே (மக்கள் அதிகார அமைப்பு) சிறந்தது என்க.

ஜனநாயகத்துக்குக் குறைவான எந்த அதிகார முறையும்- அது ஆன்மீகத்தின் பெயரிலாயினும் - பண்பாட்டுப் பின்னடைவுதான் *(cultural regression)*.

மக்கள் தலைமையேற்கும் சமூகத்தில் மக்களே மைய விசையாக இருப்பார்கள், அவர்களே முடிவுகள் எடுப்பார்கள். அங்கே ஒவ்வொரு தனிநபரின் குரலும் பதிவாகும்; திணிப்பு என்பது இராது. படிப்படியாக அந்தச் சமூகம் வாதாடிச் சாதிக்கும் அரசியல் சக்தியாக வலுப்பெற முடியும்; அங்கு அரசியல் ஆற்றல்படுத்தல் சாத்தியமாகும்.

**பங்குப் பேரவை மக்கள் அதிகார அமைப்பல்ல**

மக்கள் பங்கேற்புக்கும் அரசியல் ஆற்றல்படுத்தலுக்கும் கத்தோலிக்கத் திருச்சபையின் அடித்தளச் சமூகங்களில் *(Basic Christian Community)* உண்மையில் வாய்ப்பு இருக்கிறதா? ஏறத்தாழ 25 ஆண்டுகளுக்கு முன்னர் கோடிமுனைக் கிராமத்தில் வெள்ளோட்டம் பார்க்கப்பட்ட அன்பியம்தான் (அடித்தளக் கிறித்தவச் சமூகம்) பங்குப் பேரவை என்னும் அதிகார அமைப்பாய்ப் பரிணமித்தது. இலத்தீன் அமெரிக்க நாடுகளில் 1960களில் உருவான 'அடித்தளப் பங்குச் சமூக' *(Base-level Ecclesial Communities- BEC)* அமைப்பின் தொடர்ச்சியாக 1970களில் மணிலாவில் (ஃபிலிப்பைன்ஸ்) 'கிறித்தவ சமூக அமைப்பு' *(Christian Community Programme)* வெற்றிகரமாகச் செயல்பட்டு வந்தது. இவ்விரண்டு அமைப்புகளின் தழுவலாக 1977- 1982 காலகட்டத்தில் 'அடித்தள மக்கள் குழு' கோடிமுனையில் தோற்றம் கொண்டது. கோடிமுனை வகைமாதிரியைத் தழுவி, திருவனந்தபுரம் இலத்தீன் மறைமாவட்டமும், பிறகு கோட்டார் மறைமாவட்டமும் அடித்தளக் கிறித்தவச் சமூகங்களை *(Basic Christian Communities-BCC)* நிறுவிக் கொண்டன. கோடிமுனை 'அடித்தள மக்கள் குழு'வைப் பொறுத்தவரை, சாதாரணர்களின் நலனை வெளிப்படுத்தல் என்பதுதான் அதன் அடிப்படைக் கருத்தியலாகும். ஆனால், 'அன்பியம்' என்றழைக்கப்படும் இன்றைய அடிப்படைக் கிறித்தவச் சமூகங்கள் 'காணிக்கைப் பவனிக்கு ஆள் பிடிக்கும் கூட்டமாக, வரி பிரித்துக் கொடுக்கும் கூட்டமாகத் திரிந்து போனதாக' பணி. எட்வின் தனது கவலையைப் பதிவு செய்திருக்கிறார் (பார்வை: அத்தியாயம் 2).

பங்குப் பேரவையில் அனைத்து உறுப்பினர்களும் சம உரிமை (அதிகாரம்) கொண்டவர்களல்லர். மக்களால் தேர்ந்தெடுக்கப்படாமலேயே பங்குப் பேரவைக்கு (பதவி வழி)

தலைவராகிவிடும் அருட்பணியாளர், கேள்விக்கு அப்பாற்பட்ட அதிகாரம் பெற்றவராகிறார்; நடப்பிலுள்ள விதிமுறைகளின்படி, பங்குப் பேரவை என்பது அவருக்கு ஆலோசனை வழங்கும் அமைப்பேயன்றி முடிவெடுக்கும் அதிகாரம் கொண்டதல்ல; பங்குப் பேரவைத் தலைவருக்கு நிராகரிக்கும் அதிகாரம் ஆயரால் வழங்கப்பட்டுள்ளது. பங்குப் பேரவைக்கு அதன் தலைவர் நியமிக்கும் மூன்று உறுப்பினர்களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களுக்கு இணையான உரிமை கொண்டவர்கள். இவ்வாறு அடிப்படைச் சட்ட விதிகளில் கோளாறு கொண்ட நிர்வாக முறையில் மக்கள் அதிகார முறைமைக்கு இடமேது? பொதுநிலையினரின் மனித வளங்களை உட்படுத்தும் அரசியல் சூழல் *(political space)* இப்போதைய பங்குப் பேரவை நிர்வாக அமைப்பில் இல்லை. அதனால் இதை மக்கள் அதிகார அமைப்பாகக் கருத இயலாது.

இதற்கு மாற்று மக்கள் கையில்தான் உள்ளது. ■

**கோட்டார் மறைமாவட்டத்தின் ஒரு சேவை அமைப்பான ‘கடலோர அமைதி வளர்ச்சி முகமை’ மறைமாவட்டக் கடலோரப் பங்கு அருட்பணியாளர்களுக்காக நாகர்கோவிலில் டிசம்பர் 20, 2005இல் ‘கடலோரத்தில் இரட்டை நிர்வாகம்’ என்னும் பொருளில் நிகழ்த்திய கருத்தாய்வில் ‘இரட்டை நிர்வாகம்- ஒரு பொதுநிலையினரின் பார்வை’ என்னும் தலைப்பில் வழங்கிய உரையின் திருத்திய வடிவம் (நூல்: அணியம். வறீதையா கான்ஸ்தந்தின், தமிழினி, 2007).**

## பின்னிணைப்பு 1

*சுனாமி மறுகட்டுமானக் காலத்தில் கன்னியாகுமரி மாவட்டக் கடற்கரைச் சமூகங்களின் எதிர்காலம் குறித்துப் பல்வேறு ஆளுமைகளுடன் 2005இல் நான் நிகழ்த்தியிருந்த நேர்காணலிலிருந்து இந்நூல் முன்வைக்கும் அடித்தள மக்கள் குழுவாக்கம், மீனவர் தலைமை உள்ளிட்ட விவாதப் பொருளுடன் தொடர்புடைய பகுதிகள் கீழே தொகுத்தளிக்கப்பட்டுள்ளன (முழுமையான நேர்காணலை வாசிக்க: ஆழிப் பேரிடருக்குப் பின். தொகுப்பாசிரியர்கள்: வறீதையா கான்ஸ்தந்தின், ஜோசஃப் ஜஸ்டஸ், காலச்சுவடு பதிப்பகம். 2006).*

## பணி. பெ. டயனீஷியஸ்

**மணக்குடி மீனவர் சங்கம் உள்ளிட்ட மதம் சாராத மீனவர் குழுவாக்க முனைவுகள் கன்னியாகுமரி மாவட்டத்தில் பல காலங்களில் மேற்கொள்ளப்பட்டுள்ளன... ஆனால் அனைத்தும் காலப்போக்கில் பிசுபிசுத்துப் போய்விட்டன. மக்களை**

**ஆற்றல்படுத்தும் முயற்சிகளுக்குத் திருச்சபை எதிர்ச் சக்தியாகச் செயல்படுவதாகப் பார்க்கிறேன்...**

குமரி மாவட்ட மீனவர்கள் எல்லோருக்குமே வளர்ச்சி முகமையாக இருப்பது இலத்தீன் கத்தோலிக்க மறைமாவட்டம்தான். அருட்பணியாளர்கள் திருச்சபை/ வழிபாடு சார்ந்த/ மேய்ப்புப் பணிகளுக்காகப் பயிற்றுவிக்கப்பட்டு ஊர்களுக்கு அனுப்பப்படுகின்றனர். சில குருக்கள் தனிநபர் முயற்சியாகப் பள்ளி, குளம், கிணறுகள் உருவாக்க உழைத்தனர். சான்றாக, லோப்பஸ் என்ற அருட்பணியாளர் முட்டம், கடியப்பட்டணம் கிராமங்களைச் சாலை போட்டு இணைத்தார். அரசு உதவியையும் மக்கள் பங்களிப்பையும் (கூறு, குத்தகை வரிப்பணம்) கொண்டு கடியப்பட்டணம் தெருக்களில் சாலைகள் அமைத்தார்; முட்டத்தில் நடுநிலைப் பள்ளி, குளச்சலில் உயர்நிலைப் பள்ளி என்று கடன் வாங்கித் துணிந்து செய்தார். இனயம்புத்தன்துறைக் கிராமத்தில் அவர் இரண்டாவது முறையாக 1967இல் போனபோது சொந்தமாக நிலம் வாங்கி வீடு கட்டும் வழக்கத்தை அங்கு அறிமுகம் செய்தார். அங்குப் பஞ்சாயத்துத் தலைவர் பதவியில் இருந்துகொண்டு, வீட்டுக்கு ஐந்து சென்ட் வீதம் வழங்கினார். அவரைத் தொடர்ந்து நானும் அத்திட்டத்தை அங்கு செயல்படுத்தினேன். கோட்டார் சமூக சேவை சங்கம் (கேஎஸ்எஸ்எஸ்) சிவந்த மண்ணில் (முட்டம்) '15 சென்ட் திட்டத்தை' அறிமுகம் செய்தது. 1963இல் கோட்டார் சமூக சேவை சங்கம் நிறுவப்பட்ட பிறகு, பெல்ஜியத்திலிருந்து வந்த கானன் ஃப்ரான்சிஸ் கூட்டா என்னும் ஆய்வாளர் கன்னியாகுமரி மாவட்டத்தின் மீது நடத்திய விரிவான ஆய்வின் அடிப்படையில் புதிய திட்டங்கள் பல அறிமுகப்படுத்தப்பட்டன. கேஎஸ்எஸ்எஸ்-இன் பணிகளிலும் பார்வைகளிலும் திருப்பங்கள் வரலாயின.

இன்னும் குருக்களின் பிடியிலேதான் கடற்கரை இருந்து கொண்டிருக்கிறது. பங்கு சாமியார் ஊர்த் தலைவர் ஆகிவிடுவது ஓர் இயல்பான நிகழ்வாக நடந்துவிடுகிறது. பங்குக்கும் ஊருக்கும் வேறுபாடு இல்லாமல் போய்விடுகிறது. வந்துசேரும் ஒரு குரு ஊருக்குத் தலைவர் ஆகிறார்; கடற்கரைச் சமூகம் ஒரு முகமில்லாத சமூகம். இந்தச் சிக்கலான நிலை இன்னும் நீடிக்கிறது. ஊருக்குத் தலைமையில்லை, நிழல் தலைவர்கள் தங்கள் பங்குக் குருவைப் பொம்மை போல ஆட்டிவைக்கிறார்கள். இந்த இரட்டை நிலை ஒரு பெரிய பிரச்சினை. இன்று அரசியல் கட்சித் தொண்டரே

கடற்கரைக் கிராமத்தைத் திரை மறைவில் ஆளுகிறார். இப்போது வெளியுலகத்தோடு நம் மக்களின் தொடர்பு அதிகரித்திருக்கிறது; பழைய கட்டுப்பாடுகள் உடைந்துபோயின...

**ஐந்நூறு ஆண்டுகளாகக் கத்தோலிக்கத் திருச்சபை கன்னியாகுமரிக் கடற்கரையில் நிர்வாகம் நடத்தி வருகிறது. திருச்சபையின் நிர்வாக நேர்த்தியை அதன் தலைமைகள் சிலாகித்ததுண்டு. ஆழிப்பேரிடரில் பாதிக்கப்பட்ட கடற்கரைச் சமூகங்கள் இன்றைக்கு திக்குத் தெரியாமல் திணறி நிற்கின்றன. நமது நிர்வாக முறைமைகளில் ஏதோ கோளாறு உள்ளது. அம்மக்களின் வாழ்வியல் தேவைகளை நிறைவேற்றுவதற்கான அடிப்படைக் கட்டுமானங்கள் நம்மிடம் இல்லை...**

திருச்சபை ஒரேயொரு வளர்ச்சி முகமைதான். அரசு, அரசு சாரா நிறுவனங்கள், அரசியல் கட்சிகள் யாவும் மக்களுடன் புழங்குகின்றன. இன்று நாம் காணுகின்ற தோல்வி இந்த அத்தனை முகமைகளின் ஒட்டுமொத்தத் தோல்வியைப் பிரதிபலிக்கிறது. பங்குக் குரு என்பவர் ஒரு வளர்ச்சி முகமையாகவோ *(development agency)* குடிமை நிர்வாகத் தலைமையாகவோ *(civil administrative head)* கடற்கரையில் நியமிக்கப்படவில்லை. என்னைப் பொறுத்தவரை, மதம் சாராக் கிராமத்தின் நிர்வாகம் தெய்வீக வார்த்தைப் பிரயோகங்களில் கையாளப்படுவது *(secular village handled in sacred terminology)* ஆரோக்கியமானது அல்ல.

படிப்படியாக மதம் சாராத நிர்வாக முறைமைகள் கடற்கரையில் வந்துவிட வேண்டும். கலெக்டர் சாமியாரைத் தேடாமல், தல நிர்வாக அமைப்புகளை நேரடியாக அணுகும் நிலை உருவாக வேண்டும். அபரிமிதமான, தளத்தைத் தாண்டிய திருச்சபை நிர்வாகம் ஒரு தடையே. மதம் சாரா முகமைகளின் முனைவுகள் இதனால்தான் தோற்றுப்போயின.

ஊர் நிர்வாகத்தை மக்கள் ஏற்பது என்பது குருக்கள் மக்களைவிட்டு விலகி ஓடுவது அல்ல; குருக்கள் மக்களின் நிர்வாகக் களத்திலிருந்து படிப்படியாக விலகி அவர்களில் வாழ்வுக் களத்தில் புகுவதற்கு இந்த அணுகுமுறை சிறந்த வாய்ப்பை ஏற்படுத்தும். இணை நிர்வாகம் கூடாது. வாழ்தலுக்கு அர்த்தம் சேர்ப்பதுதான் திருச்சபையின் முழுமுதற்பணி. கிணறு வெட்டுவது திருச்சபையின் முதன்மைப் பணி அல்ல; வீடு கட்டுவதற்கு நிலம் இல்லையென்றால் அரசு நிலம் வாங்கித் தரவேண்டும். திருச்சபை தனது போர்வையை அனைத்தின் மீதும் போர்த்தியிருக்கிறது. அன்றைய காலகட்டத்தில் அத்தகைய ஓர் அணுகுமுறை தேவையாய் இருந்திருக்கக்கூடும். உரிமை உணர்வை மக்களுக்கு உருப்படியாகக் கொடுத்து மக்கள் அரசிடம் கேட்டுப் போராட விழிப்பூட்டியிருக்க வேண்டும். இந்த

உணர்வூட்டும் பணிதான் அருட்பணிச் சமூகத்தின் முதற்கடமை. நிலம் கொடுப்பதோ பணம் கொடுப்பதோ திருச்சபைத் தலைவர்களின் பணியல்ல. திருச்சபையின் பணி ஆன்மீகத் தலைமை ஏற்பதே!

ஒருவன் முழுமையான மனிதனாய் மாற உதவுவதே ஆன்மீகத் தலைமை. பொதுநிலையினரின் அழைத்தல் (*lay vocation*) என்பது உலகியல் தளங்களில் முழுமையாகப் புகுவது. அது இன்று குறைவுபட்டுப் போய்விட்டது.

நாங்கள் குட்டிக் கலெக்டர்கள் போல. ஆனால் சிலவேளை மக்கள் குட்டிக் கலெக்டர்களையும் தூக்கியெறிந்து விடுவார்கள்!

## பணி. (முனைவர்) ஜெ.ரொசாரியோ நற்சீசன்

**சுனாமியால் பாதிக்கப்பட்ட தமிழ் நாட்டின் பிற கடற்கரைகளான நாகப்பட்டினம், கடலூர் மாவட்டக் கடற்கரை மக்களின் குரல் பத்திரிகைகளிலும் காட்சி ஊடகங்களிலும் தெளிவாக ஒலிக்கிறது. கத்தோலிக்க சமய நிறுவனத்தின் தொடர்பு ஏதுமில்லாத அந்தச் சமூகங்களால் தங்கள் நிலைப்பாட்டைத் தெளிவுபடுத்தவும், அரசிடம் தங்கள் தேவைகளை வலியுறுத்தவும் முடிகிறது. ஆனால் இந்தியாவின் மிகச்சிறந்த மீனவர்களும், ஐந்து நூற்றாண்டுகளாக நிறுவனக் கத்தோலிக்கத்தினால் பயிற்றுவிக்கப் பட்டவர்கள் என்று சொல்லப்படுபவர்களுமான கன்னியாகுமரி மீனவர்களின் குரல் எங்கும் ஒலிக்கக் கேட்கவில்லை. அவர்கள் உண்மையில் குரலிழந்து போனார்களா, அல்லது அக்குரலுக்கான தளத்தை உருவாக்க நிறுவன சமயம் தவறிவிட்டதா?**

நல்ல கேள்வி; நம்மைப் பற்றி நன்றாக அறிந்துகொள்ளத் தூண்டும் கேள்வி. சுனாமிக்குப் பிறகு நாகப்பட்டினம், கடலூர் மீனவர் பலரை நான் சந்தித்திருக்கிறேன். கத்தோலிக்க நிர்வாகிகள் போல யாரும் அவர்களுக்கு வழிகாட்டுவதில்லை. அவர்களே முன்வந்து தங்கள் பிரச்சினைகளை வெளிப்படுத்துகிறார்கள். அங்குள்ள இளைஞர்களில் சிலர் ஒரு பயிலரங்குக்கு வந்தபொழுது மீனவச் சமூகம் குறித்து அவர்கள் கொண்டிருந்த அறிவையும் தொலைநோக்கு உணர்வையும் குமரி மாவட்ட மீனவர்களோடு ஒப்பிட்டுப் பார்த்தபோது எனக்கே வெட்கமாக இருந்தது. இதற்கெல்லாம் காரணம், பங்குக் குருக்களே எல்லாம் செய்வார்கள் என்னும் தவறான எண்ணம் குமரி மாவட்ட மீனவர்கள் மத்தியில் நீடித்துவருவதுதான்.

இதற்கு மருந்தாக, இங்குள்ள மீனவ இளைஞர்களுக்கும் இளம் பெண்களுக்கும் பரந்த உலக அறிவை அளிக்க வேண்டும். உரிமைகளுக்காகக் குரலெழுப்பும் பிற மக்களை அவர்கள் அறியவர

வேண்டும். தங்கள் குறைகளை எடுத்துச் சொல்லப் பயிற்றுவிக்கப் படவேண்டும். சுருக்கமாகச் சொல்லப்போனால், அவர்களுக்கு அறிவார்ந்த சுதந்திரம் சாத்தியமாக வேண்டும்.

**கோட்டார் மறைமாவட்டத் திருச்சபையில் முப்பதுக்கு மேற்பட்ட மேய்ப்புப்பணி ஆணைக்குழுக்கள் இயங்கிவருவதாகச் சொல்லப்பட்டது. இவை தவிர, கடற்கரை உள்ளிட்ட எல்லாப் பங்குகளிலும் பங்குப் பேரவை என்னும் நிர்வாக அமைப்பு வெற்றிகரமாய்ச் செயல்பட்டு வந்ததாகவும் சொல்லப்பட்டது. ஆனால் சுனாமி நிவாரண, மறுகட்டுமானக் கட்டங்களில் அடிப்படைத் தகவலான மக்கள்தொகைப் புள்ளிவிவரங்களைக்கூட அரசுக்குக் கொடுக்க முடியவில்லை...**

அது வருத்தத்துக்குரிய விசயம். இதற்கு அடிப்படைக் காரணம், நமது பங்கு நிர்வாகம் அறிவியல் ரீதியாகச் சீரமைக்கப்பட்டு நடத்தப்படுவதில்லை. ஒரு காலத்தில் பங்குத் தந்தையர்களே சமூகத்தின் பணத்தைக் கையில் வைத்திருப்பவர்களாகவும் நிவாரணப் பணிகளை அவ்வப்போது நடத்துபவர்களாகவும் பொதுமக்களைத் தங்கள் பிள்ளைகள் என்ற முறையில்- தங்களைப் பெற்றோர்களாகவும் மக்களைக் குழந்தைகளாகவும் கருதிப் பங்கு நிர்வாகத்தை நடத்திவந்ததாலும், பொதுநிலையினர் *(laity)* பங்கு நிர்வாகத்தில் அதிகம் அக்கறை காட்டாமலிருந்ததாலும் எவ்வளவு மக்கள் ஒரு பங்கில் இருக்கிறார்கள் என்று அறியாமலே பங்கு நிர்வாகத்தை நம் குருக்கள் நடத்திவந்தார்கள். கனிவு காட்டும் அன்பு மட்டும் போதும் என்றிருந்தது அவர்கள் மனப்பாங்கு. நம் பங்குகளிலும் அதற்கேற்ற நிலை இன்னும் உருவாகவில்லை. திருமுழுக்குச் சான்றிதழ் அளிப்பதிலிருந்து மரண விவரங்கள் குறிப்பது வரை எல்லாமே பங்குக்குரு என்னும் தனிநபர் செய்துவந்ததால் இந்த நிலை ஏற்பட்டது என்று நினைக்கிறேன்.

## பேராசிரியர் பெர்னார்ட் சந்திரா.

**தமிழகக் கடற்கரையின் மூன்று தென்மாவட்டங்களிலும் கடற்கரை மக்களின் வாழ்வில் கோலோச்சி வருகின்ற நிறுவன சமயம் அந்த மக்களின் வளர்ச்சிக்குத் தந்துள்ள பங்களிப்பை மதிப்பீடு செய்யுங்கள்...**

எழுத்துக் கல்வி புகட்டும் பொருட்டு பள்ளிகள் நிறுவுவதற்கு ஏற்பாடு செய்தது உட்பட, மக்கள் உதவியுடன் செய்த சில காரியங்களைத் தவிர வேறெதுவும் கத்தோலிக்கம் செய்ததற்கு ஆதாரமில்லை. வாழ்வியலை உயர்த்துவதற்கு எந்த மக்களோடு ஒரு நிறுவனம் பணி செய்கிறதோ, அது அவர்கள் நிலைத்த அதிகாரம் பெறுவதற்கு உகந்த அடிப்படைகளை ஏற்படுத்திக் கொடுத்துவிட்டு,

அந்த மக்கள் சுயசார்பை அடையும்போது தன்னைப் பின்னுக்குக் கொண்டுபோய்விடுவது தவிர்க்க முடியாதது. ஆனால் கத்தோலிக்கம் தன் அதிகாரம் நிலைபெறுவதில் காட்டும் சிரத்தையை வேறெதிலும் பார்க்க முடியாது. வாழ்வியல் முன்னேற்றத்திற்கான ஆதரவுநிலைகளை வளர்த்தெடுக்காத அளவிலான பங்களிப்பைத்தான் கத்தோலிக்கம் தந்துவருகிறது. இதன் விளைவாகத் தலைமை உருவாக்கம், குடிமையியல் அதிகாரத்தில் பங்கேற்பு, பல்துறை அமைப்புகள் உருவாக்கம் என்னும் வளர்ச்சிக் குறியீடுகளை இன்னும் மீனவ மக்கள் காணமுடியவில்லை. கடல்சார் மக்கள் தங்கள் வாழ்வில் ஆதிக்கம் செலுத்த அனுமதித்திருக்கும்

**கடற்கரைச் சமூகங்களைத் தலைமையேற்று நடத்திவருவோருக்குச் சுனாமி மறுகட்டுமானச் சூழலில் என்ன செய்தி சொல்ல விரும்புகிறீர்கள்?**

மதத் தலைமை சார்ந்த வாழ்வியல் செயல்பாடுகள் அனைத்தையும் நான் நிராகரிக்கிறேன்; அது பின்னுக்குப் போகவேண்டும்; குறைபாடுகள் உள்ளதாயினும் ஊர்த் தலைமைகள், இனச் சமூகத் தலைமைகள் உருவாக வேண்டும். அதனதன் நிறைகுறைகளோடு இத்தலைமைகள் பரிணாம வளர்ச்சி பெறவேண்டும். ...இத்தகைய தலைமை உருவாக்கத்துக்குக் கற்றவர்கள் முயலவேண்டும்.

## பணி. ஆன்றனி கிளாரட்

**ஆழிப்பேரிடரைத் தொடர்ந்து, கன்னியாகுமரி மாவட்டக் கடற்கரைகளில் மக்கள் தலைமை குறித்துக் காரசாரமான விவாதங்கள் முளைத்திருப்பது பற்றி...**

பேரிடர்த் தருணங்களில், நிரந்தரமானவையாகக் கருதப்படும் அனைத்திலும், ஏன் புனிதமானவையாகக் கருதப்படும் அமைப்புகள், மதம், கடவுள் நம்பிக்கை என, எல்லாமே பொருள் இழந்தது போல உணரப்படுவது இயல்புதான். சுனாமி கடலோரக் கிராமங்களில் நிர்வாகம்/தலைமை குறித்துப் பலத்த அதிர்வுகளை உருவாக்கியிருப்பது மறுக்க முடியாத நிஜம். சுனாமிச் சூழல் 'விமர்சனத்துக்கு உள்ளாகாத தலைமை' என்பதை இல்லை என்றாக்கியிருக்கிறது.

............

பங்குப் பேரவை என்கின்ற, ஆலயத்தை மையமாகக் கொண்ட, ஆன்மீக வழிபாட்டினை அதிகார மையத்தில் அமர்த்திய, ஓரளவுக்கு ஜனநாயகமான திருச்சபை அமைப்பு கடலோரக் கிராம நிர்வாகங்களைக் கட்டியாள வேண்டுமா என்ற கேள்வி

பல மட்டங்களிலும் அழுத்தம் ஏற்படுத்தியிருக்கின்ற விவாதப் பொருளாகும்.

சில குறிப்பிட்ட குடும்பங்களின் பாரம்பரிய ஆட்சி அதிகாரத்தினைத் தகர்த்தெறியக் காரணமாக இருந்த இவ்வமைப்பு அனைவருக்கும் அதிகார வாய்ப்பைத் திறந்துவிட்ட புரட்சிப் பலகணியாகப் பலராலும் சுட்டிக்காட்டப் படுகிறது. ஓட்டு அரசியலைக் கொண்டு ஆதாயம் அடையத் துடிக்கும் பலருக்கும் இது எட்டிக்காய் என்பது அவர்தம் பேட்டிகளிலே வெளியாகும் உண்மையாகும்.

கடலோரச் சமூகங்களில் திருச்சபை உள்ளிட்ட எந்த அமைப்பையும் சார்ந்திராத தலைமையமைப்பே எனது முன்மொழிதல். ஜனநாயக அணுகுமுறையிலிருந்து பின்வாங்கல் என்னும் பேச்சுக்கே இடமில்லை. திருச்சபையின் சமூகப் பணிகள் மற்ற தொண்டு நிறுவனங்களிடையே இன்னொன்று என அமைதலே நன்று. முற்றாண்மை மாபெரும் சோதனை. அது மாற்றப்பட வேண்டும். கோயிலில் பாதிரியாரைத் தலைமையாகக் கொண்டு வழிபாடு நடத்தும் மனப்போக்கு மக்கள் வாழ்வியலிலும் தொடர்வதை விடுத்து, மக்கள் பக்குவமான, முதிர்ச்சியான தலைமையில் வளர வாய்ப்புகளைத் தேடவேண்டும்; மற்றவர்கள் அதற்கு வழிவிட வேண்டும்.

# வறீதையா கான்ஸ்தந்தின் படைப்புகள்

கையறுநதி (தன்வரலாறு). கடல்வெளி (கிண்டில்) & அச்சுப்பதிப்பு: ஆகஸ்ட் 2022.

கடலம்மா பேசுறங் கண்ணு! கடல்வெளி (கிண்டில்), 2020; விரிவுபடுத்திய மறுபதிப்பு: 2022.

பெருந்துறை வலசை (தமிழகக் கடற்கரைப் பயணக் குறிப்புகள்). கடல்வெளி (கிண்டில்), 2020.

கடல் பழகுதல். கடல்வெளி, 2022; கிண்டில், 2020.

கன்னியாகுமரி முக்குவர் (பண்பாட்டியல் வரலாறு). கடல்வெளி (கிண்டில்), 2020; ஆதி பதிப்பகம், 2022.

திணைவெளி. கிண்டில், 2020. கடல்வெளி, 2022.

கடற்கோள் காலம், எதிர் வெளியீடு, 2019; விரிவுபடுத்திய மறுபதிப்பு: கடல்வெளி (கிண்டில்), 2020; அச்சு: செப்டம்பர், 2022.

கஜாப் புயலும் காவிரி டெல்டாவும். பாரதி புத்தகாலயம், 2019.

1000 கடல்மைல். தடாகம் கடல்வெளி, 2018.

மூதாய் மரம். தடாகம், 2017.

The Sea Tribes under Siege. mainSpring - Kadalveli. 2017; விரிவுபடுத்திய மறுபதிப்பு: கடல்வெளி (கிண்டில்), 2020; அச்சு: செப்டம்பர் 2022.

வேளம். கடல்வெளி, 2017; கிண்டில், 2020; உயிர், 2021.

வர்ளக்கெட்டு, எதிர் வெளியீடு. 2014; சீரமைத்த மறுபதிப்பு: கடல்வெளி 2022.

பழவேற்காடு முதல் நீரோடி வரை. எதிர் வெளியீடு. 2014; 2019; சீரமைத்த 2ஆவது பதிப்பு: கடல்வெளி 2022.

மன்னார் கண்ணீர்க் கடல். தடாகம் 2014, 2015; கடல்வெளி (கிண்டில்) 2020.

நெத்திலிக் கருவாட்டின் வாசனை. உயிர் எழுத்து. 2014.

## தொகுப்புகள்:

கடல் சொன்ன கதைகள் (சிறுகதைகள்). பாரதி புத்தகாலயம். 2019; விரிவுபடுத்திய மறுபதிப்பு, 2022. கடல்வெளி (கிண்டில்), 2020.

கடலின் தொப்புள் கொடி (வறீதையாவின் படைப்புகள் மீதான பிரதிவினைகள்). உயிர் எழுத்து – நெய்தல்வெளி, 2013; கடல்வெளி (கிண்டில்), 2020.

எக்கர் (வேதசகாயகுமாரின் உரைகள்). உயிர் எழுத்து – நெய்தல் வெளி. 2013; கடல்வெளி (அச்சு மற்றும் கிண்டிலில்), 2020.

விளிம்பு, மையம், மொழி (இணை தொகுப்பாளர்: வேதசகாயகுமார்). ஆழி நெய்தல் வெளி, 2011; கடல்வெளி (கிண்டில்), 2020.

கொந்தளிக்கும் கடல். ஆழி – நெய்தல் வெளி. 2011; கடல்வெளி (கிண்டில்), 2020.

ஆழிப் பேரிடருக்குப் பின் (இணை தொகுப்பாளர்: ஜோசப் ஜஸ்டஸ்). காலச்சுவடு. 2006.

## மொழிபெயர்ப்பு

நினைவலைகள் (பால் தாமஸ்) (மொழிபெயர்ப்பு). நெய்தல்வெளி, 2013; எதிர் வெளியீடு, 2015; கடல்வெளி (கிண்டில்), 2020.

## மொழிபெயர்ப்பான ஆசிரியரின் நூல்:

The Gordian knot. Translated by S. Vincent. mainSpring. 2018; கடல்வெளி (கிண்டில்), 2020.

## ஆவணப் படம்

இனயம் கரண்ட்ஸ் http:/youtu.be/watch?nesOBON6vcl




## கையறுநதி

(தன்வரலாற்றுப் புனைவு)

**வறீதையா கான்ஸ்தந்தின்**

### மறுமொழி

சம்பவங்கள், கதை மாந்தர்கள் என்று காட்சிகளையும் கதாபாத்திரங்களையும் இணைத்து கற்பனை செய்துகூட பார்க்க முடியாத ஒன்றை நமக்கு அணுக்கமானதாக ஆசிரியர் காட்டுகிறார். மனதின் பல்வேறு செயல்பாடுகளை விளக்க அவர் பயன்படுத்தும் சொற்கள் அலாதியானவை.

**- வ.கீதா**

நம் புலன்களுக்கு புலப்படாத பாரங்களும், பாரம் சுமப்பவர்களுடையதுமான வாழ்வு. மிகப்பெரிய மானுட நேசக்காரனின் இருதயத்திலிருந்து புறப்படுகின்ற, மனம் பற்றிய ஆயிரம் உபாயங்கள் கொண்ட பாதைகளின் திறப்பு.

**- மீரான் மைதீன்**

உண்மைகளை மிகையின்றி, எதையும் மறைக்காமல் நம்பகத் தன்மையோடு சொல்கிறது. அதுவே மனதைப் பலமாகப் பிசைகிறது.

**- சாந்தமூர்த்தி ஜெகநாதன்**

இது ஜூலியாவின் அப்பாவுடைய கதை மட்டுமல்ல; ஜூலியா போன்றவர்களைப் பொருட்படுத்தாத நம் ஒவ்வொருக்குமான கதை. உளவியல் சிக்கல்கள் குறித்த நம் கற்பிதங்களும் மன ஒதுக்கமும் எவ்வளவு குரூரமானவை என்கிற உண் மை நம் மனசாட்சியை உலுக்குகிறது.

**- பிருந்தா சீனிவாசன்**

The compelling narrative of a man transcending his anguish and transforming it into a resuscitating recovery therapy not only for himself but also for all the loved ones of the several Julias around us, most of whom society neither recognizes nor understands.

**- Fatima Babu**

படித்து முடிக்கையில் நான் ஒரு உளவியல் ஆற்றுப்படுத்துதல் அமர்வில் இருந்து வெளியில் வந்தது போல இருந்தது. அந்த அமர்வு எனக்கு மிக அவசியமாகவும் இருந்தது.

**- அங்கவை யாழிசை (+2 மாணவி)**

**அடித்தள மக்களின் அரசியலாக்கமும்
பொருளாதார விடுதலையும்...**

இன்றைக்கு அதிகார அமைப்பு எப்படி இயங்குகிறது? கொஞ்சம் பேரைப் பெரும்பணக்காரர்களாய் ஆக்குவது; மற்றவர்கள் எல்லோரையும் பிச்சைக்காரர்களாக்குவது. அந்த பெரும் பணக்காரர்களின் அடிமைகளாக்குவது. உலகம் ஒரு திறந்தவெளி சிறைச்சாலை ஆகியிருக்கிறது. (இதற்கு மாற்றாக) அடித்தள மக்கள் குழுவாக்கத்தின் அடிப்படையில் மதங்களைத் தாண்டிய அரசியல் அமைப்பு முறையை உலக சமூகத்திற்கு முன்மொழிகிறோம்.

பணம் அதிகார முக்கியத்துவம் கொண்டது. மக்களுக்கான சந்தைப் பொருளாதாரம் (கீழிருந்து சந்தைப்படுத்துதல்) பெரும்பாலான சமூகச் சிக்கல்களுக்குத் தீர்வு தரும். பெருவணிக முதலாளிகளின் கையில் குவிகிற இலாபம் மக்கள் கையில் வரத் தொடங்கினால் கணக்கில்லாத நிதி சேரும். அடித்தளக் குழுக்களின் நுகர்வுத் தேவைகளை உள்சுழற்சிப் பொருளாதார முறையில் மக்களே கையாண்டால் இலாபமாகத் தேறும் பெருநிதியை மக்களின் வளர்ச்சித் தேவைகளுக்குப் பயன்படுத்தலாம், மற்றவர்களுக்கும் நிதிக்கொடை வழங்கலாம். நிதியும் வணிகமும் உள்ளே வந்தால் எல்லோரும் உள்ளே வந்துவிடுவார்கள்.

**அருட்பணி.எம்.ஜெ.எட்வின்**

ஓவியம்: இளஞ்செழியன் | அட்டை: காலேஷா சலீம்







கட்டுரைத் தொகுப்பு | ₹ 130